# திருமந்திரம்

# TIRUMANTRAM

ஐந்து, ஆறு தந்திரங்கள்

உரையுடன்



உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

குரு முதல்வர்

அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

# மகரத் தலைநாட் குருபூசை விழாமலர்

தாது — தை — அசுவதி

16 — 1 — 97

வெளியீடு எண் : 436

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## ஐந்து, ஆறு - தந்திரங்கள்

## பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

சீர் வளர் சீர்

சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளாட்சிக் காலத்தில் வெளியிடப்பெற்றது.



திருவாவடுதுறை ஆதீனம்

1997

உ
சிவமயம்

# உள்ளுறை

[ எண் : பக்க எண். ]



## ஐந்தாம் தந்திரம்

## ஆறாம் தந்திரம்

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— *தவத்திரு மாதவச் சிவஞான முனிவர்*



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

குருமுதல்வர்

அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

சிவானந்தப் பேறு : தை - அசுவதி

உ

சிவமயம்

# பதிப்புரை

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே

— திருமந்திரம்

உலகில் உள்ள எல்லா நெறியினர்க்கும் பொதுப் பட்டும் சித்தாந்த சைவ நெறியினர்குச் சிறப்பாகவும் விளங்கும் ஒரு நூல் திருமந்திரம். வாய்த்துள்ள இப் பிறப்பிலேயே மறுபிறப்பு இல்லாதபடி மாண்புறுத்துக் கொள்ள மக்களுக்கு வழிகாட்டிச் சிறப்பது. சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாவதாகத் திகழ்வது. நம் தமிழில் சாத்திர முதல் நூலாகவும் ஆகம நூலாகவும் யோகநூலாகவும் போற்றப்பெறும் மேன்மையினது.

மக்களாவார் யாவர்க்கும் உரியதாகிய இத் திருமந்திரத் திருநூலினைப் பொருளுணர்ந்து போற்றிப் பயன்கொள்ள ஆதீனம் சென்ற நாற்பது ஆண்டு களுக்கு மேலாக ஆற்றிவரும் பணிகள் பல. அவற்றுள் ஒன்று 'பஞ்சாட்சர தீப உரை' எனும் சம்பிரதாய உரைநூல் வெளியீடு, திருமந்திர நூல் முழுவதற்கும் 1957 – ஆம் ஆண்டிலிருந்து இவ்வுரை நூல்கள் பகுதி பகுதியாக வெளிவந்தன.

ஆதீனத்து இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதான மாக ஞானபீடத்து எழுந்தருளிச் செந்தமிழ் வழக்கும் சிவநெறி வழக்கும் பாதுகாத்துத் திருவருள் ஞானச் செங்கோல் செலுத்தும் **சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** திருவுளப்பாங்கின் வண்ணம் இவ்வுரை நூல் மறு பதிப்புகள் பெற்று வருகின்றன.

மூன்றும் பதிப்பினவாக வரும் இவ்வரிசையில், திருமந்திரம் ஐந்து ஆறு தந்திரங்களுக்கு ஆதீனமகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் ஐயா அவர்கள் இயற்றிய பஞ்சாட்சரதீப உரைநூல் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி இவ்வாண்டு ஆதீனம் குரு முதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் மகரத் தலைநாள் குருபூசை விழா மலராக வெளிவருகின்றது. அன்பர்கள் இந்நூலினைப் பெற்று ஓதி உணர்ந்து பயன் எய்தி இன்புறுவார்களாக.

எளியேனையும் ஆதீன அருட்பணிகளில் ஆட்படுத்தி அருள் பாலிக்கும் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் பொற்பாத கமலங்களை என்றும் மனம் மொழி மெய்களால் போற்றி வணங்கும் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்.

சரசுவதி மகால் நூல் நிலையம் திருவாவடுதுறை.

**புலவர். பா. மகாலிங்கம்,**
ஆதீனம் நூலகர்.



திருமூலதேவ நாயனர்
சிவானந்தப் பேறு : ஐப்பசி - அசுவதி

சிவமயம்

# திருமந்த்ரக் கருத்து

## ஐந்தாந் தந்திரம்

திருமூலதேவநாயனார் அருளியுள்ள திருமந்திரம் சமுதாயநல – சாத்திர – தோத்திரக் கதம்பம். அவர் அருள்நோக்கம் பொதுமக்களுக்குப் பரலோக வழியைக் காட்டினால் மட்டும் திருந்தமாட்டார்கள். அவர்களுடைய இன்றைய தேவையும், இன்றைய எதிர்நோக்கும் ஈடேற வழிசொல்லுவதொன்றாலேயே அவர்களுடைய மனக்கருத்தை வசப்படுத்த முடியும். தலைவலிக்கிற மனிதன் எல்லாரிலும் இருப்பான்; வயிறு வலிக்கிற மனிதன் இருப்பான்; நரம்பு தளர்ந்த மனிதன் இருப்பான்; பகையுள்ள மனிதன் இருப்பான்; வறுமைப் பட்டாளம் இருக்கும்; புளியேப்பக்காரனும் பசியேப்பக்காரனும் பேராசைக்காரனும் இருப்பார்கள்.

அவர்கள் அனைவருக்கும் அவரவர்களுக்குத் தக்க உபாயங்களை உபதேசித்தால், அதிலதில் மயங்கிய – பயன்கண்ட அவர்கள், பயன்தரும் ஆசாரியனிடமும் அவனால் காட்டப்பட்ட கடவுளினிடமும் உறுதியான பக்தியை அடைவார்கள். பக்திக் கலையைத் தோத்திர வடிவமாகப் பின்னர் வளர்ப்போம். பக்திக்கலையோடு தத்துவக்கலையையும் இணைப்போம். பக்திக்கலையும் தத்துவக்கலையும் சேர இணைந்த ஒன்றுதான் யோகக்

கலை, யோகக்கலை சிறக்க மந்திர செபமும், யந்திரத் தியானமும் மிகவும் சிறந்த சாதனங்கள் என்று எண்ணி நாலாவது தந்திரத்தில் அதனை மிகமிக விளக்கமாகத் தெரிவித்தார். பின்னர் மெய்ப்பொருட்கலையாகிய சிவ ஞானக்கலை அனுபவத்திற்கே உரியதாக இருப்பதால் அக்கலையைத் தாமே உடனிருந்து. இருந்து காட்டினல் மக்கள் இருந்தறிய மாட்டார்கள் ; ஈடேறமாட்டார்கள் என்பதை யுணர்ந்து தத்துவக் கலையை இருந்து பார்த்த பலவேறு கொள்கைகளை, அதாவது சமயபேதங் களையும், அவற்றுள் சிறந்த நெறியையும், அந்நெறி யினைக் கடைப்பிடித்த நிலை வேறுபாடுகளையும், அவற்றின் இலக்கணங்களையும் இந்த ஐந்தாவது தந்திரத்தில் விளக்குகின்றார். இதுவே இத்தந்திரத்தின் சுருக்கமாகும்,

இத்தந்திரம் இருபது அதிகாரங்களை உடையது. நூற்றைம்பத்துநான்கு கலிவிருத்தங்களினுல் ஆகிய மந்திரங்களை உடையது. முதலதிகாரம் சுத்தசைவம் ; சுத்தசைவம் என்ற உடனேயே அப்பப்பா ! சைவமே கடுமை ; அதிலும் சுத்தசைவமா ! அது மனிதனல் மேற்கொள்ளத்தக்க எளிமையில் இருக்குமா ? என்று எண்ணத் தோன்றுகிறது.

மனிதனுக்கு, தன் இஷ்டம்போல இன்பம் நுகரவும். எண்ணம்போலத் திரியவும, கட்டுப்பாடின்றிக் காட்டு விலங்குகளைப்போல் தன் இச்சைகளைப்பூர்த்தி செய்து கொள்ளவுந்தான் தோன்றுகிறது. அதில் கட்டுப்பாடு என்ருல் கசப்பாகத்தான் இருக்கிறது. கட்டுப்பாட்டை விதிப்பன சமயங்கள். அதிலும் சிறிது சிந்தனைக்குரிய கட்டுப்பாடு சித்தாந்த சைவத்திலிருககிறது. அதனைக்

கண்டாலே அச்சம் விளையத்தானே செய்யும்; அதனால் மனிதன் அஞ்சத்தான் செய்வான். ஆனால் திருமந்திரத்தில் சுத்தசைவம் என்ன சொல்லுகின்றது தெரியுமா ? பெரிய புரட்சியைச் சொல்லுகிறது. சீர்திருத்தத்தைத் தெரிவிக்கிறது. மகனே ! சடங்குகளிலே இல்லை சைவம் : சம்பிரதாயங்களிலே இல்லை சமயம், தலைவனையும், தன்னையும், தடையையும் அறிந்து தடையின் நீங்கித் தான் தலைவனைச் சார்ந்து வாழ்வதே சைவம் ; இதுவே சுத்தசைவம் என்கின்றது. இதனையே முதல் நான்கு மந்திரங்கள் உணர்த்துகின்றன.

அடுத்தது அசுத்தசைவம். அசுத்தமா ! அதனைப் பற்றி மனித சமுதாயமாகிய நாம் நினைக்கலாமா என்று தோன்றுகிறது. ஐயையோ !! இது அகற்றப் படவேண்டிய ஒன்றாயிற்றே என்றும் தோன்றுகிறது அல்லவா ? அகற்றப்பட வேண்டுவதே. ஏறவிட்ட ஏணி எதற்கு ? ஏறுகின்றவரையில் தேவைதானே ! ஆதலால் அசுத்த சைவத்தைப்பற்றித் தெரிவோம் ; ஆராய்வோம் ; கடைப் பிடிப்போம் ; கடைத்தேறுவோம் ; இதனை ஏணியாகக் கொண்டு உயர்ந்த நிலையை உற்ற பிறகு விட்டுவிடுவோமே !

அசுத்தசைவம் என்ன சொல்லுகிறது ? மனிதமனம் சும்மா இராது. மனிதன் குரங்கிலிருந்து வந்தவனா என்கிறார்கள். அது உண்மையோ பொய்யோ; குரங்குத் தன்மை அவனிடம் இருக்கத்தான் செய்கிறது. அவன் ஒரு கணப்பொழுதும் சும்மா இருக்கமாட்டான். எதையாவது செய்து கொண்டுதானிருக்கிறான். அந்நினைப்பையும் செயலையும் காட்டாற்று வெள்ளம்போலக் கரையின்றி ஓடவிடாமல் கட்டுப்படுத்தி, உயர்ந்த

இடத்தில் தேக்கி நிறுத்தினால், எப்பொழுதும் பயனடையலாம அல்லவா என்றுதான் சொல்கிறது. நினைப்பதைக் கடவுள் சம்பந்தமாக நினை; செய்யுங் காரியங்கள் எல்லாவற்றையும் கடவுள் சம்பந்தமாகவே செய். செய்வன எல்லாம் சரியை. நினைப்பதும் செய்வதும் கலந்தநிலை கிரியை. இவ்விரண்டும் சுத்தசைவமாகிய ஞானநிலைக்கு வாயில்கள; அதனை அடைகிறவரையில் இவற்றில் நில். அப்படி நிற்கின்ற உங்கள் நிலைதான் அசுத்தசைவம் எனகிறது, இந்தப்பகுதியில் நான்கு திருமந்திரங்கள் உள்ளன.

மூன்றாவது அதிகாரம் மார்க்க சைவம்; பட்டங்கள் பெற விரும்புகிறவன் நன்றாக ஆழ்ந்து ஆசிரியனுக்கு அடங்கி, கலாசாலைகளின கட்டுப்பாட்டிற்கு அடங்கிப் படித்துதான் ஆகவேண்டியிருக்கிறது. பதவிகளுக்கு ஆசைப்படுகின்றவன் பகைவன் - நண்பன், ஏழை - பணக்காரன், கூலி - முதலாளி, உறவினன் - அயலான், வைகிறவன் - வாழ்த்துகிறவன் என்ற வேற்றுமை பாராமல், தன் மானத்தையும் கொஞ்சநாளைக்குத் தளர்த்திக்கொண்டு, வீடுவீடாக ஏறியிறங்கி வாக்குச் சீட்டுகளைப் பெறுவதற்காகப் பிரார்த்தனை செய்து கொள்ளத்தான வேண்டியிருக்கிறது.

கட்சியின் கட்டுப் பாட்டிற்காக, ஆடை அணிகளை, கொடிகுடைகளைத் தாங்கவேண்டித் தானிருக்கிறது. அது போல, சுத்த சைவமாகிற பேரின்ப ஞானநிலையை அடைய அசுத்தசைவமாகிய சரியை கிரியைகளிலிருக்க, அடையாளமாகிய விபூதி உருத்திராக்க தாரணம், ஆகம புராண சாஸ்திரப் பயிற்சி இவைகளாகிற சாதனங்களை ஏற்றுப் பழகித்தான் ஆகவேண்டும். ஊர்காவல் வேலை

ஏற்பவன் குல்லா அணியக் கூசலாமா? மன்னனு கின்றவன் மடைடந்தாங்க வெட்கப்படலாமா? சாதன மிலலாமல் சாத்தியம் கைகூடுமா? ஆதலால் மார்க்க சைவத்தில் நின்று முற்கூறிய சாதனங்களைப் பழகு தலே மார்க்க சைவமாம். இது பதினெந திருமந்திரங் களான் உணர்த்தப்பெறுகின்றது.

கடுஞ்சுத்த சைவம்: 'ஊரறிந்த பார்ப்பானுக்குப் பூணூல் எதற்கு? நாடறிந்த ஞானிக்கு வாய்ப்பேச்சு எதற்கு' என்ற பழமொழிக்கேற்பச் சுத்தசைவ நிலையில் சிவஞானியாக விளங்குபவனுக்கு விபூதி உருத்திராக்க தாரணம் முதலான வேடங்களும், சரியை கிரியை யோகங்களாகிற செயல்களும, சிந்தனைகளும் தூங்கு கின்றவன் கையிலேயுள்ள பொருள் நழுவுவதுபோலத் தானே நழுவிவிடும். அப்பொழுது கடுஞ்சுத்தசைவன் உலகஞானம் அனைத்திலும் ஒட்டாபல, சிவபோதக நிலையில செறிந்து விளங்குவான். இதனை ஐந்து திரு மந்திரங்களான் அறிவிப்பதே இப்பகுதி.

சரியை: இது மெய்த்தொண்டு. இதன் இன்றி யமையாமை முன்னரே விளக்கப்பெற்றது. புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டு, பூமாலை புனைந்தேத்தி, புகழ்ந்து பாடி, தலையாரக் கும்பிட்டு, கூத்தும் ஆடி, சங்கரா! சய போற்றி போற்றி என்று தொண்டுபடுதலே சரியையாம். இது மெய்யால் தீமை செய்யாது சிவத் தொடர்புடையனவே செய்தலால் இது சுத்தசைவமாகிய ஞானச்சைவத்திற்கு உயிர் போல்வது. இதனை எட்டுத் திருமந்திரங்களான் உபதேசிக்கின்றார்.

கிரியை: கிரியை என்பதற்குச் செயல் என்பது பொருள். ஆயினும் சிந்தனையோடு கூடியசெயலே

கிரியை எனப்படும். மனிதன் சிந்தனையின்றியும், சில சமயங்களில் செயல் செய்கிறான். ஏதோ போய்க் கொண்டிருக்கின்றோம் : ஏதோ செய்கின்றோம் ; இதற்கும் நினைவுக்கும் இணைப்பு உண்டா என்று எண்ணிப் பார்க்கும்போது நமக்கு நகைப்பு தோன்றுகிறது. அதுபோல இன்றிச் சிந்தனையும் செயலும் இணைந்து இறைத் தொடர்புடையதே கிரியை. இது சிவபூசையாம். சிவபூசையில் தியானம், மந்திரம் இவை இரண்டும் சிறந்த இடம் பெறுகின்றன. பாவனை சித்திக்கிறது. செயலும் நிகழ்கிறது. இவ்வண்ணம் பழக்கமாகிய சரியையின் முதிர்வாய், செயலும் சிந்தனையும் உடனிகழ்வதாய், பாவனையாகிற யோகநெறிக்கு வாயிலாய் விளங்குவது கிரியை எனலாம். இதனை ஆறு திருமந்திரங்களான் அறிவிப்பது இப்பகுதி.

யோகம் : அவனுக்கென்ன ? யோகம் அடிக்கிறது என்கிற வழக்கைக் கேட்கிறோம். யோகம் எப்படி வருகிறது என்பதைச் சிந்திக்கவைப்பதே இப்பகுதி. கூடாத இடத்தைக் கூடாமல், கூடவேண்டிய உயர்ந்த இடத்தைப் பிரியாமல் கூடியிருப்பதாலே யோகம் அடிக்கிறது. நம் பிராணனைக் குண்டலினி என்னும் சத்தியோடு எழுப்பி, மேலே உள்ள உச்சியில் விளங்கும் கடவுளோடு சேரத் தியானித்து, அதற்கு மேல் அதாவது சிரத்திற்கு மேல் பன்னிரண்டு அங்குல அளவில் விளங்கும் உருவற்ற ஒளிப்பிழம்பாகிய பரசிவத்தோடு ஒன்றவைப்பதே யோகமாம். இதன் விரிவும், பயனும், உபாயமும், இலக்கணமும் மூன்றாந் தந்திரத்தில் விளக்கப் பெற்றுள்ளன. அத்தகைய யோகம் எவ்வண்ணம் சுத்தசைவமாகிய ஞானச்சைவத்திற்கு வாயிலாக - அசுத்தசைவமாகிய

சரியை கிரியையாதிச் சிந்தனைச் செயல்களின் பயனாக விளங்குகின்றது என்பதனைப் பத்துத் திருமந்திரங்களான் தெரிவிக்கிறது இப்பகுதி.

ஞானம் : ஞானமாவது அறிவு. இது எதைப்பற்றி நிகழுகிறதோ அதனால் பலவகையாக அழைக்கப் படுகிறது. உயிர்களுக்குள்ள இயற்கையான அறிவு பசு ஞானம். இது உயிர்கள் கண்டதைப் பற்றிக் கண்ட அளவிலே நிற்பதாயும் கற்பனையால் பெருக்கமுற்றும் நிற்பது. நூலறிவு பாசஞானம். இது பல நூல்களைப் படிப்பதால் விளைவது. பசுஞானமானது நூலறிவால் வளர்ந்து படிப்பளவில் நிற்கும்போது பாசஞானம் எனப்படும். சுருங்கக்கூறின் இதனை ஏட்டுச்சுரைக்காய் எனலாம். இவையிரண்டும் கடவுளுணர்ச்சிக்கு வழியாகப் பயன்படுமேயன்றி இதுவே கடவுள் உணர்ச்சி ஆகாது; ஆதலால், திருமூலதேவரால் உணர்த்தப் பெறும் ஞானம் இறைவனைப் பற்றியதாய்ச் சிவானந்த மாகிற இன்பத்தை நுகரச்செய்யும் பரஞானமாகும். இதுவே அறங்களிற் சிறந்தது ; சமயங்களின் முடிந்த சாதனம்; ஞானிகளே மனிதர்களிற் சிறந்தவர். இதனைப் பத்து மந்திரங்களான் உணர்த்துவது இப்பகுதி.

இதுவரை சரியை முதலான நால்வகை நிலைகளையும் உணர்த்திவந்த திருமூலதேவர்க்கு அவற்றின் இலக்கணம் முடிவுபோகாமையின் ஞானத்தைச் சன் மார்க்கம் என்றும். யோகத்தைச் சகமார்க்கம் என்றும். கிரியையைச் சற்புத்திரமார்க்கம் என்றும், சரியையைத் தாசமார்க்கம் என்றும் அதனதன் மறு பெயர்களாலும் அதிகாரப் பெயரமைத்து 9 முதல் 12 வரையுள்ள நான்கு அதிகாரங்களால் உணர்த்துகிறார்.

சரியையாதி நால்வகை நெறிகளிலும் ஒழுகினோர் எய்தும் பயன் சாலோகமாதி நான்கும் ஆதலின் அவற்றை முறையே நான்கதிகாரங்களால் உணர்த்து கிறார். அவற்றுள் சாலோகமாவது இறைவனுக்குச் சமீபத்திலே தங்கியிருக்கும் சரியையாலாவதாம். சாமீபமாவது சரியையின முதிர்வால் விளையும் தியானம் செயல் இரண்டும் கூடிய கிரியையின் விளைவாம். மனிதன் நினைக்க அதுவாகிறான. ஆதலால் சிவபரம் பொருளையே சிவயோகி நினைப்பதால அவ்வுருவையே பதவியாகப் பெறுகிறார். எண்ணியார் எண்ணியாங்கு எய்துப ஆதலின் இவ்வண்ணம் கூறினார். சாயுச்சியம் பரமுத்தி. இது ஞானிகள் எய்தும் முத்திநிலை. இது சிவானந்த சாயுச்சியம எனப்படுவது.

இவ்வகையான பதமுத்திகளையும் பரமுத்தியையும் அடைதற்குரிய மக்களின பரிபாக நிலை. மந்ததரமும் மந்தமும தீவிரமும் தீவிரதரமும் என நால்வகையாம். இந்நான்கும் சத்திநிபாதம் எனவும் வழங்கப்பெறும. சத்திநிபாதம் - சத்தியின் வீழ்ச்சி. அதாவது உயிர்களுக்கு மலபரிபாகம் உண்டாவதற்காகப் பெத்த நிலையில் மலத்திற்கு அனுகூலமாக நின்று நடத்திய திரோதானசத்தி மலபரிபாகம் எய்தியவழி முன்னைப பராசத்தி ரூபமாய் உயிர்களிடத்துப் பதியும. இதுவே சத்தி நிபாதமாம். இந்த நால்வகையான சத்திநிபாதங்களில உயிர்கள் இருக்கும் அநுபவத்தைப் பதினேழாம் அதிகாரம் சத்தி நிபாதம் என்ற பகுதி அறிவிக்கிறது.

தாம் கண்டு அநுபவிக்கிற அநுபவத்தில் உறைத்த பற்று உண்டாக அதனின வேறாகிய சமய நிலைகளில் பற்று குறைந்துவருவது இயற்கைதானே, ஆதலால்

பிறகொள்கைகளில் பற்றுத தளர்கிறது. அது தளரு முறையை அறிவிப்பதே புறச்சமய தூஷணம் என்னும் பகுதி. தூஷணம் என்ரு பசுபோத முனைப்பால் பாசஞானத்தைத் துணைகொண்டு இடும் மதச் சண்டைகள் என்று நாம் எண்ணிவிடக்கூடாது. கற்புடைய பெண்ணொருத்தி தன் கணவனைக் காணுங் கால் பரபுருஷனைக் காண்கின்ருள் இல்லை என்ருல் பரபுருஷ தூஷணம எப்படிப் பட்டதோ அத்தகைத்து புறச்சமய தூஷணம் என்பதும். இதனையுணர்த்துவன இருபது மந்திரங்கள.

நிராகார நிராகாரம் – வடிவின்மை. உயிருள் இறைவன் உணர்வாய்க கலந்துநிற்கும அநுபவ நிலை. இதுவே சமய அநுபவத்தின் முடிந்த அநுபவமாம். இதனை உணர்துவன ஏழு திருமந்திரங்கள்.

இறுதி அதிகாரம் உட்சமயம். உட்சமயம் அகச் சமயங்கள் என்று அழைக்கப்பெறும். அகச்சமயங்கள் ஆறும் சித்தாந்த சைவத்தோடு ஒருபுடை ஒப்பன, ஏகன் அநேகன் இருள் கன்மம் மாயையிரண்டு ஆகிய இநத ஆறு பொருள்களை ஒப்புவன. அகச் சமயங்களில் நிறைவா சித்தாந்தசைவ உண்மையை உணர்த்தின் உணருந்தன்மையராவர். இதனை விரிப்பன பதினாறு திருமந்திரங்கள்.

இவ்வண்ணம் இருபது அதிகாரங்களும் நூற்றைம் பத்து நான்கு மந்திரங்களும், பின்னர் மந்திரத்துக் கூறப்போகும் மெய்ப்பொருள் அறிவிற்குச் சாதனமாய், பொதுவகையில் சமயவேறுபாட்டு இலக்கணங்களை அறிவிப்பதால முன் நானகு தந்திரங்களிலே கூறிய

தியான யோக தந்திர மந்திரங்களுக்கும் பிற்கூறப் போகும் தத்துவானுபவ முறைக்கும் ஓர் இணைப்புப் பாதையாய் இலங்குவது. ஆகவே அடித்தளத்திற்கும் மாடிக்குமாக அமைத்த ஏணி போல்வது எனலாம். இதனால் இத்தந்திரத்திற் கூறப்படும் பொருளின் இன்றி யமையாமை ஓரளவு உணரலாம்.

## ஆறாந் தந்திரம்

திருமந்திரம் பலவேறு ஆகமங்களிலும், யோக சாத்திரங்களிலும், ஞான நூல்களிலும் பரந்து கிடந்த சிவயோக சிவஞான நெறிகளை முறைப்படுத்தி முரண கற்றி, முரண்களுக்குள்ள ஏதுக்காட்டி அமைதிகூறிச் செல்வது. இதனை, தமிழர்கள் வீட்டின்ப நெறியுணர இறைவன் திருமூலர் வாயிலாக உதவிய வரப்பிரசாதம் என்னலாம்.

ஆறும் தந்திரம் சிவகுருதரிசனம் முதலாகப் பக்குவன் ஈறாகப் பதினான்கு அதிகாரங்களையுடையது. இவற்றுள் முதற்கண்ணதாகிய சிவகுருதரிசனம், சிவபெருமான் ஆன்மாக்களாகிய நம் மீதுவைத்த கைம் மாறுவேண்டாத கருணையால் மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல மானிடச் சட்டை தாங்கிச் சிவகுருவாக எழுந்தருளிவந்து தம் சொல்லாலும் செயலாலும் நம் மயக்கத்தையும் அறியாமையையும் போக்கி, ஞானம் வரச்செய்து, அநுபவத்தில் திளைக்க வைத்து, உயர்கதிக்கு உரியவனுக்குதலை உணர்த்துவது. சிவகுருநாதன் தெரி வித்தாலன்றிச் சிவயோக சிவஞான நெறிகள் தாமே உணருந் தரத்தன அல்ல என்பதை வற்புறுத்துவது, இறுதிப் பாசுரத்தில் சிவகுருவைத் தரிசித்தேன்.

அதனால் ' கருக்கொண்ட ஈசனைக்கண்டு கொண்டேனே' எனக் கூறுதல் ஆழ்ந்து அனுபவித்தற்குரியது.

திருவடிப்பேறு என்னும் பகுதியில், சிவகுரு தரிசனம்பெற்ற மாணவன் உணருவ உணர்ந்து தான் இதுவரை உணர்ந்தன யாவும் உணராமையையே என்றுணர்ந்து தன்முனைப்படங்கிச் சிவகுருவின் திரு வடிப்பேருகிய இது சிவனருளாம் என உட்கொண்டு. உண்ணும் நீரும் தின்னும் பாக்கும் வெற்றிலையுமாதிய போகமனைத்தும் சிவகுருநாதன் திருவடிப்பேறே என்று கண்டுகொண்டேயிருப்பன் என்பது உணர்த்தப் பெறுகிறது.

ஞாதுரு ஞான ஞேயம் என்னும் பகுதியில், திருவடிப்பேறெய்திய அனுபவச்சீடன் அநுபவ நெறியில் குருநாதன் காட்டியவண்ணம் நிற்கும் போது தொடக் கத்தில் நான், அவன் ஆசான். அது; அவன் காட்டிய நெறி. இது அதனாற்பெறும் பயனான இன்பு என்று வேருக நின்று பழகுவான். பழக்கம் முதிர, எங்ஙனம் ஒருவனும் ஒருத்தியுமாக வேறுநின்ற இருவர் விதிகூட்டப் புணர்ந்து புணர்ச்சிக் காலத்தில் நான் இவளாம் பகுதிப் பொற்புஆர் அறிவார் என்ற அபேதாநுபவ நிலையில் நிற்பார்களோ அங்ஙனமே அறிவானும் அறியப்படு பொருளுமாகிய வேறுபாடின்றி அறிவு வடிவாகவே நிற்கும அநுபவமுறை உணர்த்தப்பெறுகிறது.

துறவு என்னும் பகுதியில், அங்ஙனம் வேறுபாடற்று அநுபவ மயமாயிருப்பவருக்கு எப்பற்றும் கழன்ற இன்ப நிலையாகிய உள்ளத்துறவு சித்திக்கும். இத்துறவு கைப்புக் கண்டான் பாகலை வெறுத்தொதுக்கியது

போலவும் சூடுண்டவன் நெருப்பை விட்டது போலவும் அன்றி விருப்பு வெறுப்பற்ற நிலையில் மனபரிபாகத்தால் தாமே விளைவதாகிய உண்மைத் துறவாகும். இத்தகைய மிக உயர்ந்த உள்ளத்துறவாகிய உண்மைத்துறவு உணர்த்தப் பெறுகிறது.

தவம் என்னும் பகுதியில், உண்மைத்துறவு பூண்டவர்களுக்கே உண்மைத்தவமாகிய சரியை கிரியை யோக ஞானங்கள் உண்டாம் என்பது உணர்த்தப் பெறுகிறது. இத்தகைய உண்மைத் தவமுடையாரே சிவபுண்ணிய சீலர்கள்; அவர்கட்கே சிவனருள் சித்திக்கும் என்பதும் உணர்த்தப்பெறுகிறது.

தவநிந்தை என்னும் பகுதியில், தவநெறி நின்று சிவசமாதி கைகூடியபிறகு தவங்கள் தாமே கழலும்; கழலுந்தவங்களை மீளவும் கடைப்பிடிக்க வேண்டிய அவசியமில்லை என்பது உணர்த்தப் பெறுகின்றது.

ஞானம் வருதல் என்னும் பகுதியில், ஞானம் என்பது அலரும் பருவத்து அரும்பில் தோன்றும் மணமும் சுரக்கும் தேனும் போலச் சிவசமாதி கைகூடிய சீவன் முத்தன் சிந்தையில் நிறையும் ஒளி என்பது உணர்த்தப்பெறுகின்றது.

இங்ஙனம் அனுபவ நிலைகளையும் அநுபவப் பயனையும். அதனால் விளையும் உயர்ந்த இன்பப் பேற்றையும் உணர்த்திச் செல்லும்போது உலகும் உலகத்தில் வேடதாரிகள் நிலையும் திருவுள்ளத்திற்கு இலக்காக, அவவேடம் என்னும் பகுதியில் அவவேடம்

உலகை மருட்டுதற்கே யுதவும் என்பது உணர்த்தப் பெறுகிறது.

தவவேடம் என்னும் பகுதியில், உண்மைத் தவத்திற் குரிய வேடங்கள் விபூதி, உருத்திராக்கம், பினைர், திருவைந்தெழுத்து உச்சரிப்பு, குண்டலம், ஆறு கட்டி முதலாகிய பத்துமே என்பதை உணர்த்துகிறது.

பின்னர், திருநீற்றின் பெருமையைத் தனியே உணர்த்தத்தொடங்கித் திருநீறணிய வேண்டியதன் இன்றியமையாமையையும் அதனுல விளையும் பயன் களையும் தொகுத்துணர்த்துகிறது.

ஞானவேடம் என்பதில், சிவவேடந்தாங்குதல் சிவஞானியருக்கே சிறப்பு ; அஃதிலாதார் தாங்குதலாற் பயனில்லை என்பது வற்புறுத்தப்படுகிறது.

சிவவேடம் என்னும் பகுதியில், ஞானவேடம் தாங்கி ஞானநெறியில் நின்ருர் சிவமாந்தன்மை எய்துவர் என்பது உணர்த்தப்பெறுகிறது.

இவ்வண்ணம் படிப்படியாக நிலையில் உயர வேண்டிய உதவிகளைத் திருவருளால் பெற்று வைத்தும், அதனுற்பயனெய்தி அதன் கண்ணே நிலையாது மல மாயா கன்மங்களிற் சிக்கித் தவிக்கும் அபக்குவன் நிலையை அறிவிப்பது அபக்குவன் என்னும் அதிகாரம்.

இங்ஙனம் எதிர்மறை முகத்தான் அபக்குவன் நிலையை உணர்த்தி, முடிந்த முடிபாகச் சிவகுரு தரிசனம் பெற்றுச் சிவநெறி நின்று சிவபுண்ணியஞ் செய்தார்.

சிவத்துவம் எய்திப் பக்குவராவர் என்ற முடிந்த பயனை அறிவுறுத்தி இனிது முடிகிறது.

இவ்வண்ணம் மக்கள் அறிவின் வளர்ச்சிக்கும் பரிபாகத்திற்கும் ஏற்ப மிக உயர்ந்த அநுபவக் கருத்துக்களை உணர்த்துவது இத்தந்திரம்.



# TIRUMANTRAM

The term "mantram" denotes " an idea that sustains and safeguards a person who is immersed, as it were in seeking Truth through its instrumentality."

It is ideas that elevate men to great heights. Naturelly, one who feels a compulsive urge to enter into a higher spiritual level, should safeguard oneself with ideas that bring about an upward orientation in one's being.

Mantram is the spark that lights the torch of knowledge. The late Dr. V. V. Ramana Sastri defines mantram as " an idea that is formed out of (spiritual) churning." And he adds : " Mantrams therefore, are images that emerge in the mind as a result of ceaseless concentration". Such mantrams are a means of attaining true knowledge.

Tirumantram by Tirumular is one of the most important of the Tamil works on mantrams handed down to us from our saints and seers.

Scholars hold conflicting views on the date of composition of Tirumantram, and whether

or not it is a translation from Sanskrit, It is the privilege of scholars to disagree. We shall not here enter into academic controversies. However, it is well that we seek to have some idea of the social environment of the age in which Tirumular lived and produced his magnum opus.

Tirumular's origin, the circumstances that led to his leaving kailas and to his settling down in the land of the Tamils the social forces that inspired him to produce the immortal Tiruman tram all these are lost in the mists of antiQuity, We do not even know the real name of this great sage. Tirmular is the name he acquired later when he became a shepherd. No historical background is possible. We have, therefore, to turn to another great treatise. Periya Puranam for what it has to say on the story of his life.

The sage, says Periya Puranam. came to Tamil Nadu from Kailas to meet his friend Agastya. After offering worship at several famous shrines, he reachad Sattanur a Village on the banks of the Kaveri where he witnessed the tragic spectacle of a herd of cows weeping over the corpse of a shepherd. 'Evidently, the shepherd had met with sudden death, and the cows feeling that some great tragedy had befallen their master, stood hovering about the

body, unwilling to move away.' They smelled it and tears rolled down their long white cheeks like silvery rivulets.

This moving sight struck a responsive chord in the sage, and he decided to end the agony of the cows. As one who had mastered the eight siddhis, he knew the technique of moving from one body to another. He cast aside his body in a safe place, and penetrated into the shepherd's body. The shepherd immediately came to life and got up. The cows danced with joy on seeing their master alive again.

The sage who now lived in the body of the Shepherd ( his name was Mulan ) followed the cows back to the village in the evening. But he stood in the street without entering Mulan's house. Mulan's wife who was awaiting her husband's return came out, and was puzzled to find him standing in the street. She called him in and moved up to take his hand. But he stepped aside. and asked her not to touch him. He denied he had any ralationship what soever with her. Then he entered into a neighbouring mutt, and was soon immersed in deep contemplation.

Mulan's wife would not be consoled easily. How could the poor woman know that her

husband was no more and that another saintly soul was now dwelling in his body ? She complained to her relatives against her husband's behaviour and cried that he had lost his senses. Some of the elders of the village who saw him at the mutt were wise enough to perceive that the shepherd was in a state of samadhi. They, therefore, asked her not to disturb him. but to leave him alone.

When the sage emerged from contemplation the next morniug, he straightaway went to the spot where he had left his former body. But it was not to be found there. He then realised that he was destined to spend the rest of his life as Mulan the shephed, that it was God's will that he should fulfil His purpose as a shepherd.

Known theneeforth as Tirumular ( derived after the shepherd's name Mulan,) he left Sattanur and reached Tiruvavaduthurai where he sat under a Bodhi tree and passed into a state deep contemplation. Once a year he woke up, and each time he composed a stanza containing the cream of his spiritual experiences during the year. It took 3000 years for him to compose the 3000 stanzas comprising Tirumantram.

This account of his life in Periya Puranam perhaps a clue to the state of society which obtained at the time of Tirumular. Why did Tirumular choose to come down all the way to the land of the Tamils ? How did it come to pass that this great exponent of the Vedas and the Agamas was given the form of a shepherd in a lower rung of the social ladder to expound the great Saiva Siddhanta school of philosophy ? And why was Saiva Siddhanta in particular chosen in preference to other systems of thought ? It is well that we seek here some answer to these questions, if oniy for obtaining a correct appreciation of some of the stanzas in Tirumantram, such as, for instance, those expressing his strong condemnation of the pretensions of impostors masquerading as saints and seers.

presumably, early Indian thought which gave birth to some of the greatest metaphysical systems the world has ever seen, received a setback and an era of sterility and stagnation had commenced True flearning and charcater were eclipsed by principles and practices justifying social malpractices. The true import of the Vedas and the Agamas was allowed to be lost in the jungle of rituals and dogmas. Tamill Nadu the cradle of Saiva Siddhanta, had become the breeding ground of

false prophets who used religion and philosophy for securing personal advantages. Such, obviously. was the state of Tamil society which Tirumular felt compelled to reconstruct on lines set forth in the Vedas and the Agamas and as he understood them in the light of his spiritual experiences.

Tirumular wanted humanity to share the divine bliss which he himsaelf had enjoyed. This sharing of his happiness. this freedom of the soul from ignorance and bondage, cannot however be secured unless first some of the fundamental tenets of Saiva Siddhanata were instilled into the minds of the people.

Tirumular taught that the liberation of the pasu ( soul ) was not dependent on the caste, high or low, of the person in whom it dwells. that the soul can attain freedom only if one followed the right path without allowing oneself to be diverted toward blind alleys ; that Saiva Siddhanta, which is the cream of the Vedas and the Agamas opens the window that reveals true knowledge.

This accouut, therefore of Tirumular's teaching Tirumantram as a shepherd should serve to emphasise his advice that, in as much as the soul and not the body that must needs

be freed from bondage, any person be he of high or low birth, can seek to attain Sivananda (divine bliss). That he should have come from Kailas to Tamil Nadu in the extreme South may be taken as reflecting his anxiety that the correct principles of Saiva Siddhanta should again be taught and reinforced in the land of its birth. where social conditions had so altered as to obliterate the prime principles of the Vedas and the Agamas. If the Vedas may be described as the tree of knowledge, the Agamas are its branches and leaves and fruits. While the Vedas content themselves with stating that the soul is the Brahman, the Agamas instruct and guide in leading the soul toward its union with the Absolute Being.

Tirumantram. as we have seen. arose out of Tirumular's intense longing that mankind should share the fruits of his spiritual experiences. The treatise is divided into nine tantrams ( chapters ) setting forth the fundamental tenets of the nine Saiva Agamas.

# FIFTH TANTRAM

## SAIVAM :

Saivam is classified into Four stages—Suddha Saivam, Asuddha - Saivam, Marga - Saivam and Kadum - Suddha Saivam

Suddha Saivar are those who can distinguish between Sat, Asat and Sadasat, and keep their minds unalterably fixed on Sat. They read what must be read and seek to attain Gnana through the aid of Yoga. Asuddha Saivar engage themselves in Sariyai and Kiriyai, that is, going through preparatory processes such as doing menial service at holy shrines and performing acts of worship. Marga Saivar, who have received correct instruction on ritualistic performances. on theological and meta, physical issues, Yogic exercises etc. are well equipped to grasp the nature of Sadasivam, and are in the state of Sivogam. Kadum-Suddha-Saivar need pay no attention to outward appearances their Malas are quiescent; they live in beatific state in their contemplation of the divine bliss that is Siva.

## MARGAS :

Margas are four; Sariyai, Kiriyai, Yoga and Gnana. Sariyai, shows the way of reaching His feet by worshipping at holy shrines bathing in holy

tanks and rivers etc, Kiriyai is the stage when the Siddhantin is engaged in his sole occupation of performing sacred tasks, when he resolutely sets his face against entangling himself in worldly pursuits. The eight parts of Yoga have already been described. Yoga may also be broadly divided into four stages: Samaya Yoga; Visesha Yoga; Nirvana Yoga. Abhisheka Yoga. Samaya Yoga is to ponder over the Yogas; Visesha Yoga is to perform them; Nirvana Yogo shows the emergence of Sakthi. Abisheka Yoga is the attainment of Siddhi, Gnana is True Knowledge. Those possessing such knowledge constitute the cream of mankind. Their thinking faculties are ever kept at the highest pitch. (Gnana has four levels; Gnana within Gnana, Kiriya within Gnana, Sariya within Gnana and Yoga within Gnana).

Initiation is also fourfold; Gnana Samaya, Gnana Visesha, Gnana Nirvana and Gnana Abhisheka, meaning respectively, knowledge ot the self knowledge of the world, knowledge of His benevolence and knowledge of Guru.

## SARIYAI:

Sariyai is analogous to a servant's devotion to his master, and is, therefore. styled dasamarga. His functions at this stage are: lighting, scrubbing and cleaning, gathering flowers etc. This type of devotion helps to some extent in dissipating the Pasa. It raises the devotee to the spiritual level of Saloka.

## KIRIYAI:

Kiriyai is known as Satputra - marga, and the approach here is that of a son to his father. His functions: Mantra - Japa, systematic and repetitive recitation of certain letters and words of spiritual import; study etc., The spiritual level attained is Sameepa.

## YOGA:

Yoga is called Sagamarga, and may be com - pared to friendship between friends, who share joy and sorrow togetber, The state attained is Sarupa, that is, the same form as that of Siva.

## GNANA:

Gnana is Sanmarga which means oneness with God, unaffected by Pasa. The state attained is the highest, Saujya (also called Saivam or Siva - nandam), the state when the seeker, the sougt and the instrument of seeking cease to exist separately as such, and become that which is sought.

Souls that have gone through the above four stages are bestowed with Sakthi - nipatham, the grace of Sakthi (Energy). Sakthi - nipatham has four aspects: mandhadharam, mandham theeviram and theeviratharam, indicating respectively the stages when Sakthi illumines the soul; when it dwells in the soul; when it enables the soul to

solve the riddle of life and death and see God; when it appears as Guru, removes Pasa and make the soul lie quiescent and formless In the Ilimitable expanse of space.

There are several systems of thought. Of these the Saiva Siddhanta system teaches one to comprehend that Siva is God, and to acquire True knowledge , unlike certain systems which halt on the way and do not reach completeness and perfection of structure and content. God is not accessible to those who become haughty and pride themselves on their vast learining. He showers His grace, however, on those who possess humllity and patience.

Only such men are genuine aspirants, to which ever persuasion they might belong For the same God is the object of all religions and metaphysical systems, and genuine adherents of Saiva Siddhanta accept this proposition God laughs at fanatics who claim infallibility for their respective systemes. it does not matter much if a man, belongs to this faith or that; it does not matter if a system dose not possess the virutes claimed for it, what matters most is that one who seeks true knowledge should possess the spirit of detachment and equanimity, the frame of mind that weighs issues and reaches conclusions with unswerving objectivity.



# SIXTH TANTRAM



## SIVA GURU :

Slva manifests Himself as Guru and bestows His grace on each soul consistently with its receptive capacity. Guru appears in several roles, such aa king, teacher etc, The Guru ploughs the mind and cultivates it. The seat of the Guru is the same as that of Siva. Unless God appears in the role of Guru, the soul cannot realise Siddhi and Mukthi. Devotion, knowledge and determination, these are the seeds from which grows God's grace. The grace of sakthi makes it easier to attain Gnana. (Tirumular: 'The Guru showed me the path. I obtained God's grace. I abandoned the way of life which had been governed by ignorance. I crossed the ocean of birth and reached the other shore " )

## HIS GRACE ;

Tlrumular : " My Lord Guru touched my head, and I found Him within me, Simultaneously with His appearance. I was invested with the position of leadership. He cut down my ignorance with His sword of Gnana. He commanded me to exercise my leadership

" It is difficult to convey in words the experience I had when His grace flowed into my head, into my mind, into my eyes. My frame sewlled

ந-(ந)

into immense proportions ; my eyes drank His sight In full. He is Siddhi and Mukthi ; He is everything; He is Siva. I lived in His grace. He who was not accessible even to vishnu and Brahma revealed Himself to me, and broke the cage that had Imprisoned my soul. He made my mind impregnable to the attractions of the senses. I burnt out the effects of Karma. I learnt the end of the Vedas.

"His manifestations are countless. He is beauty, charity, mantra, medicine, everything is He. There were two positions. "I" and "He". For the first time. I saw them both as one, took the "I" and placed it at His feet as my offering. Where was the need any longer for differentiating between "I" and "He"?

"He released me from the thirty-six tattwas removed my fear, took me under His benign fold. and made me siva. 'Look! Look!' He said, He said again : "Look at those eyes that do not see. those ears that do not hear; look at the bliss that does not diminish, the unity without the act of union the humility which is not humble ! Look, look at Nadanta-Gnana, the Knowledge behind sound!"

He who achieves silence gets Siddhi, Mukthi, knowledge of the Source of Sound etc. God reveals Himself to those who have conquered life and death and shows them Sivalogam. He is the incandescent flame to the saints who approach him in a state of purity.

Side by side with good roads. God has also laid paths overgrown with thorny shrubs. He who strays from the right path injures himself.

The farmer was polughing his field. He had to suspend the pioughing for some days owing to heavy rains. When he commenced ploughing again, he saw on the field some lovely lilies. He mistook them for the eyes of his wife, and, therefore, left that portion of the field unploughed. (Exp. The farmer is the aspirant who seeks Divine Grace. Ploughing is his effort to control the organs of perception and action. The lilies are the attractions offered by the world. His failure to plough the spot where there were lilies signifies the deviation from firm determination, his weakness for holding on to his possessions. The result is the abandonment of his spirltual pursuits.

## TAPAS:

Fear does not affect the aspirant who has steeled himself against pain and pleasure. Night and day do not exist for him. Only tapasvis can lift the veil which hides the meaning of creation and the nature of the soul

Those who rely on their physical might, on their horses and elephants and soldiers, have al perished. But the tapasvis who sought true knowledge remain deathless.

Give up the mechanical cramming and ricitation of Sestras and turn for a moment to look

within yourself. Inward searching will reveal the light within. Of course, tapas is superfluous when you attain Samadhi.

## CORRECT USE :

Mastery over the sensory organs renders one immune to birth and death. There is no point in parading your learning by shouting the Sastras No need whatever for outward formalities if you stand aside from wordly distractions. No need for any mental exercise when all exertions cease. Nothing counts in the state of Samadhi.

## USELESS ROLE :

When one has neither the inclination nor the equipment for spiritual pursuits, one does not derive any benefit out of putting on the garp of a Gnani. Such men degrade themselves by their false pretensions. They live by begging. It is because of these pretenders, genuine Gnanis are sometimes mistaken for pretenders,

## THIRU - NEERU :

Thiru - Neeru ( Holy Ashes ) should be worn in plenty and in the proper manner. Nool (thread) Indicates Vedanta; sikai (tuft) Gnana. The object sought is God; the sound that issues forth is Omgaram (Om).

## FALSE CARB :

The utter uselessness of putting on the gard of a Gnani without possessing genuine aspiration or knowledge needs reiteration. Pretenders are like dogs barking impatiently under the scaffold waiting for the corpse to fall down.

But genuine Gnanis move about the world in an attitude of absolute detachment; they see not' though having eyes; they are dead, though possessing a body that lives.

## DEVOTEES OF SIVA :

Devotees of Siva are those whe have been endowed with His grace. They have placed theis entire selves unreservedly at His feet, Their minds are no longer harassed by doubts Mere outward garb without inner purity cannot liberate the soul. The false paint is erased when the soul leaves the Body. Therefore do not waste your time in playing useless roles. Hold the reins tight and drive the horse: go and drink the bliss that is Siva.

## APAKKUVAN,

The teacher shoud be competent enough to impart correct knowledge; otherwise, both the teacher and the taught fall into the pit, like the blind bed by the blind. Your mouth speaks one thing; your mind is concerned with something else; all the while you are doing this or that which

is not relevant to what you speak or think! What a tragic waste! (Tirumular ; ' I found out that You are the Divine Flame within me, Some men think that I am a ghost ! Still those who fail to perform tapas who are still undergoing the cyclic process of birth and death ''.)

## PAKKUVAN :

Genuine aspirants learn the correct path with the aid of a Guru well - versed in the Vedas. When you get such a Guru, do not hesitate for a moment to sacrifice your all including your very life. Train yourself to enter Into a state of ceaseless contemplation. And strive hard, patiently, diligently and with genuine humility, to attain Gnana.



உ

சிவமயம்

# திருமூலதேவ நாயனார்

கயிலாயத்து ஒருசித்தர் பொதியில் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண்டு அவனுடலில் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி
ஆவடுதண் துறைஆண்டுக்கு ஒருபா ஏாகக்
குயிலாரும் அரசுஅடியில் இருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகினாரே.

.. திருத்தொண்டர் புராணசாரம்.

உ
சிவமயம்

# திருமூலர் திருமந்திரம்

## ஸ்ரீ பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

## ஐந்தாம் தந்திரம்

### 1. சுத்தசைவம்

சைவம் சிவத்தொடு சம்பந்தமாவது. அது சுத்த சைவம் முதலாக நால்வகைப்படும். அவை நான்கும் அன்புடைமை வாயிலாக அருளடைதற்கு உபாயமாவன. சுத்தசைவம் சடங்களவிலே நில்லாது, சம்பிரதாயங்களைக்கடந்து தலைவனையும், தளையையும், தன்னையும் அறிந்து தளையினின்று நீங்கித் தலைவன் திருவடிச் சார்புபெற்று வாழ்வதாம். இதனை விளக்குவது சுத்த சைவம் என்ற இப்பகுதி.

**ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற**
**பேரறி வாளன் பெருமை குறித்திடின்**
**மேருவும் மூவுல காளி யிலங்கெழுந்**
**தாரணி நால்வகைச் சைவமு மாமே. 1419**

இம்மந்திரம் என்னுதலிற்றோவெனின், இறைவன் பெருமை இவற்றிற்கு ஒப்பாம் எனல் நுதலிற்று.

இதன் பொருள் : எல்லா உலகையும் ஒருசேரப் படைக்கின்ற பேரறிவாளனாகிய பரசிவத்தின் பெருமை

அறிந்து இவ்வளவென்று அறியலுறின், பெருமையும் மூவுலகையும் ஒருசேர ஆளும் இறைவனிடமிருந்து உண்டான பூமியும், நால்வகைச் சைவமும் ஒப்பதாம் என்றவாறு.

ஊரும் உலகமும் என்றது ஆன்மாக்களனைவரும் அறிந்த ஊரைக் கூறி, அவ்வூர் உலகில் ஏகதேசம் என்றறிவித்து, அவையனைத்தையும் ஒருங்கே இருந்த நிலையிலேயே படைக்கும் அளவிலாற்றலன் இறைவன் என்பதனை உணர்த்தியவாறு. ஒக்கப் படைக்கிற - ஒன்றன்பின் ஒன்றாக அன்றி, அனைத்தையும் இருந்த நிலையிலேயே சங்கற்பமாத்திரையின் ஒருசேரப்படைக்கின்ற, பேரறிவாளன் - அநாதி நித்தியமாகவே பேரறிவு படைத்தவன் : என்றது இயல்பாகவே பரிபூரணஞானமுடையவன் என்பதை விளக்கியது.

பெருமை - வேறொன்றற்கும் ஒருவருக்குமில்லாத பெருமை, இது அநந்தசக்தி முதலிய ஆற்றல்களால் விளைவது. குறித்திடின் - இத்துணையது, இவ்வியல் பிற்று என எண்ணி அறியலுறின். செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் அது முடியாது என்பதனை விளக்கிற்று. மேருவும் ஆம் - அளக்கலாகா அளவும் பெருமையும் உயரமும் வண்மையும் உடையது மேரு: அதுபோல இறைவனும் சிற்றறிவுடைய ரதசத்துக்களாகிய ஆன்மாக்களால் அளந்தறிய முடியாமையும், பெருமையும், அருள்வண்மையும் உடையவராவர்.

தாரணி ஆம் - பரந்து அனைத்தும் தாங்க இடந்தந்து நிற்பது பூமி. அதுபோல இறைவன் இயங்குவ நிற்ப வான அனைத்தையும் தாங்கிப் பரந்திருப்பவராதலால்

இங்ஙனம் கூறப்பட்டது, தாரணியும் அவன்படைப்பு ஆதலின் அதுவும் ஓரளவு ஒப்பாமேயன்றி அளவிலாற்றலுக்கு முழுதும் ஒப்பாகாது என்பார் ‘முவுலகாளியில் அங்கு எழும் தாரணி’ என்றது.

நால்வகைச் சைவம் இறைவன் வாக்காகிய சைவத்திறத்தில் சுத்தம், அசுத்தம், மார்க்கம், கடுஞ்சுத்தம் எனக் கூறப்பட்ட நால்வகைச் சைவம். ஆம் என்றது தவறுது உண்மைப்பயனை உதவும் எனல் நோக்கி.

இங்ஙனமன்றி, பெருமை குறித்திடின் அவன் படைப்பாகிய மேருவானும், தாரணியானும், சைவத்தானும் அறியப்படுவதாம் எனவும் கொள்ளலாம், இப்பொருளில், இவ்வண்ணம் எல்லையற்ற படைப்பைப் படைத்தமைகொண்டே அவனது பெருமை அறிக என்பது கருத்து. (1)

**சத்தும் அசத்தும் சதசத்துந் தான்கண்டு**
**சித்தும் அசித்துஞ் சேர்வுறு மேநித்த**
**சுத்தம் அசுத்தமுந் தோய்வுறு மேநின்ற**
**நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே.** 1420

இம் - எனின்; சுத்தசைவர்க்கு நேயமான பொருள் பரசிவம் ஒன்றுமே எனல் நுதலிற்று

இ - ள்: சத்து, அசத்து, சதசத்து மூன்றையும் தான் அறிந்து, சித்தொடும் அசித்தொடும் பொருந்துறுமல், சுத்தமும் அசுத்தமுமாகிய மாயையுட்படாது நின்ற நித்தியப்பொருளே பரசிவமாவது. அதுவே சுத்தசைவர்க்கு நேயப்பொருளாவது என்றவாறு.

சத்து – என்றும் நிலைத்த பொருள்; அது சிவம், அசத்து – நிலையுதலில்லாத பொருள்; அது சடம், மாயை என்பது பிரபஞ்சமாம், சதசத்து - சத்தோடு கூடியவழி சத்தாயும், அசத்தொடுபட்டு அசத்தாயும் நிற்பதாய இருதிறனுள்ள ஆன்மா.

இறைவன் சிவமாய தன்னையும், சடமாகிய பிரபஞ்சத்தையும், சதசத்தாகிய ஆன்மாவையும் கண்டு அவற்றைப் பொருத்தியும் பொருந்தியும் ஆட்டுகின்றுனுதலின் 'தான் கண்டு' என்றது.

சத்தாகிய தன்னைக் காண்டலாவது ஞானமேயான தன்னை ஞானமாக அறிதல். அசத்தைக் காண்டலாவது மாயையைக் கலக்கி, சிருட்டியாதி தொழில்களைச் செய்து காரியப்படுத்துதல், சதசத்தைக் காண்டல் - ஆன்மாக்கள் வினைபோகத்தைத் துய்க்கச்செய்து தம்மடிக்கீழ்ச் சார பரிபாகந் தந்து ஆட்கொள்ளல். சித்தும் அசித்தும் சேர்வுருமே நீத்த - உணர்த்த உணரும் சித்தாகிய ஆன்மாவும், அசத்தாகிய மாயையும் ஆகிய இவற்றைப் பொருந்தாமல், இவற்றின் மேலாய் நின்ற.

சுத்தம் அசுத்தமும் தோய்வுருமேநின்ற – மாயைகளிரண்டிலும் தோயாமல் மாயாதீதனுக நின்ற, இறைவன் மாயைகளைக் கடந்து நின்று, அவற்றை முதற்காரணமாகக்கொண்டு, தான் நிமித்த காரணனுக நின்று மாயேயமான பிரபஞ்சங்களைப் படைப்பன் ஆதலின் மாயாதீதனுக நின்ற என்றது.

நித்தம். பரம் - நித்தியமான பரம்பொருள் சத்து எனவே. நித்தம் பெறப்படுமாயினும் மீண்டும் கூறியது

சத்து அசத்து சதசத்தென மூன்றனோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுவதன்றித் தனித்த சிறப்புடைமையின் என்க. அத்தகைய பரம்பொருள் சுத்த சைவர்க்கு நேயமாம் என்க. நேயம் – ஞேயம் என்பதன் திரிபு, நேயம் – அறியப்படுவது. (2)

**கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்**
**முற்பத ஞான முறைமுறை நண்ணியே**
**தொற்பத மேவித் துரிசற்று மேலான**
**தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே** 1421

இம் – எனின், சைவசித்தாந்தர் யாவரென உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; கற்கத் தகுவனவற்றைக் கற்று, பதினறு கலைகளைப் பொருந்திய உண்மையான சிவயோகம் முதலான பதஞானங்களை முறையாக அடைந்து, தொம்பதநிலையை அடைந்து, மலவாதனை அற்று, மேலான பரம்பொருளைக் கண்டு நித்தியராக விளங்குபவர்களே சைவசித்தாந்தர் ஆவர் என்றவாறு.

சாத்திரம் படித்தால் மட்டும் அமையாது, அநுபவமும் முறை முறையே பெற்று, ஆண்டவனுடைமை நாம் என்ற புத்தி பதிந்து, அதனுல் ஆன்மபோத மழிந்து பதிபோதம் மேவப்பெற்று, பதியைத் தரிசித்தவர்களே சைவசித்தாந்திகளாவர் என்பது கருத்து.

கற்பன – இறைவனருளிய வேதசிவாகமங்களும், அவனருளைப் பெற்ற அடியார்கள் அருளிய சாத்திர தோத்திரங்களும், அவன்பெருமையையும் கருணையையும் விளக்கும் சிவபுராணங்களும் முதலாயின. கற்று - ஐயம்

சத்து — என்றும் நிலைத்த பொருள்; அது சிவம், அசத்து — நிலையுதலில்லாத பொருள்; அது சடம், மாயை என்பது பிரபஞ்சமாம், சதசத்து - சத்தோடு கூடியவழி சத்தாயும், அசத்தொடுபட்டு அசத்தாயும் நிற்பதாய இருதிறனுள்ள ஆன்மா.

இறைவன் சிவமாய தன்னையும், சடமாகிய பிரபஞ்சத்தையும், சதசத்தாகிய ஆன்மாவையும் கண்டு அவற்றைப் பொருத்தியும் பொருந்தியும் ஆட்டுகின்றானதலின் ' தான் கண்டு' என்றது.

சத்தாகிய தன்னைக் காண்டலாவது ஞானமேயான தன்னை ஞானமாக அறிதல். அசத்தைக் காண்டலாவது மாயையைக் கலக்கி, சிருட்டியாதி தொழில்களைச் செய்து காரியப்படுத்துதல், சதசத்தைக் காண்டல் - ஆன்மாக்கள் வினைப் போகத்தைத் துய்க்கச்செய்து தம்மடிக்கீழ்ச் சார பரிபாகந் தந்து ஆட்கொள்ளல். சித்தும் அசித்தும் சேர்வுறுமே நீத்த - உணர்த்த உணரும் சித்தாகிய ஆன்மாவும், அசத்தாகிய மாயையும் ஆகிய இவற்றைப் பொருந்தாமல், இவற்றின் மேலாய் நின்ற.

சுத்தம் அசுத்தமும் தோய்வுறுமேநின்ற — மாயைகளிரண்டிலும் தோயாமல் மாயாதீதனாக நின்ற, இறைவன் மாயைகளைக் கடந்து நின்று, அவற்றை முதற்காரணமாகக் கொண்டு, தான் நிமித்த காரணனாக நின்று மாயேயமான பிரபஞ்சங்களைப் படைப்பன் ஆதலின் மாயாதீதனாக நின்ற என்றது.

நித்தம். பரம் - நித்தியமான பரம்பொருள் சத்து எனவே. நித்தம் பெறப்படுமாயினும் மீண்டும் கூறியது

சத்து அசத்து சதசத்தென மூன்றனோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுவதன்றித் தனித்த சிறப்புடைமையின் என்க. அத்தகைய பரம்பொருள் சுத்த சைவர்க்கு நேயமாம் என்க. நேயம் – ஞேயம் என்பதன் திரிபு, நேயம் – அறியப்படுவது. (2)

**கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்**
**முற்பத ஞான முறைமுறை நண்ணியே**
**தொற்பத மேவித் துரிசற்று மேலான**
**தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே 1421**

இம் – எனின், சைவசித்தாந்தர் யாவரென உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; கற்கத் தகுவனவற்றைக் கற்று, பதினாறு கலைகளைப் பொருந்திய உண்மையான சிவயோகம் முதலான பதஞானங்களை முறையாக அடைந்து, தொம்பதநிலையை அடைந்து, மலமாதனை அற்று, மேலான பரம்பொருளைக் கண்டு நித்தியராக விளங்குபவர்களே சைவசித்தாந்தர் ஆவர் என்றவாறு.

சாத்திரம் படித்தால் மட்டும் அமையாது, அநுபவமும் முறைமுறையே பெற்று, ஆண்டவனுடைமை நாம் என்ற புத்தி பதிந்து, அதனால் ஆன்மபோத மழிந்து பதிபோதம் மேவப்பெற்று, பதியைத் தரிசித்தவர்களே சைவசித்தாந்திகளாவர் என்பது கருத்து.

கற்பன – இறைவனருளிய வேதசிவாகமங்களும், அவனருளைப் பெற்ற அடியார்கள் அருளிய சாத்திர தோத்திரங்களும், அவன்பெருமையையும் கருணையையும் விளக்கும் சிவபுராணங்களும் முதலாயின. கற்று – ஐயம்

திரிபு அற ஆசான்மூலமாகக் கற்று. கலைமன்னு மெய் யோகம் முன் — அகார கலை முதலான சோடச கலை களும் பொருந்திய உண்மை யோகமான சிவயோகம் முதலாயின.

பத ஞானம் மேவி — நிலையான் ஒன்றினொன்று உயர்ந்த பதவிகளாகிய ஞானத்தைப் பொருந்தி, பத ஞானங்களின் விரிவைத் "தலை முதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார்" என்ற திருத்தொண்டர் புராணச் செய்யுளுட் காண்க.

தொற் பதம் மேவி - (துவத் — உன்னுடையது) உன்னு டையது என்ற நிலையைப்பொருந்தி. என்றும் சுதந்திர மற்றவர்கள்; ஆன்மாக்கள்; இறைவன் உடையவன்; அவன் உடைமை நாம்என்ற நிலையைக்கண்டு, இதற்கு வேறு கூறுவாரும் உளர், தொம்பதம் தொற் பதம் என ஆகாமை கொண்டும், தொம்பதம் விடத்தக்கதும் தற்பதம் அடையத் தக்கதுமாதலின் அவ்வுரை அநு பவத்திற்குப் பொருந்தாமை உணர்க. ஆன்மாக்கள் ஆண்டவனுடைமை என்று எண்ணி, முனைப்பற்றபோது மலமாகிய துரிசு அறுமாதலின் துரிசற்று என்றருளினர்.

மேலான தற்பரம் — எல்லாவற்றினு எல்லாரினும் உயர்ந்த அந்தப் பரம்பொருள். அதனைத் தரிசித்தவரே சைவசித்தாந்திகள் என்க. (3)

**வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த**
**நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்**
**பூதாந்தம் போதாந்த மாகப் புனஞ்செய்ய**
**நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. *1422***

இ-ள் - எனின், சுத்த சைவராகிய நாதாந்தபூரணரே அறிவுருவமாக விளங்கும் சிவமாவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேதாந்தமாவது சுத்த சைவ சித்தாந்தமாம். நாதமுடிவாகிய சிவத்தைத் தரிசித்தபேர்களே சலனமற்ற ஞானிகள். பூத இறுதியான தத்துவங்களை ஞானவைரம்பாகப் பண்படுத்த அதனால் நாதமுடிவில் நிறைவுற்று விளங்கும் பெருமான் அறிவுக்கு அறியப்படு பொருளாவர் என்றவாறு.

வேதாந்தம் வேறு சித்தாந்தம் வேறு. வேதாந்தங் கூறுவது பொருள் ஒன்றே; அத்துவிதமே முத்தி என்பது. ஆகையால் இந்த இரண்டும் வேறான கொள்கைகள் என்பார் அறியார், சுத்த சைவசித்தாந்தமே வேதம் கூறும் முடிபு.

நடுக்கு - நிலையின்றிச் சலித்தல்; பூதாந்தம் - தோற்றுமுறையில் சுத்தமாயை முதல் பிருதிவியாகிய பூதம்வரை உள்ள தத்துவங்கள். அவை அனைத்தும், மாயையின் காரியமாதலின் சடம். அவற்றை ஞானத்திற்கு வைரபாகமாற்றிப் பண்படுத்தின். புனம் செய்தல் - காட்டையழித்துத் தினைப்புனம் செய்தல் போலப் பண்படுத்துதல்.

நாதாந்தபூரணர் - நாததத்துவ முடிவில் நிறைந்து விளங்கும் பரசிவம். ஞான ஞேயத்தர் - பரிபாகமுற்ற ஞானிகளினுடைய அறிவுக்கு அறியப்படு பொருளாவர் என்பதாம். இதற்கு வேறுரை கூறி, அதிகாரத்திற்கு இயையுபடாது இடர்ப்படுவாரும் உளர். (4)

## 2. அசுத்த சைவம்

அசுத்த சைவமாவது திருவேடப் பொலிவோடு, சரியை கிரியை என்னும் இரண்டில்மட்டும் நிற்பார் நிலையாம். அதனை அசுத்தமென்றது என்னையோ எனின், சத்தும் அசத்தும் சதசத்தும் தான் கண்டிருக்கின்ற ஞானநிலையினும் வேறுபட்டதாய், சுத்த சைவத்திற்கு வாயிலாய் இருப்பதாகலின் என்க. மேலான தற்பரங் கண்டோர் சுத்தசைவராகவே, சரியை கிரியையின் நிற்பார் அசுத்தராதற்கு இழுக்கில்லையாம் என்க.

**இணையார் திருவடி ஏத்துஞ் சீரங்கத்**
**திணையார் இணைக்குழை யீரணை முத்திரை**
**குணமார் இணைக்கண்ட மாலையுங் குன்று**
**தணைவாஞ் சரியை கிரியையி னோர்க்கே.** 1423

இம் – எனின், அசுத்தசைவ ரிலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ – ள் : சரியை, கிரியைகளாகிற இவற்றினிற்கும் அசுத்தசைவர்க்கு இறைவனது இரண்டான திருவடித் தாமரைகளை வணங்கும் சிறப்பினையுடைய உடலில், இரண்டான குண்டலங்களும், இரண்டான இடபக் குறியும் சூலக்குறியுமாகிய முத்திரைகளும், நூலுள் கோக்கப்பெற்ற இரண்டான கண்டமாலைகளும் இடைவிடாது அணியப்படுவனவாம் என்றவாறு.

சீர் அங்கம் – சிறப்புடைய உடல். ஆறுகட்டியும் சுந்தரவேடமுமாக இரண்டிரண்டு ஒவ்வொரு காதிற்கும் அணியப்படுமாதலின் 'இணையார் இணைக்குழை' என்றது.

சாரணை முத்திரை - இரண்டாக இடப்படுகின்ற முத்திரைகள். அவை அப்பர்சுவாமிகளுக்கு இடப் பெற்றவைபோல இடபமுத்திரையும் சூலமுத்திரையு மாகிய இரண்டும். விபூதி உருத்திராக்கம் என்பாரும் உளர். அவை சாதனமாமேயன்றி முத்திரையாகாமை யும், உருத்திராக்கம் கண்டமாலையெனப் பிற்கூறப் படுதலானும் அஃதுரையன்மை அறிக.

குணம் - நூல். கண்டமாலை - முப்பத்திரண்டு மணி கோக்கப்பெற்ற கழுத்திலணியும் உருத்திராக்க மாலை. கழுத்தில் தனி மாலை அணிதலாகாது, செப மாலையும், கண்டமாலையும் சேர்த்தே அணியத்தக்கன ஆதலின் " இணைக்கண்டமாலை " என்றது. (5)

**காதுப்பொ ன்ஞர்ந்த கடுக்கன் இரண்டுசேர்த்**
**தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன்**
**சோதனை செய்து வுபதேச மார்க்கராய்**
**ஓதி யிருப்பார் ஒருசைவ ராகுமே.** **1424**

இம் - ரனின், அசுத்த சைவருள் வேறொருவகை யினரின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : காதின்கண் பொன்னுற் செய்யப் பெற்ற இரண்டு கடுக்கன்களை அணிந்துகொண்டு, ஓதப் பெறுகின்ற உடலின் பூணூலாகிய இரு கட்டுடன் அத்துவா சோதனை செய்து, உபதேச பரம்பரையின ராய், திருவைந்தெழுத்தைச் செப்பிப்பார் ஒருவகைச் சைவராவர் என்றவாறு.

காதிற்கடுக்கனும், பூணூலும் அணிந்து, அத்து வாக்களைச் சோதித்து, உபதேச பரம்பரையினெழுகு வார் அசுத்தசைவருள் ஒருசாரார் ஆவர் என்பதாம்.

திருமேனியுள் சட்டு என்றது பூறூலே. மணை மானவர்கள் இரண்டு பூறூலைத் தரிப்பது பெரும் பான்மையாதலின் '' கட்டிரண்டுடன் '' என்றது.

அத்துவாசோதனை கிரியையாகிற பூசைநெறிக்குச் சிறந்ததாகலின் அதனைக் குறிப்பித்தவாறு.

உபதேசமார்க்கர் - உபதேச பரம்பரையினர். ஓதி என்பதற்குத் திருவைந்தெழுத்தை எனச் செயப்படு பொருள் வருவித்து முடிக்க. (6)

**கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டனர்**
**கண்டங்கள் ஒன்பதுங் கண்டா யரும்பொருள்**
**கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டமாங்**
**கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. 1425**

இம் - எனின், நவகண்டங்களைக் கண்டோர் சிவபெருமானுடைய நவந்தரு பேதங்களையும் கண்டோராவர் எனல் நுதலிற்று.

இ - ள் : உலகின் நவகண்டங்களையும் வலஞ் செய்து கண்டவர்கள் இறைவனது நவந்தரு பேதங் களையும் கண்டவர். நீபார். அதுவே சிவபெருமானாகிய அரும்பொருளின் ஒன்பது கண்டங்களாம். அதனைப் பார்த்தவர்களே வேறுபட்ட நவ கண்டங்களையும் கண்டோர்; இவர்களே கடுஞ்சுத்தசைவர் என்றவாறு.

இம்மந்திரம், சிவமே உலகவடிவம், உலகம் சிவ வடிவம் என இறைவன் எல்லாமாக இருத்தலையும், உலகை வலம்வந்தவர்கள் இறைவனுடைய பேதங் களையும், இறைவனுடைய நவந்தருபேதங்களைக் கண் டவர்கள் நவகண்டங்களையும் வலம்வந்தோர் ஆவர்

என்பதையும் உணர்த்துகின்றது. விநாயகப்பெருமான் உலகை வலம் வருவதற்குப் பதிலாக இறைவனையே வலம் வந்து மாம்பழம் பெற்ற வரலாற்றையும் காண்க.

கண்டாய்; முன்னிலையசை. கண்டமாம் கண்டங்கள் - வேறுபட்ட கண்டங்கள். (7)

**ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்**
**மோன திசையும் முழுஎண்ணெண் சித்தியும்**
**ஏனை நிலமும் எழுதா மறையீறுங்**
**கோனொடு தன்னையுங் காணுங் குணத்தரே. 1426**

இ - ள் : கடுஞ்சுத்த சைவராகிய ஞானியர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானியராவார், பூமியில் எழுகின்ற நல்ல ஞான சாத்திரங்களுடன், மௌனநிலையையும், எல்லா மாய அறுபத்துநான்கு கலைகளின் சித்தியும், ஆருதாரங்கட்கு அப்பாற்பட்ட துவாதசாந்த நிலையும், எழுதப் பெறாத சுருதியின் முடிவாகிய உபநிடதமும், சிவமும் தானுமாகிய இவற்றை ஒருசேர முற்றும் உணரும் குணத்தோர் ஆவர் என்றவாறு.

புவியெழுநன்னூல் - பூமியின்கண் அவ்வப்போது அவதரித்த ஞானியர்கள் அருளிச்செய்த ஞானசாத்திரங்கள். மோன திசை - மனத்தையடக்கி ஆருதாரங்களினும் நிறுத்தித் தியானித்தலாகிய நிலை.

முழு எண்ணெண் சித்தி - அறுபத்துநான்கு கலைகளின் பேறு, முழுச்சித்தி யென்றது அனைத்தையும் ஒருசேரப்பெறும் சித்தி.

ஏழை நிலம் - உடலுக்குள் உள்ள நிலம் ஆறு ஏழாம் நிலமாவது அவற்றிறகு அப்பாற்பட்ட நிலமாகிய துவாதசாந்தம். மறையிறு - உபநிடதஞானம். கோன் - தலைவனாகிய சிவம். தன் என்றது அன்மையாகியதன்மை. இவையனைத்தையும் அநுபவிக்கும் குணமுடையோரே ஞானியாவார் என்பதாம்.

இறுதியிலுள்ள இம்மந்திரங்கள் இரண்டும் கிரியை சுத்தசைவமெனபதில் இடம்பெறத்தக்கனவோ என்று எண்ண இடந்தருகின்றன. ஆய்க. (8)

### 3. மார்க்கசைவம்

விபூதி ருத்திராக்க தாரணம சரியையாதி நெறிகள் முதலான சைவ மார்க்கங்களினின்று பழகி ஞானம் பெறுவது மார்க்கசைவமாம்; அதனை உணர்த்துதலின் இவ்வதிகாரம் மார்க்கசைவம் எனப்பெற்றது.

**பொன்னுற் சிவசாத னம்பூதி சாதனம்**
**நன்மார்க்க சாதனம் மாஞான சாதனம்**
**துன்மார்க்க சாதனம் தோன்றுத சாதனம்**
**சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே** 1427

இம் - எனின், சுத்தசைவர்க்குரிய சாதனங்கள் இவையென வரையறுத்தல் நுதலிறறு.

இ - ள் : பொன்னுற் செய்யப்பட்ட உருத்திராக்க மாகிய சிவசாதனமும், விபூதியாகிய சாதனமும், நன் மார்க்கச் சாதனமாகிய ஞானத்திற்குச் சாதனமாகிய திருவைந்தெழுத்தும், பொறி யின்பத்திற்காக அலையும் தீநெறிக்கண் சேராத சற்சங்கமும், அடியார் வழிபாடும்,

நற்சிந்தையுமாகிய இவைசாதனங்கள், சுத்தசைவர்க்கு இவையே உரியனவாம் என்றவாறு.

இம்மந்திரம் இவ்வதிகாரத்திற்கு எங்ஙனம் இயைபுடைத்தோ எனின், முதலிரண்டடியினும் கூறப்பெற்ற மார்க்க சைவமே சுத்த சைவமாயிற்று என்று உணர்த்தியவாறு : (9)

**கேடறு ஞானி கிளர்ஞான பூபதி**
**பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தின்**
**ஊடுறு ஞானோ தயனுண்மை முத்தியோன்**
**பாடுறு சுத்தசைவப்பத்த நித்தனே.** 1428

இம் – எனின், இதுவும் ஞானியி னிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று

இ – ள் : குற்றத்தினீங்கிய ஞானியானவன் மேன் மேலும் கிளர்ந்தெழுவதாகிய ஞானத்திற்கு அரசாக ஆவான் ; துன்பற்ற வேதாந்த சித்தாந்தங்களிடையே தோன்றும் அறிவுத்தோற்றமுடையோன் ; உண்மை முத்தியை உணர்ந்தவன் ; பெருமை பொருந்திய சுத்த சைவனாகிய நித்தியனுவான் அவனே என்றவாறு.

வேதாந்த சித்தாந்தம் – வேத முடிவான கருத்து சித்தாந்தமே என்று உணர்ந்தவன் என்பதாம், (10)

**ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு**
**மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்**
**வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்**
**றாக முடிந்த அருஞ்சுத்த சைவமே.** 1429

இம் – எனின், சுத்தசைவத்திற்கு உரிய நூல்கள் இவையெனல் நுதலிற்று.

இ-ள் : ஆகமங்கள் ஒன்பது, அதினின்று விரிந்தன இருபத்தெட் டாகமங்கள். அந்தஇருபத்தெட்டும் சைவம், ரௌத்திரம், ஆரிடம் என மூவகைப்படும். இங்ஙனம் பலவாயினும், பரபரப்பற்ற வேதாந்த முடிவாகிய சித்தாந்த உண்மை ஒன்றேயாக முடிந்தது. அதுவே அரிய சுத்தசைவமாம் என்றவாறு.

ஆகம வேறுபாடுகள் முன்னர்ப் பாயிரத்துள் உரைக்கப்பெற்றன. அவை இறைவன் மூலாகமமாக நந்தி முதலிய சந்தான ஞானபுத்திரர்களுக்கு அருளிச் செய்யப்பட்டனவும், உருத்திரர்களுக்கு அருளிச்செய்யப்பட்டனவும், சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு அருளிச்செய்யப்பட்டனவுமாக முத்திறத்தன. அவை யாவும் உணர்த்துகின்ற பொருள் சித்தாந்தமாகிய உண்மையொன்றே என்பதாம் (11)

**சுத்தம் அசுத்தந் துரியங்க ளோரேழும்**
**சத்தும் அசத்துந் தணந்த பராபரை**
**உத்த பராபரை யுள்ளாம் பராபரை**
**அத்தன் அருட்சத்தி யாயெங்கு மாமே.** 1430

இம் - எனின், மார்க்க சைவத்துள் சத்தியின் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : கேவலமாகிய அசுத்தத்தில் மூன்றும், சுத்தத்தில் இரண்டும், துரியத்தில் இரண்டும் ஆகிய ஏழையும், சத்தாகிய அழியாநிலை, அசத்தான அழியுநிலை இவற்றையுங்கடந்த பராசத்தி ஆன்மாக்களுக்கு உறுதுணையானவள், உயிருள் இயக்குஞ்சத்தி, சிவ பெருமானுடைய திருவருள்சத்தியாக இருப்பவள்.

எமது யாய், அவள் எங்கும் நீக்கமற வியாபித்து நிற்ப வளாம் என்றவாறு.

அசுத்தம் – மலத்துள் அழுந்திச் செயலற்று நிற்கும் நிலையாகிய கேவலநிலை. அதனுள் மூன்றாவன சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்பன,

சுத்தம் – மலத்தின் நீங்க நிற்பதாகிய நிலை. அதில் இரண்டாவன சாக்கிரமும் சொப்பனமும்.

துரியம் – கடந்தநிலை. அதில் இரண்டாவன துரியமும் துரியாதீதமுமாம். தணந்த பராபரை – கேவலம். சகலம், சுத்தம், துரியம் ஆகிய இந்நிலைகளிலிருந்து ஆன்மாக்களை பிரேரபித்துத் தான் அவற்றின் நீங்கியிருப்பதே சத்திக்கு இயல்பாதலின் இங்ஙனம் கூறியது.

உத்த பராபரை – உற்ற துணை வழக்கில் உத்த துணையாதல்போல, ஆன்மாக்களை ஈடேற்றுவதற்கு உற்ற துணையான சக்தி என்க, எங்கும் ஆம் – எங்கும் பரிபூரணையாய் நிற்கும் என்பது.

பார்க்கவைவர் ஞானமார்க்கத்தில் நிற்பவர்களாதலின், அவர்களை இயக்கி எங்குமாயிருப்பவள் சத்தி என அறிவித்தவாறு. (12)

**சத்தும் அசத்துந் தணந்தவர் தானாகிச்**
**சித்தும் அசித்துந் தெரியாச் சிவோகமாய்**
**முத்தியுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினார்**
**சித்தியும் அங்கே சிறந்துளர் தானே.** 1431

இம் – எனின், அந்தப் பரையோடு அநநியமாய் இருப்பவர்களே ஞானிகளாவர் எனக் நுதலிற்று.

இ-ள் அவ்வண்ணம் சத்தும் அசத்துமான நிலைகளைக் கடந்து நிற்கும் சத்தையே தானாய், சித்தும் அசித்தும் அறியாத சிவோகபாவனையில், இரண்டற்ற முத்தியில் அநுபவிக்கப்பெறும் அதீத பாவனையுள்ளே அழுந்தி யிருப்போராகிய ஞானிகளே எல்லாச் சித்திகளிலும் சிறந்து விளங்குபவர்கள் என்றவாறு.

சித்தும் அசித்தும் தெரியாச் சிவோகம்; சிவோகம் பாவனையாவது, இயல்பான சித்தாகிய சிவத்தோடு, மறையினின்று நீங்கிய சித்தாகிய உயிர் ஒன்றிச் சிவமே யான் என்று இருக்கை. அங்ஙனம் இருக்கும்போது, சத்சித்தாகிய சிவத்தையன்றி சித்தாகிய தன்னையும் தடையாகிய அசித்தையும் ஆன்மா உணராதாகலின் இங்ஙனம் கூறியது.

முத்தியின் த்தை ஆநந்தசத்தி என்றது. அந்த நிலையுள் சிவாநுபவமன்றிச் சித்தியென வேறொன்றின் மையின், சித்தியும் அங்கே சிறந்துளர் என்றது (13)

**தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற**
**மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற**
**முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை**
**உன்னத் தகுஞ்சுத்த சைவர் உபாயமே. 1432**

இம்-எனின், சுத்தசைவர் தடைநீங்கச் சாதனமாக எண்ணத்தகுவன இவையென உணர்த்துதல் நுதலிற்று,

இ-ள்: ஆன்மாவாகிய தன்னையும், பரசிவத்தையும், சதாசிவமாகிய அரசரையும், முப்பொருள்களையும்

பெத்தநிலை முத்திநிலை இவைகளையும், சுத்த சைவர்களால் தடை நீங்தும் உபாயங்களாக எண்ணத்தகும் என்றவாறு.

ஈசானுதி பஞ்சமுகங்களோடு சிவம், மனோன்மணி சத்தியுடன் கூடி ஆன்மாக்களை ஆட்கொள்ளுதலின் சதாசிவமாகிய மன்னை என்றது.

தன்னை உன்னத்தகும், மன்னை உன்னத்தகும். பாசத்தை உன்னத்தகும் எனத் தனித்தனியே கூட்டுக.

மாசற்ற வீட்டினை முன்னைப் பழமலக்கட்டை எனக் கூட்டி முத்திநிலையை. பெத்தநிலையை எனப்பொருள் கொள்க.

உன்னத்தகும் என்ற செயப்பாட்டு வினைமுற்றுக்கு உபாயம் எழுவாயாதல் காண்க. சுத்தசைவர் உபாயமாகத் தன்னை உன்னத்தகும் மன்னை உன்னத்தகும் என்பன வாதியவற்றைக் கூட்டி முடிக்க. **(14)**

**பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போத**
**மாரண மந்த மதித்தானந் தத்தோடு**
**நேரென ஈராறு நீதி நெடும்போகம்**
**காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே** **1433**

இம் – எனின் : சிவபோகம் காட்சியாமாறும் அதற்குரியாரும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : குறைவிலா நிறைவாக உள்ள சிவபரம் பொருளிடத்தில் சித்தத்தை வைத்துப் பழகிய சிறப்பால் ஆன்மபோதமற்ற - பதிபோதக் காட்சியால், வேதாந்த

விசாரம்பண்ணி, விகற்பஞானமும், விரோதஞானமும் அற்ற ஆனந்தத்தோடு, முறைமையென்று பாராட்டப் பெறும் துவாதசாந்தப்பெருவெளியில் நுகரப்படும் சிவபோகம் சுத்தசைவர்கட்குப் புலனுவதாம் என்றவாறு.

வேதமாகிய ஞான நூல்களைப் பசுபோத நிலையி லிருந்து ஆராய்ந்து தாம் கண்ட முடிபே முடிபெனக் கூருது, பதிபோதநிலையிலிருந்து திருவருள் காட்டிய வழியே நின்று உணர்ந்து, அநுபவத்திலழுந்தி ஆனந்த நுகர்ச்சியோடு, துவாதசாந்தத்தில் நுகரப்படுவதே சிவபோகம் என்றவாறு.

இந்த மந்திரம் தற்போதத்திஞல் வேதாந்தங்களை அறிந்து, நானே பிரமமென எண்ணி இருப்பாரையும், யோகமே முத்தியென மயங்குவாரையும் மறுத்துத் தெளிவித்தவாறு. (15)

**மாருத ஞான மதிப்பற மாயோகம்**
**தேருது சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்**
**பேருன பாவனை பேணி நெறிநிற்றல்**
**கூருத ஞானி சரிதை தறிக்கிலே.** 1434

இ‌ம் – எனின் : ஞானத்தில் சரியை இதுவெனல் நுதலிற்று.

இ – ள் : ஞானியியற்றும் சரியைகளை ஆயுமிடத்து, என்றும் மாருத பரஞானத்தில் உள்ள மதிப்புக் கெட யோகநிலையே பெரிதெனத் தெளியாது, சிந்தையைத் தெளிவித்து, சித்தத்தை அங்கு ஆக்கி, சிவோகம்பாவ னையிலே நிலைபெறுத்தி, அதில் பிழையாது நிற்றலே விதிக்கப்பெற்ற பகுதியாம் என்றவாறு.

ஞானத்தை அவமதித்து, யோகநிலைதான் பெரி தென்றிராமல், சித்தம் சிவமாக்கி, செய்வனவே தவ மாக்கிச் சிவோகம்பாவனை பண்ணி அவ்வநுபவத்தில் பிறழாமல் இருப்பதே ஞானியின் சரியைப்பகுதியாம் என்பது கருத்து. (16)

**வேதாந்தங் கண்டோர் பிரமவித் தியாதரர்**
**நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்**
**வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர்**
**சாதா ரணமன்ன சைவர் உபாயமே 1435**

இம் – எனின், பிரம வித்து, யோகி, சித்தாந்தி இவர்களியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: வேதாந்தம் உணர்ந்தவர்கள் பிரமவித்தை அறிந்தவர்கள் ஆவர்; நாத தரிசனம் செய்தவர்கள் யோகிகளாவர்; வேதாந்தச்சார்பில்லாத சித்தாந்த அநு பவமுடையோர் சாதாரண நிலைபேறுடைய சைவ ராவர், இதுவே இவர்களின் வேறுபாட்டினை உணரும் உபாயமாம் என்றவாறு.

... வேதாந்தம் – காணப்படுவன யாவும் மித்தை; கானல்நீர் போன்றது; நிலையான ஆனந்த மயமானது பிரமமாகிய சீவன் ஒன்றே; அது ஆவரண விட்சேபங் கள் நீங்கித் தன்னை யுணர்ந்து, தானன்றி ஒன்றில்லை என்று இருத்தலே ஆனந்தம் என்பது. இந்நிலைமையை உணர்வார் பிரமவித்தியாதரர்.

நாதாந்தம் – ஒலியின் முடிவு. சகஸ்திராரம் என்னும் துரியத்தில் ஒலி சூக்குமவடிவாய் இயக்கி, இயங்கி நிற்பதைத் தரிசித்தல், இதனைக் கண்டவர்கள்

யோகிகள். வேதாந்தம் இல்லாத சைவசித்தாந்தம் - சித்தாந்தமும் வேதமுடிபாயினும் இங்ஙனம் கூறியது, தற்போத நிலையினின்று தானே பிரமமெனக் கூறும் அவசித்தாந்தச் சார்பில்லாததே சைவசித்தாந்தமென் பதை விளக்க. காணுதலாவது அநுபவித்தறிதல்.

அழுந்தி அநுபவித்து அந்நிலையிலே பிழையாது எஞ்ஞான்றும் விளங்கும் ஞானியர்களைக்காட்டிலும் அந்நிலையைக் கண்டு அதினிற்கும் சாதகர் சாதாரண மானவர்களாதலின் சாதாரணமன்ன சைவர் என்று அருளியது. (17)

**விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்**
**கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்**
**எண்ணினைச் சென்றணு காமனனப்படும்**
**அண்ணலைச் சென்றணு காப்பசு பாசமே.** *1436*

இம் - எனின், இறைவனைப் பசு பாசங்களணுகா என்பது உணர்த்துல் நுதலிற்று.

இ - ள் : பெரிய மேகங்களும் எல்லையற்ற ஆகாயத் தைச் சென்றணுகா; காணப்பெறும் பல காட்சிகளும் கண்களைப் பொருந்தா; அதுபோல; பசுக்களின் எண் ணங்களைச் சென்றடையாத மன்னனாகிய அண்ணல் சிவத்தையும் பசுவின் பாசங்கள் சென்று அணுகா என்றவாறு.

மேகங்கள் எவ்வளவு பெரியனவாயினும், அகண்ட மாய் ஈறும் முதலும் எல்லை காண்பரிதாயுள்ள ஆகா யத்தைச் சென்றணுகா; ஏகதேசமாய் இருக்கும். கண்

சென்று பற்றுவதல்லது, காட்சிப்பொருள்கள் கண்ணை வந்து பற்ற; அதுபோல, இறைவன் பசுபோதமான எண்ணத்தைப் பற்றான. பசுக்களின் பாசத்தால் விளைந்த அறிவும், அவனைச் சென்றடையா என்பதாம். ஆகவே இறைவன் பாசஞான, பசுஞானங்களான் அறியப்பெறான்; சிவஞானம ஒன்றனே சிந்தித்து உணரத்தக்கவன் என்பது கருத்து. (18)

**ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக**
**நின்று சமய நிராகார நீங்கியே**
**நின்று பராபரை நேயத்தைப் பாதத்தால்**
**சென்று சிவமாதல் சித்நாந்த சித்தியே. 1437**

இம் – எனின், சித்தாந்த முத்தியின் சித்தியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: ஒன்றென்னும் கேவலாத்துவித நிலையும், இரண்டென்னும் துவைதமும், சூன்யமும் இன்றி சிவமும் சீவனுமாகிய இரண்டு பொருளும் கலப்பால் ஒன்றாகவே நிற்றலாகிய சுத்தாத்துவித பாவனையில் நின்று, சமயநிந்தனை விட்டு, சத்திநிபாதத்தால் நேய மாகிய சிவத்தைச் சார்ந்து சிவமாதலே சித்தாந்தத்திற் பெறப்படும் சித்தியாம் என்றவாறு.

அநுபவி, அநுபவத்திலே திளைத்தலன்றிப் பிற சமயங்களை நிந்திக்கும் பேதஞானமும் மடங்கியவனா தலின் சமயநிராகாரம் நீங்கி என்றது. பராபரை பாதத் தால் நேயத்தைச் சென்று எனக் கூட்டுக. பராபரை பாதம்-சத்திநிபாதம். நேயம்–அறியப்படு பொருளாகிய சிவம். சிவமாதல் – சிவத்தோடு கலத்தல். (19)

## 4. கடுஞ்சுத்த சைவர்

ஞானம் முதிரவே, வேடாதிய சாதனங்களிலுள்ள பற்றும் தானே கழலுமாதலின், அவை நீங்கி ஆடம்பரமின்றி, மலமாயை கன்மங்களின் நீங்கிய சிவபோதக நிலை கடுஞ்சுத்த சைவமாம். இதனியல்பை வருகின்ற மந்திரத்தானுணர்க. முன்னதிகாரத்து மார்க்க சைவமுணர்த்தி அதினிற்சிறந்த கடுஞ்சுத்த சைவம் உணர்த்துகின்றது இவ்வதிகாரம் ஆதலின் அதிகார இயைபும் தானே விளங்கும்.

**வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி**
**ஆடம் பரமின்றி ஆசாபா சஞ்செற்று**
**பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்**
**சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே** 1438

இ-ம் - எனின், சுத்தசைவரின் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புறத்தணியுஞ் சாதனங்களாகிய வேடங்களின் பற்றைக் கடந்து விகிர்தராகிய பரசிவத்தினிடம் சார்ந்து, உலகியல் ஆடம்பரங்கள் சிறிதேனும் இன்றி, அகப்பற்று புறப்பற்றுக்களாகிய கட்டுக்களை நீக்கி துன்பங்களோடு கூடிய பாசமும், பசுத்தன்மையுங் கெட, அடித்துத் தொலைக்கும் சிவஞானம் பெற்றோரே சுத்தசைவராவார் என்றவாறு.

வேடம் - விபூதி உருத்திராக்கம் முதலிய புறச்சாதனங்கள். அவற்றைக் கடத்தலாவது சாதனங்களே முத்தி தருவன என்னும் உறுதியைக் கடந்து, பத்தியமிருத்தல் நேரே நோய்நீக்கக் காரணமாகாமல்,

பருந்தின் வல்லமை பெருக்கக் காரணமாதலைப்போல, இச்சாதனங்கள் சிவஞானம் பெறுதற்கு வாயில்களே என்றுணர்தல்.

விகிர்தன் - எல்லாவற்றையும் வியத்தகுநிலையில் வேறுவேறாகச் சிருட்டித்துக் காத்துத் தன்னுள்ளே அடக்கிக்கொள்பவனாகிய பரசிவம். மேவுதல் - விரும்பியடைத்தல், விகிர்தன்பால்மேவி - அவனையே தாரகமாகச் சென்று பற்றி என்பதாம்.

ஆடம்பரம் - பலர் கண்டு பாராட்டுமாறு சொல்லானும், செயலானும், உடையானும், வேடத்தானும் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளுதல். அஃதின்றி என்றது 'என்கடன் பணி செய்துகிடப்பதே' என்றும், ஏழையில் கிடத்தலென்றும் அநுபூதிமான்கள் கூறியருளியநிலையில் பித்தர் பேயர்போல் நிற்றல்.

ஆசாபாசம் - பற்றுகிய கட்டு. செற்று என்றது மீட்டும் அங்குரியாதவாறு அழித்து. பாடு - துன்பம் பாடென்று பாசம் - பிறவித் துன்பத்தைப்பொருந்திய பாசம். பாசங்களே பிறவிக்கு ஏதுவாயிருத்தலின் இவ்வண்ணம் அருளியது.

பசுத்துவம் - சீவபோதம், பசு நித்தியமாதலின், அதன் தன்மையைப் பாழ்படுத்தியதாம், ''பசு வேட்டு எரியோம்பும் சிறப்பர்'' என்றதும் இக்கருத்தினதாதல் தெளிக.

சிவபோதகர் - சிவஞானியர், அன்றிச், சிவத்தை அறிவிக்கும் ஆசாரியமூர்த்திகளுமாம் (20)

**உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்தும்**
**மடலான மாமாயை மற்றுள்ள நீவப்**
**படலான கேவல பாசந் துடைத்துத்**
**திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே. 1439**

இ‌ம் - எனின், சித்தாந்த நெறி இதுவாகும் என்ற வரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

இ - ன்; மாறுபடுவதான முப்பத்தாறு தத்துவங்களும், இவை தோற்றுவதற்கு மடலாக இருக்கும் சுத்தமாயையும் மற்றுள்ளவான கன்மம் முதலியவற்றை ஒழிக்க, அதனுல் படலம்போல ஆன்மாவின் அறிவை மறைப்பதான சகசமலமாகிய ஆணவத்தைத் துடைத்து, மீட்டும் அவ்வாணவத்தைச் சாராது திட ஞானத்துடன் சிவபரம்பொருளைப் பொருந்துதலே சித்தாந்தமார்க்கமாம் என்றவாறு.

உடல் - நிலைக்களன், எல்லாவற்றிற்கும் நிலைக்களனுன பூமி முதல் குடிலை வரையுள்ள முப்பத்தாறு தத்துவங்களையும்.

ஐந்தையும், ஓர் ஆறும் ஐந்தும் ; ஆறும் ஐந்தும் - ஆறுடன் உறழ்ந்த ஐந்து - முப்பது. அதனுடன் ஒன்று முப்பத்தொன்று, ஐந்தையும் - முப்பத்தாறையும் என்றது தத்துவங்களை.

மடல் - கூட்டம் மாமாயை - சுத்தமாயை. மற்றுள்ள என்று குறிப்பித்தது நுகர்ச்சியால் கழிவதாகிய கன்மமலத்தை.

படல் இதுபடலம் என்பதன் கடைக்குறை ; மறைப்பு. “ ஆணவமான படலம் ” என்றது காண்க.

கேவலபாசம் தணித்த - இணையற்ற கட்டு. அது சகச மலமாகிய ஆணவம். திடமாய் என்றது மீட்டும் மல வாசனையாக வந்த தாக்காதவாறு என்பதையாம்.

தன் - சிவம், "தமையுடைய தன்னுணர்வார்" (சிவஞானபோதம் அவையடக்கம்.) "தன்னாலே தனை யறிந்தால்" (சிவப்பிரகாசம் - உண்மை, 22,) என்பன இப்பொருட்டாதலை விளக்குவன. (21)

**சுத்தச் சிவனுரை தானதில் தோயாமல்**
**முத்தர் பதப்பொருள் முத்திவித் தாமூலம்**
**அத்தகை யான்மா அரனை அடைந்தத்தால்**
**சுத்த சிவமாவ ரேசுத்த சைவரே.** 1440

இம் - எனின், சுத்த சைவர்களின் அநுபூதிநிலை இதுவாமென அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: அநாதிநித்த சுத்தராகிய பரசிவத்தால் ஆகமவாயிலாக உரைக்கப்பெற்ற பதமுத்திகளைச் சேராமால், முத்தர் என்னும் அப்பதத்திற்குப் பொருளான முத்திக்கு விதையாகிய மூலத்தை அடைந்த அத்தகைமையை யுடைய ஆன்மா சிவபரம் பொருளைச் சார்ந்து, அதனால் சுத்தசிவமாக வீற்றிருப்பவர்களே சுத்த சைவராவர் என்றவாறு.

சரியையாதி நிலைகளின் ஒழுகிய ஆன்மாக் களுக்கு முறையே சாலோகாதி பதமுத்திகள் உண்டா மென்று சுத்தசிவம் ஆகமங்களில் கூறினமையான், அப்பத முத்திகளைச் சாராது என்பதாம். உரை - ஆகமம்; ஆகுபெயர். தானம் - பதம்.

முத்தர் — முத்தியைப்பெற்றவர். இதனையே முத்தர் என்னும் பதத்திற்குப் பொருளாகிய முத்தி என்றது. வித்தாம் மூலம் — சாயுச்சிய முத்திக்கு வித்தாகிய மூல மந்திரம்; சீபஞ்சாக்கரம, சீபஞ்சாக்கரமாகிய சாதனத்தைக்கொண்டு சிவத்தைச் சேர்ந்த ஆன்மாவாக, சுத்த சிவமாகி விளங்குபவரே சுத்தசைவர் என்பதாம். (22)

**நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே**
**தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதம்**
**தானென்று நானென்ற தத்துவம் நல்கலால்**
**தானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே** *1441*

இம் — எனின், சாதகநிலையும் அதனது பயனும், அநுபவமும் முறையே உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: அறிபவனாகிய நான் என்றும், அறியப் படுபொருளாகிய சிவம் என்றும் ஆராய்ந்து, அடியேன் சிவத்தைச்சார, சிவம் சீவன் என்ற இரண்டற்ற — ஒன்றான தற்சிவம், 'தானே நானாகிய நீ' என்ற உண்மையை உணர்த்தியதால், அவ்வழியினின்று அடியேன் ஞாதிருஞேயமாகிய இரு பொருளாகச் சொல்லும் ஆற்றலையும் கெட்டேன் என்றவாறு.

நான் என்றும் ... சாரவே — இது கற்கண்டு, நான் சுவைப்பவன் என்று வேறாக இருந்துகொண்டு நுகரத் தொடங்கி யனுபவிக்க இறைவனைச் சார்ந்தபொழுது தான் என்று...தற்பதம் — சிவசீவனாகிற பொருள் இரண்டற்ற ஒப்பற்ற தத் என்னும் பதப்பொருளாகிய சிவம். தான் — தத் என்று, நான் துவம் என்ற தத்துவம் நல்கலால் — அது நீயாகிறாய் என்கிற உண்மை யநுபவத்தை உதவியதால், அவ்வநுபவத்தினின்று உறைத்த

நான். இது சிவம் இது சீவன் என்று சொல்ல ஒண்ணுத அநுபவம் பெற்றேன். ஆதலால் என் உரை அவிந்தது என்பதாம். (23)

சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற் தும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே 1442

இம் - எனின், சிவோகம்பாவனையின் பயனுணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : அவ்வண்ணம் சொல்ல இயலாததாகிய உண்மை கைவரப்பெறின், பொறுத்தற்கு அரியதாகிய ஐம்புலன்களும் அடங்கும். மேலிடமாக விளங்குகின்ற சிவஞானம் விளக்குச்சுடர்போல அசையாது ஆடாது நின்று எரியும். அப்பால், அதன் பயனாகு பரசாயுச்சிய மாகும் பதிப்பொருள் ஆம் என்றவாறு.

சாற்றரிதாகிய தத்துவம் என்றது அநுவாதம். 'அவனே தானேயாகிய' அந்நெறி சித்தித்தால் புலன் ஒடுக்கம் உண்டாம்; உண்டாகவே எழுதிய விளக்குப் போல் ஞானம் பிரகாசிக்கும்; அப்பால், பரசாயுச்சிய மாகிய ஏகனுகிநிற்றல் விளையுமென்பதாம். (24)

5. சரியை

நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்
றுய்ந்திடுங் காலங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே. 1443

இம் - எனின், சரியையினியல்பும் அதற்கதிகாரி களாவார் இவர் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முத்திக்கு வழியாகிய சரியைநெறி இது வென்று, வேதாகமங்களை ஆராய்கின்ற காலாங்கி, கஞ்சன், மலையமான், ஒன்றியிருந்து ஆராயும் கந்துரு, முதலானவர்களே ! கேளுங்கள். இப்பூவுலகில் சுத்த சைவராவார்க்கு உயிர்போல்வதாய நெறி இச்சரியையே யாகும் என்றவாறு.

ஏனைய வெளிப்படை. (25)

**உயிர்க்குயி ராய்நிற்றல் ஒண்ஞான பூசை**
**உயிர்க்கொளி நோக்கல் மகாயோக பூசை**
**உயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை**
**செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே.** 1444

இம் - எனின், ஞானம் முதலிய நால்வகைப் பூசைகளின் இயல்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உயிருக்கு உயிராக இறைவன் ஒன்று யிருத்தலை உணர்தல் சிறந்த ஞானபூசையாம் ; உயிர்க்கு ஒளிதருகின்ற பொருளாக இறைவனைக் காண்டல் பெரிய யோக பூசையாம் ; வெளியே மூர்த்தியினிடத்து பிராணப்பிரதிட்டையாகிற ஆவாகனம் செய்தல் புறப் பூசையாம் ; இறுதியாக அம்மூர்த்தியை அன்புடன் பூசிப்பது சிவபூசையாம் என்றவாறு.

இவ்வண்ணம் ஞானபூசை, யோகபூசை, புறப்பூசை சிவபூசை ஆகிய இவைகளின் இலக்கணம் உணர்க என்பதாம். (26)

**நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்**
**தேடித் திரிந்து சிவபெரு மானென்று**
**பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்**
**கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே 1445**

இ-ம் - எனின், மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கின், இறைவன் என் மனத்திலுள்ளான் என்ற உறுதி பிறக்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நாடு நகரம் கோயில்கள் இவற்றைத் தேடியலைந்து, அங்கங்கே இருக்கின்றான் இறைவன் என்று பாடுமின் ; பணிமின் ; அங்ஙனம் பணிந்தால் இடையீடின்றி இறைவனடியிற் சேர்ந்த நெஞ்சத்தை இறைவன் தனக்குக் கோயிலாகக் கொண்டருளுவன் என்றவாறு.

தலயாத்திரையின் அனுபவம் " கயிலாயத்து உச்சியுள்ளான் அவன் என்கண் உளானே " என்றஉணர்வு பிறக்கும் என்பதாம்.

(27)

**பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்**
**அத்தகு தொண்டரருள்வேடத் தாகுவோர்**
**சுத்த இயமாதி சாதகர் தூயோகர்**
**சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே 1446**

இ-ம் - எனின், நெறிகளும் அவற்றில் நிற்பாரும் எய்தும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சரியைக்கண் நிற்போர்கள் பத்தர்கள் ; அன்போடு சிவவேடந்தாங்கித் தொண்டு செய்வோர் கிரியையில் நிற்போர்; தூய இயமம் நியமம் முதலான

அட்டாங்க யோகங்களைச் சாதிப்பார் சுத்தயோகியர்; சிவஞானம் பெற்றவர்கள் சித்தர்கள என்றவாறு. (28)

**சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர்**
**சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோர்**
**ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்**
**நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே. 1447**

இ-ம் — எனின், இதுவுமது.

இ-ள் : உண்மைஞானம் பெற்றவர்கள் அவனே தானே ஆனவர்கள்; சமாதிக்கண் சித்தியடைந்தோர் நேர்ந்த அட்டாங்கயோகம் உடையவர்கள்; ஆராய்ந்த கிரியையோர் சிவார்ச்சனை தவறாமல் செய்பவர்கள்; சித்திபெற்ற சரியையோரவார் இப்பூமிக்கண்ணராய் ஞானபூமியிலே சஞ்சரிப்போர் என்றவாறு.

இது. சைவர் சரியை முதலிய நாற்பாதத்திலும் நின்று பழகுவர் என்றது.

**கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை**
**அரிய சிவனுரு அமரும் அருபம்**
**தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை**
**உரியன நேயத் துயர்பூசை யாமே. 1448**

இ-ம் — எனின், நெறிகளான் நான்காய பூசைகளும் அவற்றின் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : கிரியையும் யோகங்களும் நினைத்தற்கு அரிய சிவபெருமான் உருவாக அமரும் காட்சியை அளிக்கும்; மிக்க ஞானபூசையானது அருவத்தைக்

காட்டும் ; பரிபாக காலத்துத் தெளிவிக்கும் பூசையானது நேயமாகிய சிவபரம்பொருளுக்கு உரியனவாக உயர்ந்த பூசையாம் என்றவாறு.

கிரியை யோகங்கள் அரிய சிவனுரு அமரும் ; கிளர்ஞான பூசை அருபம் தெரியும் ; பருவத்துத் தேர்ந்திடும் பூசை நேயத்துரியன உயர் பூசையாம் எனக் கூட்டுக.

கிரியை யோகங்கள் உருவ வழிபாடாகிய சாகார பூசையாம் ; ஞானபூசை நிராகார பூசையாம் ; நேயப் பொருளோடு ஒன்றி உரியனவாம் பூசையே உயர் பூசையாம் என்பது கருத்து. (30)

**சரியாதி நான்குந் தருஞானம் நான்கும்**
**விரிவான வேதாந்த சித்தாந்தம் ஆறும்**
**பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து**
**மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே.** 1449

இம் - எனின், சரியையாதி சமயமார்க்கங்களை இறைவன் அதிகாரிபேதம் நோக்கி அருளினன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சரியை முதலான நான்கு நெறிகளும் நல்கும் ஞானம் நான்கும், விரிவான வேதாந்த சித்தாந்த நூல்கள் தரும் நெறிகள் : அவ்வாறையும், மக்களுக்கு அறியத்தக்க பொருளாக அமைந்தது : சிவபெருமான் அழகிய பூமிக்கண் ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளி; ஆணவமல மயக்கத்துள் அழுந்திய மக்கள் வணங்கி ஈடேற அருளினன் என்றவாறு.

சரியாதி தருஞானம் நான்கு – சரியையில் ஞானம், கிரியையில் ஞானம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என்பன.

வேதாந்தம் ஆறு : காபிலம், காணுதம், பாதஞ்சலம் அட்சபாதம், வியாசம், ஜைமினியம் என்பன.

சித்தாந்தம் ஆறு : பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன.

பொருளானது – உயிர்கட்கு ஈடேறும் உபாயப் பொருளாக அமைந்தது.

மருளாகும் மாந்தர் – அநாதியே மூல மலத்தால் மறைப்புண்டு மயங்கிய ஆன்மாக்கள். (31)

**சமையம் பலசுத்தித் தன்செயல் அற்றிடும்**
**அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி**
**சமைய நிருவாணங் கலாசுத்தி யாகும்**
**அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே. 1450**

இம் – எனின், சமய முதலிய தீட்சைகளின் இலக்கணமும் பயனும உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; சமய தீட்சையாவது பற்பல வகையில் ஆத்மசுத்தி செய்வதாம். அதன் பயன் தன் சுதந்திரம் கெடுதலாம். பொருந்திய விசேட தீட்சையாவது சிவ பெருமானுடைய மந்திரங்களைச் சுத்தி செய்வதாம் ; நிர்வாண தீட்சையாவது கலைகளைச் சுத்திசெய்தலாம். திருவருட்சத்தி நிலைபெற்றஞானநெறி அஸ்திராபிஷேக மாகிற ஆசாரியாபிஷேகமாம் என்றவாறு.

சமய தீட்சையாவது சிவோகம்பாவனை செய்கிற ஆசாரியன் சீடனைச் சமயாசார சீலங்களுக்குத் தகுதியுடையனுக்குதற்குக் குண்டமண்டலங்களைப் புறத்தேயிட்டு, அவனது மலங்களைப்போக்கி, மூலமந்திரத்தை உபதேசித்து, யாககுண்டத்தினருகில் இருத்தி, நாடிசந்தானம் முதலியன செய்து, தன்னுயிர் சீடனுடலிற் புகுந்து அவனுயிரோடு ஒன்றி அவனுயிரைப் புனிதமாக்கியதாகப் பாவித்து, மீட்டும் தன் ஆன்மாவை வாங்கித் தன்தேகத்தில் இருத்தி, சீடனே! நீ சாமான்ய சமயியாக இருப்பாய், குருவுக்கும், சிவனுக்கும் பணிவிடை செய்யத் தகுதியுடையவனாகின்றாய்! உடல் வீழ்ந்தபிறகு சிவசாலோக முத்தியடைவாயென்று உபதேசித்துச் செய்யப்பெறுவது. ஞானவதி முறையாயின் சிவோகம் பாவனையிலிருந்தபடியே தன் கையைச் சிவனுடையதாகப் பாவித்து, அவனுயிரைத் தூய்தாக்கி, மேற்கூறிய எண்ணம் அவனை அரன்பணிக்கும் அடியார் பணிக்கும் ஆளாக்குதலாம். இம்முறையினால் சமயி லௌகிகன் என்றும், சிவாச்சிரமி யென்றும் இரண்டு வகைப்படுவன். லௌகிகன் கிரியாவதியால் தீட்சை பெற்றவன். சிவாச்சிரமி ஞானவதி முறையால் தீட்சை பெற்றவன். இருவருக்குமே பின்கண்ட உபதேசம் ஆசாரியனால் அருளத்தக்கவை.

'சீவனே! நீ பிறர்மனை விழைதல், பிறர் பொருள் விரும்புதல், தீங்கெண்ணல், செய்யத் தகாதவற்றைச் செய்தல், பொய் கூறல், தீயது செய்தல், கடுஞ்சொல் சொல்லல், பிறர்பழி கூறல், உலோபம், புலால், கள் முதலிய உண்டல் முதலான குற்றங்கள் இன்றி, மனம் வாக்குக் காயம் மூன்றுனும் தூயனாய், திருவலகிடல், மெழுக்கிடல், பூ மாலை புனைதல், நந்தவனம் சமைத்தல்

முதலான சிவப்பணிகளையும், அடியார் பணிகளையும் செய்துகொண்டு சிவசிந்தனை மறவாது இரு, என்று உபதேசிக்க ( சிவாக்கிரபத்ததி. பக்160 )

விசேட தீட்சையாவது, சமயதீட்சை பெற்றுச் சமய ஆசார சீலனுய்ப் பழகித் தெளிந்த சீடனுக்குச் சம்ஸ்காரங்கள் செய்து மூலமந்திரத்தைப் பிரங்களுடன் உபதேசித்து, சரியை கிரியையும் யோகப்பயிற்சியும் சேர்ந்த சிவபூசையைச் செய்து கொண்டு முற் கூறியவாறு இருக்க எனத்தீட்சிப்பது. இதன் விதி முறைகளை அசிந்திய விசுவசாதாக்கியம் முதலியவற்றிற் காண்க. இதன் பயன் தேகாந்தத்தில் சாமீபமுத்தியாம்

நிர்வாண தீட்சையாவது சாந்தியதீதை, சாந்தி, வித்தியா, பிரதிஷ்டை, நிவிர்த்தி என்ற கலைகளைச் சோதித்துக் கழித்து, சுத்தி செய்து, சிவோகம்பாவனை செய்யும்வண்ணம் உபதேசித்தலாம். இதனின்றுஞ் எய்துவது சாரூபமுத்தியாம். இதுவும் இருவகை.

அபிஷேகமாவது நிர்வாணதீட்சை பெற்று,

யஸ்ராஜவ்ஞ ஜவெக்ஷிஷ்வாஂ கூக்ஷெஸ்ஷ்;ஶஂ வஶு தெவஶு.கா

க்ஷிஸெஷஂ ஹவெத்தூஅ உாதூாத ஶு ஶாீாதூதி ॥

என்று சொல்லியவண்ணம் சிவோகம்பாவனையிலே முற்றிய ஞானவானுன சிஷ்யனுக்குத் தன்னைப்போல் தீட்சிக்கும் அதிகாரத்தையும், அதற்கேற்ற அங்கங்களையும் நல்கி நீ ஆசாரியனுகுக என அபிஷேகம் செய்வது, இதுவே திருவருட்சத்தியில் நிலைக்கச் செய்வதாம். தன் செயலறுதல் - எல்லாம் சிவன் செயலே என்று இருத்தல். ( 32 )

## 6 கிரியை

மேலே கூறியவண்ணம் சரியையில் பிழையாது ஒழுகியவன் சிவபத்தி முதிர " இவரலாதில்லை பிரானர் " என்ற உறைப்புடன் விதிப்படி விசேடதீட்சை பெற்று இறைவனைப் பூசித்தலே கிரியையாகும்.

**பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்**
**டெத்திக்கி லவரில்லை என்ப தின்மலர்க்**
**கொத்துத் திருவடி நீழல் சரணெனத்**
**தத்தும் வினைக்கடல் சாராது காணுமே.** 1451

இம் - எனின், கிரியையின் இலக்கணமும் பயனு முணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பத்துத் திசைகளிலும் பரசிவம் வியாபித் திருக்கிறது. 'எத்திக்கில் அப்பரசிவம் இல்லை' என்ப தால் பூங்கொத்துக்களால் அர்ச்சித்து அவன் திரு வடியே புகலிடமென்று உறுதிகொள்ள மேன்மேலும் தாவிவருகின்ற வினையாகிய கடல் இவ்வான்மாவைச் சாராது. இதனை நீர் அநுபவத்தில் காணும் என்றவாறு.

பத்துத் திசை - நேர்த்திசை நான்கும், கோணத் திசை நான்கும், விண்ணும் மண்ணுமாம்.

எத்திக்கிலவரில்லை என்று பாடங்கொண்டு இறைவன் எத்திக்கின்கண் இல்லாதவர் என்றுரைத்து இல்லை யென்பதற்குப் பொருளுணரமாட்டாது இடர்ப் படுவாருமுளர். ஆதீன ஏட்டில் ' எத்திக்கி லவரில்லை ' என்ற பாடங்கண்டு திருவருள் துணையை வியந்தேம்.

என்பதின் - என்பதால். மலர்க்கொத்துத் திருவடி - பூங்கொத்துக்கொண்டு அர்ச்சித்த திருவடி.

சரண் என, வினைக்கடல், சாராது; காறும் என முடிக்க. (33)

**கானுறு கோடி கடிகமழ் சந்தனம்**
**வானுறு மாமல ரிட்டு வணங்கினும்**
**ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது**
**தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.** 1452

இம் - எனின், சிவோகம்பாவனையில்லாத வெறுங் கிரியை பயன்படாதெனல் நுதலிற்று.

இ - ள்: காட்டின்கண் விளைந்த பலவான மணம் வீசுகின்ற சந்தனம், ஆகாயத்தை அளாவி வளர்ந்துள்ள மரங்களில் பூத்தமலர் இவைகளை இனிக்கச் சாத்தி வணங்கினும், உடற்பற்றைவிட்டுத் தியானிப்பவர்க் கன்றி, தேனொடுகூடிய பூக்களையணிந்த திருவடியைச் சார முடியாது என்றவாறு.

பூசைப்பொருள்களைக் கொண்டு பூசிப்பதாற் பயனில்லை. உடற்பற்றற்று உத்தமனைத்தரிசிக்க வேண்டும் என்பதாம். பூங்குழல் எனப் பாடங்கொள்வாருமுளர். அப்பாடம் அத்துணைச் சிறப்புடைத்தன்று. (34)

**கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்**
**ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்**
**வானக்கன் றாகிய வானவர் கைதொழும்**
**மானக்கன் றீசன் அருள்வள்ள மாமே.** 1453

இம் - எனின், இதுவுமது.

இ-ள்: பசுவின் கன்றைப்போல இறைவனது திருவடியைப் போற்றுங்கள்; அவன் ஞானக்கண்ணாகி உங்கள் சுழுமுனைநாடியில் திரிவன். அப்போது உங்களைத் தேவருலகப்பசுக்களாகிய தேவர் கைதொழுவார்கள்; பெருமை பொருந்திய இடபவாகனத்தையுடைய இறைவன் திருவருளைத் தாங்கும் வள்ளமாகுங்கள் என்றவாறு.

வள்ளம் - கலம். ஆம் - ஆகுங்கள்: முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று. (35)

**இதுபணிந் தெண்டிசை மண்டல மெல்லாம்**
**அதுபணி செய்யின் றவளொரு கூறன்**
**இதுபணி மானுடர் செய்பணி யீசன்**
**பதிபணி செய்வது பத்திமை காணே. 1454**

இ-னின், இதுவும் கிரியை இலக்கணத்தை வேறொரு வகையான் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் முற்கூறிய உரையைப் பணிந்து ஏற்றுக் கொண்டு எட்டுத் திசைகளையும், மண்டலங்களையும் படைத்தலாதி பணிகளைச் செய்கின்றவளான பராசக்தியை ஒருபாகமுடையவன் விதிக்கின்ற பணி இதுவாம்; மக்கள் செய்யக்கூடிய பணியோ ஈசனாகிய பதிக்குச் செய்யும் பணியாகும்; அதுவே பத்தியின் தன்மையாம் என்றவாறு.

இது என்றது இறைவன் அருட்கலமாக விளங்குகின்றான் என முன் திருமந்திரத்திற் கூறிய உண்மையை. பணித்து - அவ்வுண்மையை இதுவே நமது கடமையென விரும்பி ஏற்று,

இது பணிந்து செய்வது, பதி பணி செய்தது பத்திமை காணே எனக் கூட்டுக.

சத்தி இறைவன் ஆணையின் வண்ணம் அண்டங்களையெல்லாம் படைத்தாதி செய்கின்றாளாதலின், மண்டல மெல்லா மதுபணி செய்கின்றவன் என்றது, சிவப்பணி செய்தலே சீவனின் கடமை; இதுவே பத்திமையாம் என்பதாம். ( 36 )

**பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்**
**சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்**
**உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தால்**
**சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே'** 1455

இம் - எனின், கிரியாவான் சிவமாக விளங்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று,

இ—ள்: அன்பனாகிய சீவன் சரியை கிரியைகளைப் பழகி இறைவன் செய்யும் தூய திருவருளால் குற்றமற்ற யோகத்தில் உற்ற ஆதாரங்களை முறையே அடைந்து, அங்கங்கே அடையப்பெறும் ஞானத்தால், குருவின் திருவருளால் சித்தம் சிவமாகி விளங்குவன் என்றவாறு.

சோபானக் கிரமமாக, நான்கு மார்க்கங்களிலும் நின்று, குருவினருளால் சித்தம் சிவமாகி விளங்குவன் என்பதாம். ( 37 )

**அன்பின் உருகுவன் நாளும் பணிசெய்வன்**
**செம்பொன் செய்மேனி கமலத் திருவடி**
**முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்**
**என்பினுட் சோதி இலங்குகின் றானே.** 1456

இ-ம் - எனின், கிரியையின் நின்ருரது அநுபவம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனிடத்துக் கொண்ட இடையீடில்லாத அன்பினால் மனம் உருகிக் கரைவன்; நாடோறும் திருப்பணிகளையே செய்வன்; அத்தகைய அநுபூதி மானுனை கிரியாவான், ஓடவிட்ட மாற்றுயர்ந்த செம்பொன்னாற் செய்யப்பெற்ற திருமேனியில் செந்தாமரைபோலும் திருவடிக்கு முன்னின்று விண்ணப்பித்துக் கொள்வது அடியேற்கு அருள்செய்ய வேண்டும் என்பதாகும்; அப்போது இறைவன் உடம்புள் சோதியாக விளங்கி, அருள்வழங்குவன் என்றவாறு.

அன்போடு சிவனைப் பூசிக்கும் கிரியாவான் இறைவன் முன்னின்று எனக்கருள் செய்க என வேண்டிக் கொள்வன். இறைவன் உடம்புள் ஒளியாய்க் காட்சி வழங்குவான் என்பது கருத்து. ( 38 )

## 7. யோகம்

யோகமென்பது மனத்தை இறைவனிடம் சேர்த்தலும், மூலாதாரத்துள்ள குண்டலினியோடு கூடிய பிராணனைத் துவாதசாந்தத்தில் விளங்கும் சிவத்தோடு சேர்த்தலுமாகிய இரண்டுமாம். இது முன்பு மூன்றாந் தந்திரத்தில் கூறப்பட்டது.

**நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்**
**தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்**
**சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்**
**குறியறி வாளர்க்குக் கூடலு மாமே.** 1457

பள்ளிகொள்ளும் மால், பிரமன் என்றுள்ளதேவர்கள் ஊழிக்காலம் மூமன்றும் அவர்களை நீங்கி விளங்குவன் என்றவாறு.

கண்ணப்பன் போன்றுற்த அறு நாளில் காணக் கிடைத்த சிவன் அரியும் அயனும் அவரவர்களுக்குரிய ஊழிவரையில் மூயன்றும் அறியப்படாதவன் என்றது. ஒருச்சி - நீங்கி; ஒருவி என்பதன் திரிபு. ஓர் + உச்சி யுளான் எனப்பிரித்து, ஒரு உயர்நத இடத்துள்ளான் எனலும் ஒன்று. **(40)**

**பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்**
**சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது**
**ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு**
**நாவி பணைந்த நடுதறி யாமே,** **1459**

இ-ன் - எனின், சிவஞானம் சீவனுக்குள் விளையும் முறை உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள்: பூவில் மணம் பொருந்தியவாறு போல் சீவனுக்குள் சிவமணம் விளைந்தது; இதனை எழுதப் பெற்ற சித்திரம்போல அசைவற்றுத் தியானித்திருந்து அறியவல்லார்க்கு அவர்கள் உயிர் புனுகு சேர்ந்த நடு தறிபோல ஆம் என்றவாறு.

புனுக்குப் பூனை அணைந்த மூங்கிற்குழாய் புனுகு மணம் பெறுதல்போல், சிவம் அணைந்த சிவன் மணை மாகிய சிவஞானம் பொற்று விளங்குகின்றது என்ப தாம். ஆகவே, ஆனந்தம் சிவனுடையதே: சிவன் சீவனிடம் எழுந்தருளிவந்து பொருந்துவதால் சீவன் சிவானந்தத்தைப் பெறுகின்றது என்பதாம்.

இம்மந்திரம் முத்திநிச்சயப்பேருரையில் பலவிடத்தும் எடுத்தாளப்பெற்றுள்ளமையும் ஆங்காங்கு இக்கருத்தே விளங்கிக் கிடப்பதும் காண்க (41)

**உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்**
**கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்**
**சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கிளுல்**
**முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே.** 1460

இம் – எனின், யோகத்தை விதிப்படி ஞானவேதுவாகச் செய்யின், பிறவி அறும் என்பதுணர்த்துதல் நுதலிற்று

இ – ள்: உய்ந்தோம் உய்ந்தோம் என்று வாய்ப்பறை சாற்றுவீர்! யோகத்தான் உறும் பொருளாகிய பரசிவதரிசனம் செய்கிலீர். மலரில் மணம்போல உயிருளுணர்வாகக் கலந்திருக்கின்ற பரசிவத்தைச் சிந்தை பொருந்தத் தெளிந்து, அறியாமை நீங்கப் பெற்ருல், முதற்ருெட்டு இடையருதுவரும் பிறவி நோய்க்கு மூலவிதையாகும் என்றவாறு.

பிறவிக்கு வித்தாகும் என்றது நோய்க்கு மருந்து என்புழிப்போலப் பிறவியை அறுத்தற்குரிய வித்தாகும் என்பது. அறியாமை நீங்குதல் பிறவிக்கு அணிவேராகுமென்றல் பொருந்தாமை உணர்க (42)

**எழுத்தொடு பாடலும் எண்ணெண் கலையும்**
**பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா**
**வழித்தலைச் சோமனே டங்கி யருக்கன்**
**வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே.** 1461

இ-ள்: பாசஞானத்தால் பிறவி நீங்காது; பதிஞானம் ஒன்றாலே நீங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இலக்கணமும் இலக்கியமும் அறுபத்து நான்கென்னும் கலைகளும் ஆகிய இவற்றால் விளையும் ஞானத்தால், பழிக்கண் தலைப்பட்ட பாசத்தால் விளையும் பிறவி நீங்காது; ஆதலால் முறைமையாக, சோம மண்டலம், சூரிய மண்டலம், அங்கி மண்டலம் இவற்றின் வழியாக இவற்றைப் பேதித்து, உயரச்செல்கின்ற யோக முறைமையை உணர்ந்தேன் என்றவாறு.

எழுத்து - இலக்கணம். பாடல் - இலக்கியம், இலக்கணம், இலக்கியம், கலைநூல்கள் யாவும் பாச ஞானங்களாம்.

> ***"வேதசாத் திரமிருதி புராண கலைஞானம்***
> ***விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலா***
> ***நாதமுடி வானவெலாம் பாசஞானம்"***

என்பதனாலும் உணர்க.

இறைவன் உயிரினிடமாக மலரின்கண் மணம் போல உணர்வாகக் கலந்திருப்பதை உணரின், ஆணவ காரியமாகிய அறியாமை நீங்கும்; அறியாமை நீங்கின் பிறவிக்கு மூலத்தை நீக்கும் மருந்து விதையாம் மென்பது கருத்து.

**(43)**

**விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ ராகும்**
**விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்**
**விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்**
**விரும்பிநின் றேசெயின் விண்ணவ னாகுமே** 146$_2$

இ-ள் – எனின், யோகத்தை விருப்புடன் செய்க என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : யோகத்தை உள்ளன்புடன் செய்யின் அதனால் செய்பவர் உன்னைத் தம்முடையவராக்கி, குருவுபதேசமாகிய தத்துவமசி மகாவாக்கியம் கிட்டும்; உண்மைத் தவம் உளதாம்; இடைவிடா மன்னில் மொழுப் விண்ணவனாகலாம் என்றவாறு.

யோகத்திற்கு விருப்பமும், அதனால் இடைவிடா தியற்றும் உறுதியும் தேவை என்பதாம். (44)

**பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்**
**காணில் தனது கலவியு ளேநிற்கும்**
**நாணில் நரக நெறிக்கே வழிசெயும்**
**ஊனில் சுடுமங்கி உத்தமன் தானே.** 1463

இ-ம் - எனின், யோகிக்கு இறை அருள் செய்யும் முறை உணர்த்தல் நுதலிற்று.

இ – ள் ; உடம்பினிடத்துச் சூடுபோல உயிருள் கலந்திருக்கும் உத்தமனாகிய பரசிவம், இடைவிடாது தியானிக்கில் வீட்டுலகை அளிக்கும் ; தரிசித்தால் அத்துவிதமாய்க் கலந்திருக்கும் கலவியாய் ஒன்றி நின்றருளும் ; இவ்வாறு எண்ணவும், காணவும் நாணமுற்றால் அவ்வான்மாக்களை நரகவழிக்கே செலுத்தும் என்றவாறு.

ஆகவே, இறைவனை இடைவிடாது எண்ணவும், காணவும் கூசுதலாகாது என்பதாம்.

**ஒத்தசெங் கோலர் உலப்பிலி மாதவர்**
**எத்தனை யாயிரம் வீழ்ந்தனர் எண்ணிலி**
**சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாம்**
**அத்தன் இவனென்றே அன்புறு வார்களே, 1464**

இ-ள் - எனின், யோகஞ் செய்தோர் பெற்ற பேறும் செய்யார் பெற்ற இழிவும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்' நேர்மையான செங்கோலரசர்கள், அழிவற்ற முனிவர்கள் எத்தனை ஆயிரம்பேர் அழிந்தொழிந்தனர்; எண்ணிலர். இதனை நன்கறிந்த சித்தர்களும் தேவர்கள் மூவரும் பெருமையளிக்கும் தலைவன் இப்பரசிவம் என்று உறுதிகொண்டு அன்புசெய்வார்கள் என்றவாறு. (46)

உலப்பு - கேடு.

**யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்**
**ஆகத் தகுகிரி யாதி சரியையாம்**
**தாகத்தை விட்ட சரியையொன் றொன்றுள்**
**ஆதித்தன் பத்தியுள் அன்புளைத் தேனே. 1465**

இ-ம் - எனின், தன் மேலிட்டு யோகியின் ஆசாரம் உணர்த்துதல் நுதலிற்று,

இ-ள்: யோகிக்கு யோகம் கிரியை சரியை என்ற மூன்று நெறிகளுள்ளன. மேற்கொண்டதால் சாலோக சாமீபம் பொருந்தினோர் ஆகத் தக்கனவாகிய சரியை கிரியைகளாம்; ஆசைவிட்ட சரியை அதன்மேலதாகிய கிரியைக்கு வழிசெய்வதாகும்; அதனின் மேலதாகிய

ஒன்றும் அதாவது யோகநெறியில் ஞான ஆதித்த னாகிய சிபரமேசுரனிடச்செய்யும் பத்தியுள் அன்பு வைத்தேன் யான் என்றவாறு.

யோகாதி மூன்று - யோகம் முதலான நிட்டைகள் மூன்று. அவற்றுள் மேற்கொள்ளுவதால் சாலோக சாமீப முற்றோராகத்தக்க சரியை கிரியைகளை மென்பது.

தாகத்தை விட்ட சரியை - நிஷ்காமிய சரியை, ஒன்றும் - அதன்மேலதாகிய சிவப்பணியென்னும் கிரி யைக்குத் துணைசெய்வதாம். ஒன்றுள் - அதன் மேல தாகிய யோகத்துள். ஆதித்தன் - சிவசூரியன், பத்தியுள் அன்பு வைத்தேன் - அன்பில் அன்பு செய்தேன். நேரே ஆதித்தனிடம் அன்பு செய்ய ஆன்மாவுக்குச் சுதந்திர மில்லை ஆதலின், அவனிடம் செலுத்தும் அன்பில் அன்புவைத்தேன்; அவன் தன்னிடம் செலுத்தும் அன்பைத் தந்தருளினான்; அதனை வழியாகப்பெற்று, அன்பு செலுத்தி அவனை அடைந்தேன் என்றார். (47)

**யோகச் சமயமே யோகம் பலவுன்னல்**
**யோக விசேடமே அட்டாங்க யோகமாம்**
**யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்**
**யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே.** 1466

இ - எனின், யோகதீட்சை முறைகளை உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள்: யோகநெறிச் சமயதீட்சையாவது பல யோக நெறிகளை எண்ணுதலாம், அந்நெறிக்கண்ணுள்ள விசேடதீட்சையாவது அட்டாங்கயோகம் செய்தலாம். யோக நிர்வாணமாவது பராதரிசனம் பெறுதலாம்.

யோக அபிஷேகமாவது எண்வகைச் சித்தியும் பெறுதலாம் என்றவாறு.

யோகம் பல என்றது ஹடயோகம் இராஜயோகம் சிவயோகம் என்ற பலவற்றை. அட்டாங்கயோகம் – இயமம் நியமம் ஆசனம் பிராணுயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்பன.

பரோதயம் – சமாதிக்கண்ணிருந்து சகஸ்ராரமாகிற ஆஞ்ஞாசக்கரத்தில் கோடிசூரியப் பிரகாசமான பராசத்தியைத் தரிசித்தலாம். ஒண் சித்தி – ஒளியைத்தரும் சித்திகள், அணிமா, அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. உறல் என்பது சந்தநோக்கி உற்றலே என விரித்தல் விகாரம் பெற்றது. ( 48 )

## 8. ஞானம்

அஃதாவது அறிவு. இது பரம்பொருளைச் சார்ந்து சிவானந்தத்தை எப்போதும் அனுபவிக்கச் செய்யும் பரஞானத்தையே ஈண்டு உணர்த்துகிறது. அதனைப் பத்துத் திருமந்திரங்களினுல் ஆசிரியர் திருமூலதேவர் உணர்த்தியருளுகின்ருர்.

**ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை**
**ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று**
**ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்**
**ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே.** 1467

இம் – எனின், ஞானத்தின் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானத்தில் சிறந்த அறநெறி ஒருநாட்டிலும் இல்லை. அதில் சிறந்த சமயமும் நன்றன்று; அதின்மிக்க நெறிகள பரமுத்தியைக் கொடுக்காவாம்; ஆதலால், ஞானத்தில் சிறந்து விளங்குகின்றவர்களே மக்களில் பெரியவர்கள் என்றவாறு.

ஞானக்கொள்கையே நன்மை பயப்பது; அஃது அல்லாதது நன்றன்று என்பதாம். (49)

**சத்தமுஞ் சத்த மனனுந் தருமனம்**
**உய்த்த வுணர்வும் உணர்த்தும் அகந்தையும்**
**சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ் செய்கையும்**
**சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. 1468**

இம் – எனின், நாத தத்துவத்தை அடைவது சன்மார்க்கம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நாதமும், நாதவடிவாய மனமும், தக்க அம்மனம் அடைவித்த புத்தியும், அஃது அறிவிக்கும் அகந்தையும், சித்தம் என்று முற்கூறிய மூன்றையும் சிந்திக்கும் செயலும ஆகிய இவைகள் நாதங்கடந்த ஞானியர் பெற்ற சன்மார்க்க நெறியாம் என்றவாறு.

அந்தக்கரணம் நான்கனுள் ஒலி வடிவானது மனம், அம்மனத்தான் அடைவிக்கப்பெறும் அறிவு புத்தி, இது நல்லது, இது கெட்டது என்று பொருளின் வேறுயிருந்து நான் இஃதறிந்தேன். அவர் இது செய்தார், செய்யார் என்ற முனைப்பு அகந்தை. இம்மூன்றையும் சிந்தித்துணர்வது சிந்தை. இவைகட்கு மூலகாரணமான நாதத்தை வென்றவரே ஞானிகள்; அவர்கள் நெறியே சன்மார்க்கநெறி என்பதாம். ( 50 )

தன்பால் உலகுந் தனக்கரு காவதும்
அன்பா லெனக்கரு ளாவது மாவன
என்பார்கள் ஞானமும் எய்துஞ் சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடும் தானே 1469

இ - ள் : ஞானி எய்தும் பேறுகள் இவை யென உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தன்னிடம் உள்ள கற்பனை உலகுகளும், தனக்கு அருகிலுள்ள பிரமாண்டங்களும், யான் செய்யும் அன்பால் அமையேற்ற அருளாகப் பரிணமிப்பதும் ஆகிய அனைத்தும் ஞானமும சிவோகமும் என்பார்; அங்ஙனமாட்டோர், பின்னர் நேயமும்பெறுவர் என்றவாறு

தன்பால் உலகு – ஆன்மாவாகிய தன்னிடமே கற்பனையால் எழும் உலகங்கள். அருகானவை பூமண்டலம், புவர்மண்டலம் முதலாயின.

அன்பால் – இறைவனிடம் செய்யும் இடையறாத அன்பால். அருளாயிருநது பேரின்பம் வழங்குவனவும் எல்லாம் ஞானமும் சிவோகமும் என்பர்.

சிவோகம் என்பது சிவம் நான் என்று ஞாதிருவும் ஞேயமும் வேறாக இருந்து உணர்தல். ஆகவே அறிவும், அறிவானும். அறியப்படுபொருளும் வேறாக இருந்துணர்தலே ஞானம் என்பர். இப்பயிற்சிமுதிரின், முதலில் அறிவானும் அறிவும் ஒன்றாய், சிவோகம் என்று அறிவானும் அறியப்படுபொருளுமாக இரு பொருளேயாய், பின் அதுவும் கழிய அறியப்படுபொருளாகிய சிவமேயாய் விளங்குவன் என்பதாம். (51)

**இருக்குஞ் சேம இடம்பிரம மாகும்**
**வருக்கஞ் சராசர மாகும் உலகம்**
**தருக்கிய ஆசார மெல்லாந் தருமே**
**திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே**

இ-ம் - எனின், ஞானியர் உறைவிடமும், அவர்கள் பெறுபயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவர்கள் எப்போதும் பார்ந்திருக்கும் சேமமாகிய இடம் பிரமப்பொருளாகிய பரசிவமாகும். உலகம் இயங்குவனவும் நிற்பனவுமாகிய வகைகளாம்: ஆகையால், உலகைக்கடந்த மேம்பட்ட ஒழுக்கங்கள், மாறுபாடற்ற ஞானத்தைப்பெற்றுத் தெளிந்துணர்ந் தோர்க்கு எல்லா இன்பங்களையும் தரும் என்றவாறு.

நமக்குப் பாதுகாவலான இடம் பிரமம்; உலகமோ சராசரவர்க்கமானது; ஆதலால், உலகியலைக் கடந்த உயர்ந்த ஆசாரம் ஞானிகட்கு எல்லா இன்பங்களையும் எளிதில் அளிக்கும் என்றதாம்.

உலகம் சராசர வர்க்கமாகுமென மாற்றிக் கூட்டுக. ஆசாரமுணர்ந்தோர்க்கு எல்லாந்தருமென இயைக்க. தருக்கிய - மேம்பட்ட, ஆசாரம் - நடை. ஒழுக்கம். திருக்கு - மாறுபாடு. (52)

**அறிவும் அடக்கமும் அன்பும் உடனே**
**பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்**
**குறியுங் குணமுங் குரைகழல் நீங்கா**
**நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே** **1471**

இ-ம் - எனின், ஞானிகளின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அறிவும் அடக்கமும் அன்பும் என்றும் பிரியாத முத்திநகரைத் தமதிடமாகக்கொண்டு நிலை பெற்ற பேரருளாளனாகிய சிவபெருமானுடைய ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடியை மறவாத ஞானநெறியை அறிபவர்களுக்கு குறிகளும் குணங்களும் நீரின்கீழ் உண்டாக்கப் பெற்ற ஒலி போலவியும் என்றவாறு.

பேரருளாளன் கழல் நீங்கா நெறியறிவார்க்குக் குறியும் குணமும் நீர்த்தொனியாம் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

முத்திநகர் ஞானபூமியாதலின் அறிவு பிறியா நகர் ஆயிற்று. அங்கு வாழ்வோர்கள் தன்முனைப்பு அடங்கிய தவஞானிகளாதலின் அடக்கம் பிறியா நகராயிற்று. அவர்கள் காண்பது அன்பே சிவமா யமர்ந்திருத்தலா தலின் அன்பு பிறியா நகராயிற்று என்க. அந்நகரில் மன்னும் பேரருளாளன் என்றது பரசிவத்தை. குரை கழல் - சிலம்பணிந்த திருவடியுமாம். குறி - அடையாளம். குணம் - இயல்பு. இறைவனுடைய பேராற்றலின் முன் காரியப்படாமையின் அடையாளங்களும் ஆன்ம குணங்களும் நீர்த்தொனியாயின என்றருளியவாறு. நீர்த்தொனி-நீரின்கீழ் உண்டாக்கிய தொனி, அத்தொனி நீரின்மேற்பரப்பை அடைய இயலாதவாறு போலப் பயனற்றுப்போம் என்பதாம். (53)

**ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையுள்**
**ஏனம் விளைந்தெதி ரேகாண் வழிதொறுங்**
**கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு**
**ஊனம் அறுத்துநின் றொண்சுட ராகுமே.** 1472

இம் - எனின், யோகவழி சிந்தித்த ஞானத்தால் சிவமாகுங்கள் எனப் பணித்தல் நுதலிற்று.

இ - ள் : ஞானம் விளைந்து வளர்கின்ற மனத்துள், கருவியாகிய இயம நியமாதிகள் தோன்றி, எதிரில் காணப்படும் வழிகள்தோறும் சென்று, கூனற்பிறை யாகிய சந்திரமண்டலத்து ஊறி எதிர்கிற அமுதநீரைக் கண்டு நுகர்ந்து, இழிவை அகற்றி, நிலைபெற்ற ஒளி பொருந்திய சிவச்சோதி ஆகுங்கள் என்றவாறு.

சிந்தை ஞானம் விளையும் பூமியோ ; அதில் யோகம் விளைந்து ஆறுதாரங்களாகிய வழிகள்தோறும் போய், மதியண்டலத்து அமுதத்தைக் கண்டு உயிர்க் குற்றமாகிய அறியாமையை அகற்றிச் சிவபரஞ்சுடர் ஆகுக என்று உபாயம் உரைத்தருளியவாறு. (54)

**ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமாம்**
**மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து**
**மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளைத்திடுந்**
**தானிக் குலத்தோர் சரியை கிரியையே.** 1473

இம் - எனின், ஞானிகளுக்கும் மோனிகளுக்கும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானிக்கு உடனுய குணமாக ஞானத்திற் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம் ஞானத்தில் ஞானம் என்ற நான்குமாம். அதீதஞானி யாகிய மவுனிக்கு இவையொன்றும் பொருந்தாவாம் ; முன், மயக்கற்றுச் சந்திரமண்டலத்தில் நிற்றலால் பராசத்தியை உணர்த்தும் வித்தையாகிய ஸ்ரீ வித்யை விளையும். அஃதன்றி, ஆதாரங்களாகிற தானங்களின்

கூட்டத்திருந்து யோகஞ் செய்பவர்கட்குச் சரியையும் கிரியையுமேயாம் என்றவாறு.

உடன் குணம் - உடனாகிய குணம்; இயல்பான குணம் என்பதாம், மோனி - ஆதீதஞானி; அவனுக்கு ஞானத்தில் சரியையாதிகள் ஒன்றும் பொருந்தாவாம், அவன் அபேதமாய், ஒன்றி நிற்றலின் தன் செயலற்று மோகித்து மௌனியாகி சகத்திராரத்தில் நிற்றலால் ஆகும் சத்திவித்தை அவனுக்கு விளையும். சத்திவித்தை-பராதரிசனம் கிடைக்கச் செய்யும் ஸ்ரீவித்தை.

தானி - தானத்தினிற்பது. தானிக்குலத்தோர். - ஆறுதாரங்களிலும் நிகழும் ஆதேய அநுபவக்கூட்டம் பெற்ற பேர்கள். குலம் - கூட்டம். அவர்கள் பெறுவது ஞானத்திற் சரியையும் ஞானத்திற் கிரியையுமே. ஞானத்தில் யோகமும் ஞானத்தில் ஞானமுங்கூட இத்தகைய சாதகர்க்கு இல்லையாம் என்றபடி. **(55)**

**ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு**
**ஞானத்தின் ஞானமே நானென தென்னுமல்**
**ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி**
**ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே** **1474**

இ-ம் - எனின் ; ஞானத்தில் நான்கு நிலைகளையும் விளக்குதல் நுதலிற்று

இ-ள் ; ஞானிக்கு ஞானத்தில் ஞானமுதலான நான்கு நிலைகளுமுளவாம். ஞானத்தில் ஞானமாவது 'நான்' 'எனது' என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் இல்லாமையாம். ஞானத்தில் யோகமாவது நாதாந்தத்தில் நற்சோதியைக் காண்டலாம். ஞானத்தில் கிரியையாவது நல்ல முத்தியை விரும்புதலாம்.

ஆகவே, ஞானத்திற்கிரியை முத்தியைவிரும்புதல். ஞானத்தில் யோகம் நாதாந்தமாகிய பிரமரந்திரத்தில் சோதி தரிசனமாதல், ஞானத்தில் ஞானம் பற்றறுதல் என்றவாறும். (56)

**நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்**
**புண்ணிய பாவங் கடந்த பிணைக்கற்றோன்**
**கண்ணிய ஞானங் கரைஞானங் கண்டுளோன்**
**திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. 1475**

இம் - எனின் : ஞானத்தில் ஞானம் பெற்றவன் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பெற்ற ஞானத்தில் ஞானத்தை நணுகியவன், புண்ணியம் பாவம் என்ற மாறுபாட்டைக் கடந்து பேதஞானம் இழந்தோன்; தியானிக்கப்படுகின்ற நேயமாகிய சிவபரம்பொருளில் கரைந்துபோன அறிவைக் கண்டவன்; நிலைபேறுடைய உறுதியான சுத்தன் அவனே; சிவமுத்தனும் சித்தனும் அவனே என்றவாறு.

ஞானத்தில் ஞானி உலகியல் வேறுபாடு கடந்து, நேயத்தில் ஒன்றி நேயமாய், தானுய ஞானமுடையனாய் விளங்கும் சித்தன்; முத்தன் என்பதாம். (57)

**ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல்**
**ஞான விசேடமே நாடு பரோதயம்**
**ஞானநிர் வாணமே நன்றறி வானருள்**
**ஞானபி டேகமே நற்குரு பாதமே. 1476**

இம் - எனின், ஞானத்தில் சமயம் முதலான நால்வகைத் தீட்சைகளையும் விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : ஞானத்தில் சமயதீட்சையாவது பரம்பொருளை விரும்பும் ஆன்மாவாகிய தன்னைக் காண்டலாம். அதாவது ஆன்மதரிசனமாம். ஞானவிசேடமாவது, தேடப்படுகின்ற பரன் வெளிப்படுதலாகும். இது சிவதரிசனம். ஞானநிர்வாணமாவது திருவருட்பதிவாம். இது சிவயோகமாம். ஞானபிடேகமாவது சிவகுருவின் பாதத்தில் தோய்தலாகிய சிவயோகமாம் என்றவாறு.

ஞானசமயம் முதலியன முறையே ஆன்மதரிசனமும், சிவதரிசனமும், சிவபோகமும், சிவயோகமுமாம் என்று அறிவித்தவாறு. **(58)**

## 9. சன்மார்க்கம்

அஃதாவது, ஞானம் யோகம் கிரியை சரியை என நெறிகளின் பெயரால் இலக்கணமும், பயனும் உணர்த்திய ஆசிரியர், அவ்வளவின் அவற்றிலக்கணம் முடிவு போகாமையின், அவற்றின் பரியாயமாகிய சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம் என்ற பெயரானும் அவற்றின் இன்றியமையாமையை எடுத்து விளக்கி அருளுகின்றவாறும். சன்மார்க்கம் - நன்னெறி. 'நன்னெறியாவது நமச்சிவாயவே' என்பாராதலின் தன்முனைப்பற்ற, தாடலையாக அடங்கியிருக்கும் ஞானநெறியாம்,

**சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்**
**தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு**
**சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்**
**கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே.** 1477

இம் – எனின், சன்மார்க்கரிலக்கணமும், அவர் எய்தும் பேறும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானசாத்திரங்களில் சொல்லப்பெறும் சன்மார்க்கமாவது, தற்பதப் பொருளாய சிவத்தின் உண்மை வடிவங்களான வேதத்திறுச்சியில் விளங்கும் ஞானவொளியைக் கண்டு, கோப தாப காமங்களின் நீங்கி, சிவயோகத்தில் நிலைத்த சித்தம் உடையராய், எமனைவென்ற இறைவனது திருவுள்ளக் குறிப்பை உணர்ந்தவர்கள் பற்றும் நெறியாம் என்றவாறு.

சன்மார்க்கம் குறிப்பறிந்தார்கள் ( நெறி ) ஆம் எனக்கூட்டுக. நெறியென்ற ஒரு சொல் வருவித்து முடிக்க,

தற்சிவ தத்துவத் தோற்றங்கள் ; தத் என்னும் சொல்லுக்குப் பொருளாக விளங்கும் சிவம், உண்மை யியல்பு தத்வம். சிவத்தின் உண்மை யியல்பாவது, பாசஞானத்தானும் பசுஞானத்தானும் அறியப்பெரு மையும், ஞானத்தால் நாடப்பெறும் பெருமையும் ஆன்மா பாசங்களினின்றும் நீங்கத் தண்ணிழலாக அருள் வழங்கும் சிறப்பும் உடைமை. அவற்றின் தோற்றமாவது தத்பத வாச்யமான சிவத்தின் உண்மை யியல்புகளை ஆசிரிய உபதேசத்தானும் சைவநூற்றெரி வானும் திருவருள் உணர்த்த உணருதல்.

சுருதி – ஞானம். சுருதிச்சுடர் – ஞானதீபம் ; என்றது சிவத்தை. ஞானசொருபியாகிய சிவதரிசனம் கண்ட மாத்திரத்து ஆணவமலகாரியமான அஞ்ஞானத் தின்வழித் தோன்றிய உட்பகைகள் ஆறும் அகலுமா தலின் சீற்றம் ஒழிந்து என்றது.

சிவயோக சித்தராய் - சிவயோகத்தில் நிலைத்த சித்தத்தையுடையராய். அன்றி, சிவயோகசித்தி யுடையராய் எனலுமாம். சிவயோகம் - சிவனோடு சீவன் ஒன்றியிருக்கும் நிலை.

கூற்றத்தை வென்றார் – காலகாலராய பரசிவம். அவர் குறிப்பு ஆன்மாக்கள் பாசத்தினிங்கிப் பரமுத்தி அடைக எனத் தேக இந்திரிய கரணங்களைக் கொடுத்து உதவியதன் நோக்கம். குறிப்பறிந்தார்கள் ஆம் என முடியாமையின் குறிப்பறிந்தார்கள் நெறி ஆம் என ஒருசொல் வருவித்து முடிக்க. (59)

**சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி**
**உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு**
**தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய**
**வையத்து ளார்க்கு வகுத்துரைத் தானே. 1478**

இம் – எனின், சன்மார்க்கமே குருநெறி; அது உயிர்கள்மீது வைத்த கருணையால் இறைவன் வகுத்தது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சைவசமயத்திற்குப் பெருமையைத் தரும் ஒப்பற்ற தலைவனாகிய சிவபரம்பொருள் ஆன் மாக்கள் அறிந்துய்ய வகுத்துக்கொடுத்த குரு உபதேச மார்க்கம் ஒன்று உண்டு. அதுதான் தெய்வச் சிவ நெறியாகிய சன்மார்க்கம். அதனைப் பொருந்தி ஈடேற இக்கன்ம பூமியிற்றோன்றிய மக்களுக்கு அதனை வகுத்து நிலை பெறுத்தினன் என்றவாறு.

ஆகவே சன்மார்க்கமாகிய ஞானநெறி குரு வழி யாகப் பெறத்தக்கது என்பதாம். (60)

**தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்**
**பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்**
**குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்**
**தருமுத்திச் சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. 1479**

இ - னின், சன்மார்க்கப்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தரிசிக்க, பூசிக்க, தியானிக்க, தீண்ட, புகழ, திருவடி நிலையைச் சிரமேல் சூட, குருபத்தி செய்யும் பூமியிலுள்ள அன்பர்களுக்குச் சன்மார்க்கம் முத்தியாகிய சார்பினைத்தரும் என்றவாறு,

தரிசித்தல் முதலாயின செய்து குருபத்தி செய்வார்க்கு முத்திப்பயனைத் தரும் சன்மார்க்கம் தானே கிட்டும் என்பதாம். முத்திச்சார்பு - முத்தியடைவதாலாம் இன்பம். ஊட்டும் - அதனை நுகர்விக்கும். (61)

**தெளிவறி யாதார் சிவனை யறியார்**
**தெளிவறி யாதார் சீவனு மாகார்**
**தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்**
**தெளிவறி யாதார் தீரார் பிறப்பே. 1480**

இம் - எனின், சன்மார்க்க நெறிக்கணின்று தெளியாதார் ஒருபயனும் எய்தார் எனல் நுதலிற்று.

இ - ள்: ஞானநெறிக்கண் நின்று உராஅத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத் தெளிவினை உணராதார் தலைவனை அறியார்; தன்னையும் அறியார்; அதனால் சிவமாகமாட்டார்; அவர் பிறப்பினின்றும் ஒழிவடையார் என்றவாறு.

தெளிந்தார்க்கே எல்லாம் உளவாம் என்பது. (62)

**தானவ ருகித் தானெந்தா மலஞ்செற்று**
**மோனம நாமொழிப் பான்முத்த ராவதும்**
**ஈனமில் ஞானானு பூதியில் இன்பமுந்**
**தானவ னுயுற லானசன் மார்க்கமே. 1481**

இ - ளின்; முத்தராவதும், அவனே தானுதலுஞ் சன்மார்க்கப்பயனை என்பது உணர்த்துதல் நுதலிற்று

இ - ள் ; சுத்தான்மாவாகிய தான் சிவயோகி, தன்னை அநாதியே பற்றியதும் இடையில் பற்றியனவு மாகிய ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்ற மலங்களைந்தையும் நீக்கி, இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும் மொழியால் முத்தான்மாவாவதும், குற்றமற்ற ஞான அநுபூதியில் பேரின்ப முறுவதும் அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகனாகி இறை பணி நிற்றலாகிய சன்மார்க்கமாம் என்றவாறு.

மோன மொழி - சின் முத்திரையோடு இருந்து காட்டும் உபதேசம். முத்தராவதும், இன்பமும் சன் மார்க்கம் எனக்கூட்டுக. (63)

**சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்**
**சன்மார்க்கத் தார்க்கும் இடத்தொடு தெய்வமுஞ்**
**சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தெரிசனம்**
**சன்மார்க்கத் தார்க்கும் இயம்புவன் கேண்மினே 1482**

இம் - எனின், சன்மார்க்கத்தார்க்குரிய உபாயங் களை அனைவர்க்கும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சன்மார்க்கத்தாராகிய ஞானிகட்கு உரிய, சாதிக்குரிய திசையும், ஆசனமும், தலமும், தியா

னித்தற்குரிய தெய்வமும், சங்கமும், காண்பனவும் ஆகிய இவற்றை சன்மார்க்கத் துள்ளார்க்கும் சொல்லு வேன்; அவர்கள் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து உய்ந்து போவார்களாக என்றவாறு.

இது, பரிபாகம் நோக்காது அனைத்து உயிர்கள் மாட்டும் வைத்த கருணையால் கூறியது. (64)

**சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்**
**பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்**
**துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றோர்**
**சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே** 1483

இ-ம் - எனின், சாதனங்களும் பயனும் உணர்த்து தல் நுதலிற்று.

இ-ள் : சன்மார்க்க சாதனங்கள், அறிபவனாகிய தானும், அறிவும், அறியப்படுபொருளுமாகிய மூன்றை யும் அறிதலாம். இந்நெறி யொழிந்த ஏனைய நெறிக ளும் அவற்றிற்குரிய சாதனங்களும் ஞான பரிபாகம் பெறாத பேதையர்களுக்காம். நெறியல்லா நெறிக்கண் சேறலாகிய துன்மார்க்கத்தினின்று அகன்ற துரிய நிலைக் கணுள்ள குற்றமும் நீங்கினோர் எய்தும் சன்மார்க்கமாவது தான் அவனாகும் சன்மார்க்கமாம் என்றவாறு.

தான் - ஞாதிருவாகிய தான். ஞானம் - அறிவு. ஞேயம் - சிவம். ஆகவே சன்மார்க்க சாதனங்கள் ஞாதிரு ஞான ஞேயங்களாகிய திரிபுடி ஞானமாம்.

பின்மார்க்கம் – சன்மார்க்கத்திற்குப் பிந்திய மார்க் கங்களாகிய யோக கிரியை சரியைகள். மலவாதனை அறவே நீங்காத பேதையர்க்காம்

துரியத் துரிசு - துரியாவத்தையிலுள்ள குற்றம். துரியம் பிரமரந்திரத்தில் ஆன்மா ஒடுங்குநிலை. துரியமும் உடலொடுபட்டதாய் மாயேயமாதலின அது துரிசு எனப்பட்டது. துரிசு அற்றராது சன்மார்க்கம் என்க. தான் அவனாதல் - ஏகனாதல். (65)

**சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்**
**பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்றால்**
**நன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே**
**சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே.**
**1484**

இ-ம் - எனின், ஞானிகளுக்கு ஏனைய மூன்றும் சோபான முறையில் எய்துதற் குரியதாமென்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சன்மார்க்கத்தை அடைய வருகின்ற பரிபாகமுற்ற சீடர்களுக்கு, பின்னே கூறப்படுகின்ற யோகமாதியாய மார்க்கங்கள் மூன்றும் பெறவேண்டுவது முறைமையாம் எனின், அவை நன்மார்க்கமாதல் சிவபரம் பொருளை முன்னிட்டு ஆராய்தலே. இதுவே உபதேசம் என்று, வேதம் கைக்கொண்டு விளக்கும் என்றவாறு.

சைவ நூலல்லாத பிறநூலார், சரியையாதிகட்குச் சிவனொடு நாடல் வேண்டுவதின்று. சரியையாதிகள் மனமயங்கச் செய்யும் தொழில்களே ; அதற்குச் சிவத் தியானம் வேண்டுவதின்றும் என்பர். அதனை மறுத்து, சரியையாதிகள் நன்மார்க்கமாவது சிவத்தை முன்னிட்டுத் தியானிப்பதாலேயாம். வேதம் சொன்னது இதுவே; குரு உபதேசமும் இதுவே என்க. (66)

அன்னிய பாசமும் ஆகுங் கருமமும்
முன்னும் அவத்தையும் மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. 1485

இ-ள். எனின், சன்மார்க்கர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் தன்னின் வேருய பாசத்தையும், அவற்றைப் போக்குதற் குபகாரமாகும் கன்ம மலத்தையும், அதனுல் எய்தப்பெறுந் துன்பங்களையும், மூலப்பிரகிருதியாகிய மாயாமலத்தையும், இவற்றொடு பின்னிக் கிடக்கின்ற பாசஞானத்தையும், பேதாபேதங்களையும், ஆன்மாவாகிய தன்னையும் கண்டவர்களே சன்மார்க்கத் தோர் என்றவாறு.

முன்னும் அவத்தை - எண்ணி நுகரப்படுகின்ற துன்பங்கள். பேதம் + அதிபேதம் — மிக்கவேறுபாட்டு உணர்வு, தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி; ஆன்மரூபம், ஆன்மதரிசனம்; ஆன்மசுத்தி இவற்றைக் கண்டவர்கள் சன்மார்க்கர் என்பதாம். (67)

பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்துத்
தொசியாத உண்மைச் சொரூபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. 1486

இ-ள். எனின், சிவரூபமுதலான அநுபவ நிலையில் நிற்பார் சன்மார்க்கர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ஆன்மாவைப் பாசத்தினின்று பிரித்துப் பதிப்பொருளுடன் சேர்த்து, கனியாத மனத்தையும்

நன்றாகக் கனிவித்து, கெடாத உண்மையாகிய சொரூபத் தோற்றத்துள் பொருந்தி, அசையாதபடி சமாதி கூடியிருத்தலே சன்மார்க்கமாம் என்றவாறு.

பசுபாசநீக்கி என்றது ஆன்மரூபமுதல் தத்துவசுத்தி வரையில் விளக்கப்பெற்றது. பதியுடன் கூட்டி என்பது முதல் இல்லாமையான என்றதுவரை, சிவரூப சிவதரிசன சிவயோகங்கள் கூறப்பெற்றன.

கசியாத நெஞ்சம் கசிவித்து என்றது சிவயோகம்; அசைவானது இல்லாமை என்றது ஆனந்தாதீதம் கூறியதுமாம். (68)

**மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது**
**மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை**
**மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர்**
**மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே 1487**

இ - ளின், சன்மார்க்கமே மார்க்கம் என்பது உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள்: மார்க்கமாகிய சன்மார்க்கத்தில் நிற்கும் சன்மார்க்கிகள் இறைவனை அணுக வகுப்பது சன்மார்க்கமேயாம். இஃதன்றி வேறொன்றுஞ் சன்மார்க்கம் அன்றாம். இதில் ஒழுகி நிலைத்திராதாரின் மார்க்கம் சன்மார்க்கமாகிய சித்தயோகமேயாம் என்றவாறு.

சிவயோகம் ஆகாது என்பதநார். இது சொற்பொருட்பின் வருநிலையணி சன்மார்க்கமாகிய ஞானயோகத்தின் ஒழுகாதார் மேற்கொள்ளும் மார்க்கம், சிவத்தோடு இரண்டறக் கலத்தல் ஆகாது. சித்தம்

ஒடுங்குதலாகிய கரணலயமே ஆம் என்பது. மனோ லயம் முத்தியாகாமை தெளிக. (69)

## 10. சகமார்க்கம்

இது தோழமைநெறியாம். இறைவனால் தோழனாக ஏற்றுக்கொள்ளப் பெற்று, என்றும் அவனை நீங்காது, ஒழுகும் யோகநெறியாம். இதுவும் ஞானயோக நெறியே என்பதாம். இதனை ஏழு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார் ஆசிரியர்.

**சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது**
**மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்**
**பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்**
**துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே.** 1488

இ-ம் - எனின், சன்மார்க்கமே சகமார்க்கமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தோழமை நெறியானதும் சன்மார்க்க மேயாம். நிலைபேறு உடைய அந்நெறியானது வீடு பேறாக பெருஞ்சித்தியை அளிப்பதாம்; இவை ஒழிந்த பிற்பட்ட நெறிகள் இடைவிடாது பிறந்து இறந்து அலைகின்ற மார்க்கங்களாம்; அவை ஞானமாகிய பயனை அளிக்க வல்லனவோ? இல்லையாம் என்றவாறு.

தோழமைநெறி இடைவிடாது தோழனைப்போல இறைவனைப் பத்திபண்ணுவதாகலின் அதுவே ஞான நெறியாகிய முடிந்த பயனைத் தரவல்லது. அதுவே முத்தியைச் சித்திக்கச் செய்வது. இந்தச் சரியையாதி நான்கு நெறிகளும் அல்லாதன பிற்பட்ட நெறிகளாம்.

அவை ஓயாமல் பிறந்திறந்துழலுதலைப் பயப்பனவாம். ஆதலால் ஞானவயிலாகா என்றதாம். (70)

மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார்
வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகும்
உருவுங் கிளையும் ஒருங்கிழப் பாரே . 1489

இம் - மந்திரத்தின், சகமார்க்கத்தில் நிலைக்காதார்க்கு இம்மை மறுமைப் பயன்கள் ஒன்றுமில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பொருந்தப்பெறும் பன்னிரண்டு நெறிகளில் நின்று பழகாதார், குருவையும், சிவத்தையும், சமயத்தையும் பொருந்தாதவர்கள் ஆவர்; திருமகள் அவர்களைக் கண்டாலே வெருவிப்போடும். அவர்கள் வீட்டில் இல்லையாம். கண்டார் அஞ்சும் உருவையும் சுற்றத்தையும் ஒருசேர இழப்பர் என்றவாறு.

துவாதசமார்க்கமான மூலாதாரம் முதலிய ஆறு தாரங்களும், அதற்கு மேலனவாகிய சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்னிமண்டலங்களாகிய மூன்றும், அவற்றின் மேலனவாகிய சமனை, உன்மனை, அதீதம் என்ற மூன்றும் ஆகிய பன்னிரண்டு ஆதாரங்களாகிய நெறிகளேயுமாம். அன்றித் துவாதசாந்தத்தலம் எனக் கொள்ளினுமாம்.

'உரு உட்காகும்' (தொல் - உரியியல்.) ஆதலின் கண்டார் அஞ்சும் தெய்வீகத்தன்மை. சகமார்க்கத்து நில்லார்க்கு இம்மையிற் பொருளும் புகழும் ஒளியும் இல்லை; மறுமையில் முத்தியுமில்லை என்பதாம். (71)

**யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்**
**யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி**
**யோகச் சமாதியின் உள்ளே யுளசத்தி**
**யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே.** 1490

இ-ம் - எனின், சமாதியுள் அனைத்தும் ஆம் எனல் நுதலிற்று.

இ-ள்: யோக சமாதியாகிய இச்சமார்க்கத்தினுள்ளே எல்லாப் பிரபஞ்சங்களும் அடங்கி நிற்கும்; ஒளிவடிவாகிய சிவமும், சத்தியும் உள்ளன. இதனை விரும்பி மேற்கொண்டவர்களே சித்தர்கள் என்றவாறு.

அகலிடம் - பிரபஞ்சம். ஒளி - சிவம்: ஆகுபெயராகிச் சிவபெருமானை உணர்த்துதலின் அதற்கு ஏற்ப உளர் என உயர்திணைப் பயனிலை அருளப்பெற்றது. உளர் ஒளி - கிளர்ந்தெரிகின்ற சோதி எனலுமாம். (72)

**யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்**
**யோகஞ் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்**
**போகம் புவியிற் புருடார்த்த சித்திய**
**தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே.** 1491

இ-ம் - எனின், யோகியர்க்கே இருமையும் ஆம் எனல் நுதலிற்று.

இ-ள்: யோகம் போகம் இரண்டும் யோகியர்க்கு உண்டாம். யோகத்தால் சிவரூபம் பெற்ற ஆன்மாக்கள் நுகரும் போகமாவது பூமியில் நுகரப்பெறும் புருடார்த்தங்களைப் பெறுதலாம். ஆகவே யோகிக்கு

இம்மை யின்பமும் மறுமை யின்பமும் ஆகிய இரண்டும் கெடாதனவாய்ச் சித்திக்கும் என்றவாறு.

உள்ளத்தோர் - ஆன்மாக்கள். உள்ளம் - ஆன்மா. புவிபிற்போகப் புருடார்த்த சித்தியது என மாறுக. (73)

ஆதார சோதனை யானடி சுத்திகள்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே (1492)

இ-ம் - எனின், இதுவுமது.

இ - ள் : ஆறு ஆதாரங்களிலும் நின்று பழகுதலால் நாடிகள் சுத்தமாம்; மேதாகலை முதலிய பதினாறு கலைகளிலும் கலந்து பழகுவது பேரொளிப்பிழம்பைக் காணுதலாம்; ஞானவடிவான கோயிலுள் புலன்களும், பொறிகளும், புத்தியும், தம் சாதாரணத்தன்மை நீங்கப் பெறலாம் சகமார்க்கத்தில் என்றவாறு.

நாடி சுத்தி : இடை, பிங்கலை, சுழுமுனை என்ற இம்மூன்று நாடிகளைத் தூய்மையுறுத்தும் செயலாம். ஆதாரத் தியானமாகிற யோகம். அதற்குமேல் சோடச கலாப் பிராஸாத தியானம் பராகாயத்துப் பரஞ்சோதி காண்டலாம். அதற்கு மேலதாகிய ஞானகார தியானத்துக் கருவிகரணங்கள் யாவும் சிவகரணமாகத் தன் வசமற்றுப்பின் தானற்று விளங்குதலா மென்பது. (74)

பிணங்கிநிற் கின்றவை ஐந்தையும் பின்னை
அணங்கி யெறிவ னயிர்மன வாளால்
கணம்பதி னெட்டுங் கருதும் ஒருவன்
வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றனே. 1493

இம் - எனின், சகமார்க்க யோகியின் ஆற்றல் உணர்த்தல் நுதலிற்று.

இ - ள் : ஒன்றோடொன்று ஒவ்வாது மாறுபட்டுக் கிடக்கின்றனவாய இருபத்தைந்து தத்துவங்களையும், பிறகு தெய்வத்தன்மை பெற்று மனமென்னும் கூரிய வாளால் வெட்டி எறிவோன், அஞ்ஞான்று. தேவகணம் பதினெட்டுடைகையாலும், தியானித்து வணங்கப்படுகின்ற பொருளாகிய ஒப்பற்ற சிவம் இந்த யோகி முன் வந்து நின்றான் என்றவாறு.

நின்றான் என்றது கால வழுவமைதி ; துணிவு பற்றியது. அணங்கி – தெய்வத்தன்மையேறி. அயிர் - கூர்மை.

சுந்தரர்பெருமான் சகமார்க்கத்தில் நின்று வாழ்பவர்களாதலின் அவர்கள் வெள்ளை யானையின் மீது ஆரோகணித்துத் திருக்கயிலை செல்லுகின்றபொழுது 'இந்திரன் மால் பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம். வந்தெதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்து...நந்தமரூரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே' என்றருளியதும் இவ்வனுபவ நிலையை விளக்குதல் காண்க. (75)

**வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்**
**வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகும்**
**உளங்கனிந் துள்ள முகந்திருப் பார்க்குப்**
**பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே. 1494**

இம் – எனின், சிவயோகியின் சிறப்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : செல்வவளத்திற்கு உரிய கன்னியாகிய திருமகள் மனமொத்து எழுந்தருளியிருக்கின்ற வளமான திருமார்பினையுடைய திருமாலுக்கும், கொழுவிய கனியை ஒத்த இயல்புடையவனாவன்; மனங்கனிந்து மகிழ்ந்திருக்கும் சிவயோகியர்க்கு இறைவன் பழம் போலக் கனிந்து அவர்கள் மனத்துள், ஆனந்தத்தை அளித்து நிற்பன் என்றவாறு.

வளம் கன்னி – செல்வத்தின் அதிதெய்வமான இலக்குமி; தொகுத்தல் விகாரம். நிறம் – மார்பு. வாய்மையன – இயல்பினன், அன்பால் மனமுருகி மகிழ்ந்திருப்பார்க்கு என்றது சிவயோகியர்க்கு என்றபடி, பகுந்து – பிளந்து சாரமாகி. இறைவன் கனியினும் இனியனாவன் என்பது. (76)

11. சற்புத்திரமார்க்கம்

அஃதாவது நன்மக்கள் நெறி, நன்மக்கள் எங்ஙனம் இருமுது குரவர் பணிவழி நிற்பார்களோ அங்ஙனம் சிவப்பணி வழி நிற்பார் சற்புத்திரராவர். அம்மார்க்கம் சற்புத்திரமார்க்கம் என்பதாம். இதனை ஏழு திருமந்திரங்களால் ஆசிரியர் உணர்த்தியருளுகின்றார்.

**மேவிய சற்புத்திர மார்க்க மெய்த்தொழில்**
**தாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழில்**
**ஆவ திரண்டும் அகன்று சகமார்க்கத்**
**தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே.**

1495

இம் – எனின், சற்புத்திரமார்க்கமே முற்சொன்ன மார்க்கங்களுக்குச் சோபானமாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : விரும்பிய சற்புத்திரமார்க்கமே முற் கூறிய கிரியையாம்; அது சகமார்க்கமாகிய சிவ யோகத்தில் நிலைபெறுத்துவதாம்: சகமார்க்கத் தொழி லாவது தியானிப்பவனும் தியானிக்கப்படுபொருளுமாக இரண்டாக இருந்துஅறியுநிலையகன்று, சன்மார்க்கமாகிய ஞானம்பிகையோடு ஒன்றியிருத்தலாம். இதுவே சன்மார்க் கத் தெளிவாம் என்றவாறு.

சற்புத்திரமார்க்கம் சிவபூசையாகிய கிரியையாம்; அது சிவயோகத்தைப் பயப்பது. அச்சிவயோகமாகிய அச் சகமார்க்கத்தொழில் தியானிப்பனும் தியானிக் கப்படுபொருளுமாகிய பேதம்நீங்கி, சகமார்க்கத் தேவி யாகிய ஞானம்பிகையோடு அதாவது அறிவுமயமாய் ஒன்றல், அதுவே சன்மார்க்கம் என்றவாறும். சித்த மரபு பற்றி சகமார்க்கத்தேவி என்றது. (77)

**பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்**
**ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை**
**நேசித்திட் டன்னமும் நீசுத்தி செய்தன்மற்**
**றாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே** 1496

இம் – எனின், சற்புத்திரமார்க்கத்து ஒழுக்கங் களிவையென உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இறைவனைப் பூசித்தலும், அவனையே நேசித்தலும், அவன் புகழையே வாசித்தலும், வணங்கு தலும், செபித்தலும், குற்றமற்ற தவம் செய்தலும், உண்மையே பேசுதலும், அழுக்காறு முதலிய மன மாசு இல்லாமையும், ஹம்ச பாவனை செய்து ஆன்ம சுத்தி செய்தலும் ஆகிய இவைகளே குற்றமற்ற சற்புத்திர மார்க்கங்களாம் என்றவாறு.

வாசித்தல் - சிவபுராணங்களையும் தத்துவங்கூறும் சிவாகமங்களையும் வாசித்தல். ஆசற்ற நற்றவம் – நிஷ்காமியத் தவம். அழுக்கு - அழுக்காறு. நேசித்திட்டு அன்புசெய்து. அன்னமும் நீ சுத்தி செய்தல் - நீ அன்னமும் என்று சுத்தி செய்தல். ஆன்மாவாகி நீ, "நான் அவன்" என்று ஹம்சத் தியானம் செய்து ஆன்மசுத்தி செய்தல். சிவோகம்பாவனை செய்து ஆன்மசுத்தி செய்தல், அன்னம் – ஹம்சம் என்பதன் திரிபு. (78)

**அறுகாற் பறவை அலர்தேர்ந் துழலும்**
**மறுகா நரையன்னந் தாமரை நீலம்**
**குறுகா நறுமலர் கொய்வன கண்டும்**
**சிறுகால் அறநெறி சேரகி லாரே.** 1497

இம் – எனின், சற்புத்திர மார்க்கர்கள் சிறிதும் உறுதி தளரார் எனல் நுதலிற்று

இ – ள் : வண்டு பூக்களைத் தேடியலையும். கலங்காத வெள்ளையன்னம் தாமரை யொன்றையே பொருந்தும். நீரில் தாமரையின் உடனுறையும் நீலத்தையும் அணுக மாட்டா. அதுபோல, கிரியாவான்கள் பூக்கொய்வன வற்றைக், கண்டும் சிறு பொழுதாயினும் தம் தருமநெறியிலிருந்து பெயர்தலைச் செய்யார் என்றவாறு.

"வண்டோரனையர் மாந்தர்" என்பது போல மலமறைப்புடைய மக்கள் பொறிவிருந்தாகப் பல புலன்களை நாடிப் பலவிடங்களில் பல்லாற்றான் அலைவர். தாமரையும் நீலமும் நீரில் ஓரிடத்தில் சேரவாழ்ந்தும் வெள்ளையன்னம் தாமரையைப் பொருந்துமேயன்றிப் பக்கத்திலுள்ள நீல மலரை ஏறெடுத்தும் பார்க்காது:

அதுபோல ஹம்சபாவனை செய்யும் கிரியாவான்கள் சிவனையன்றித் தியானப்பொருள் ஒன்று இல்லை என்று உறுதிகொண்டு அவனையே சார்வர். " சிவ ஏகோத்யேய; " என்பது சுருதியாதலின் பிறர்போல மாயாபேத்தமான புறச்சமயநெறி நில்லார்.

மலர்கொய்தல் பூசைக்குரிய சாதனத் தொழிலாயினும் அதனைச் செய்து சிவோகம்பாவனையிலிருந்து சிறுபொழுதும் பிறியார் என்பதாம். சேரகில்லார் - பெயர்தல் முடியாதவர்களாவர். ( 79 )

**அருங்கரை யாவது அவ்வடி நீழல்**
**பெருங்கரை யாவது பிஞ்ஞக ஞானை**
**வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்**
**ஒருங்கரை யாயுல கேழினொத் தானே.** 1498

இம் - எனின், சற்புத்திரமார்க்கர்க்கு இன்றியமையாத உறுதியும், அவர் எய்தும் பயனும் இவையெனல் நுதலிற்று.

இ - ள் : பிறவிப்பெருங்கடலின் அரிய கரையாவது திருவடி நீழலே; பெரிய கரையாவது அரனுணையின் வண்ணம் அமைதலே; நானெறியினிற்றலால் வரும் இன்பமயமான திருவடி நெடுங்கரைக்குச் செல்கின்ற உயிர்கட்கெல்லாம் ஒரே அரசாய், ஏழுலகங்களிலும் ஒத்து ஒருசேர விளங்கியவனுவன் என்றவாறு.

பட்டினத்துச் சுவாமிகளும், கோயில் நான்மணிமாலையுள் " திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே " என்று கூத்தப்பிரானிடம் விண்ணப்பித்தல் காண்க.

அரையாய் - அரசாய். சிவோகம்பாவனை செய்யும் கிரியாவான்களுக்குப் பேதஞானம் விலகுதலின், ஏழு உலகங்களிலும் ஒத்து விளங்தும் சமபுத்தியும், வியாபகத்தன்மையும் விளைவவாயின என்பதாம். (80)

**உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி**
**வியந்தும் அரனடிக் கேமுறை செய்மின்**
**பயந்தும் பிறவிப் பயனது வாகும்**
**பயந்து பரிக்கிலப் பான்மைய னுமே.** 1499

இம் - எனின், பூசிக்குமுறையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிமிர்ந்தும், பணிந்தும், இருகைகளாலும் கண்களாலும் முகந்தும், கட்டியணைத்துத் தழுவி விம்மித முற்றும், சிவபெருமான் திருவடிக்கே விண்ணப்பம் செய்யுங்கள். பயந்தாலும் எடுத்த பிறவியின் பயன் அதுவேயாகும். ஆதலின், அஞ்சினும் சற்புத்திர மார்க்கத்தைத் தாங்கினுல் சிவபாவனையே சித்திப்பதால் சிவமேயாவன் என்றவாறு.

உயர்ந்தும் - இறைவன் சந்நிதி தெரியாமையால் முன்கால்களால் நின்று உயர்ந்து நோக்கியும். மனோபாவனையில் உயர்ந்தும் எனலுமாம்.

பணிந்து - யான் எனது என்னும் செருக்ககலத் தாழ்ந்தும்.

முகந்தும் - சுடுகின்ற பாலையில் கடுகி வழிநடந்தானொருவன், நீர்வேட்கை மிக்கு, நீர் கண்டுழி இருகையாலும் முகப்பதுபோல. இறைவனை இருகையாலும்

மொண்டும், கண்களால் பருகியும். காதால் புகழைப் பருகியும் முகத்தல்.

தழுவி வியந்தும் - நீண்டநாள் எதிர்நோக்கிய காமினியைப்பெற்ற காமுகன் ஒருவன் அவளைத்தழுவி வியப்பது போல. இறைவனைத் தழுவி, உச்சிமோந்து, அவ்வூறுணர்ச்சி மிக்கு வியந்து பாராட்டியும்.

அரனடிக்கே முறைசெய்மின் - வியந்து பாராட்டும் போது, அரனன்றி வேறு யாரும் இன்மையின், அரனடிக்கே அவ்வின்பம் இருந்தவா இங்ஙனம் என விண்ணப்பம் செய்யுங்கள் என்பதாம். பயந்து — தம் இழிவையும், இறைவன் உயர்வையும் கண்டு அவன் முன் நாம் எம்மாத்திரம் எனப் பயந்தாலும். எடுத்த பிறவி நமக்கு எய்தியது இறைவனை வணங்கி முத்தி யின்பம் பெறும்பொருட்டே ஆதலின் பிறவிப்பயன் அதுவாம் என்றது. பரிக்கில் - தாங்கின். அப்பான்மையன் ஆம் - அத்தன்மையனுவன். அத்தன்மையாவது சிவத்தன்மை. (81)

**நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை**
**என்றுந் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்**
**துன்று மலர்தூவித் தொழுமின் தொழுந்தொறும்**
**சென்று வெளிப்படுந் தேவர் பிரானே.** 1500

இம் — எனின். இறைவனை எப்படியாயினும் தொழுக என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடியேன் நின்று தொழுவேன் ; கிடந்து தொழுவேன் ; அழகிய பரஞ்சோதியாகிய பெருமானை என்றும் தொழுவேன். ஆதலால் நீங்களும் நிரம்பிய

மலர்களைத் தூவித் தொழுங்கள்; தொழுந்தோறும் தேவதேவனாகிய சிவன் தொழுவார்தம் தூய உள்ளத்துச் சென்று வெளிப்பட்டு அருள்புரிவன் என்றவாறு.

'நின்றும் இருந்தும் கிடந்தும் நினைப்பதுன்னை' என்றதை இம்மந்திரம் நினைவூட்டுதல் காண்க. (82)

**திருமன்னுஞ் சற்புத் திரமார்க்கச் சரியை**
**உருமன்னி வாழும் உலகத்தீர் கேண்மின்**
**கருமன்னு பாசங் கைகூம்பத் தொழுது**
**இருமன்னு நாடோறும் இன்புற் றிருந்தே. 1501**

இம் - எனின், இனிச் சரியையும் கேளுங்கள் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வினைக்கீடாக வடிவு தாங்கி வாழும் உலகத்தவர்களே! முத்திச்செல்வ நிலைபெறுவதற்கு உரிய சற்புத்திர மார்க்கத்திற்கு வாயிலாக அமைந்த சரியை மார்க்கத்தை உரைக்கின்றேன்; கேளுங்கள். பிறவிக்கேதுவாகிய பாசங்கள் வணங்க, இறைவனைத் தொழுது நாடோறும் இன்புற்றிருந்து இருங்கள்; நிலை பெறுங்கள் என்றவாறு.

திரு - முத்திச் செல்வம்; ஞானமுமாம். கிரியை யென மருவும் யாவும் ஞானங்கிடைத்தற்த வாயிலாதலானும் அக்கிரியை சரியை வழியாகவுடையதாதலானும், 'சற்புத்திரமார்க்கச் சரியை கேண்மின்' என்றது. கருமன்னும் பாசம் - கருவில் மீட்டும் பிறத்தற்கு ஏதுவாகிய ஆணவம் கன்மம் மாயையாகிற பாசங்கள். கைகூம்ப - தம் ஆற்றல் குறையதால் அவைகளின்

கரங்கள் குவிய, தொழுது - இறைவனைத் தொழுது. இன்புற்றிருந்து நாடோறும் இரும்; மன்னுய என முடிக்க. (83)

## 12. தாசமார்க்கம்

அஃதாவது, அடிமைபோல இறைவனை விட்டு அகலாது அவன் குறிப்பின்வழி ஒழுகும் நெறியாம். இதனை ஐந்து திருமந்திரங்களான் உணர்த்தியருளுகின்றார் ஆசிரியர்.

**எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்**
**அளிதின் மெழுகல் அதுதூர்த்தல் வாழ்த்தல்**
**பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி**
**தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே.** 1502

இம் - எனின், தாசமார்க்கமிதுவெனல் நுதலிற்று.

இ - ள் : செய்தற் கெளியனவாகிய திருக்கோயிலில் விளக்கு ஏற்றுதல். பூக்கொய்தல். அன்புடன் திரு மெழுக்கிடுதல், திருவலகிடுதல், இறைவனை வாழ்த்தல், கோயிலில் பூசாகாலங்களில் மணிபற்றி அடித்தல், திருமஞ்சனம் சேர்த்தல் முதலிய பலவாகிய ஆலயப்பணி களைச் செய்வதுதான் தாசமார்க்கம் என்றவாறு.

அளிதின் - அன்புடன். பளி - பள்ளி : தொகுத்தல் கோயில் என்பது பொருள். தளி - கோயில். (84)

**அதுவிது வாதிப் பரமென் றகல்வர்**
**இதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை**
**விதிவழி யேசென்று வேந்தனை நாடும்**
**அதுவிது நெஞ்சில் நணிக்கின்ற வாறே.** 1503

இ - ளின், தாசமார்க்கத்திற்குத் தலைவனைத் தேர்தலே முதற்படியாதலின் அதனை வற்புறுத்துதல் நுதலிற்று

இ - ள் : ஆதி முழுமுதற்கடவுள் அது என்றும் இது என்றும் ஐயுற்றுத் துணிவு பிறவாது நீங்குவர்; இதுவே பரம்பொருள் இதனை வழிபடுதலே வழி என்று துணிந்து வணங்கினர் எவரும் இல்லையாம். அதலால வேதாகம நெறியே சென்று தேவர்பெருமானான சிவ பெருமானை நாடுங்கள்; அதுவே அது இது என்னும் ஐயத்தை நம் மனத்தினின்றும் நீக்கும் உபாயமாம் என்றவாறு.

ஆதிப்பரம் அது (என்று) இது (என்று) அகல்வர் எனக் கூட்டுக. விதி - விதிமார்க்கத்தைக்கூறும் வேதமும் ஆகமமும் வேந்தன் - தலைவன்; சிவன். (85)

**அந்திப்பன் திங்கள் அதன்பின்பு ஞாயிறு**
**சிந்திப்பன் என்றும் ஒருவன் செறிகழல்**
**வந்திப்பன் வானவர் தேவனை நாடோறும்**
**வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. 1504**

இ - ளின். சரியையில் நிற்பவன் தியானிக்கும் முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திங்களாகிய இடைகலையையும், அதன் பின்பு சூரியகலையாகிய பிங்கலையையும் அடக்குவேன்: ஒப்பற்ற சிவபரமபொருளின் நீக்கமற நிறைந்த திருவடிகளைச் சிந்திப்பன்; தேவதேவனாகிய சிவனை நாடோறும் வணங்குவேன்; அங்ஙனம் வந்திப்பன முதல் நான்கும் தாசமார்க்கம் முதலான நான்கு வகையில் முடிந்தது என்றவாறு.

அந்திப்பன் — அடக்குவேன். பிராணாயாமம் செய்யும்போது முன்பு இடைகலை வழியாக மூச்சை மெல்ல உள்ளுக்கிழுத்து, இடைகலையை விரல்களாலழுத்திப் பிடித்து அடைத்து, பின் வலது நாசியாகிய பிங்கலையையும் அடைத்துக் கும்பகம் செய்து, பிறகு வலது நாசியின் வழியாக மெல்லெனக் காற்றை விடுத்துத் தியானிக்கின், தியானம் சித்திக்கும் என்பது உணர்த்தியவாறு. ( 86 )

**அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி**
**உன்னுவர் உள்மகிழ்ந் துண்ணின் றடிதொழக்**
**கண்ணவ னென்று கருது மவர்கட்குப்**
**பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே.** 1505

இம் — எனின், உள்ளமுருகி வணங்குவார்கட்கே இறைவன் வெளிப்பட்டு அருளுவன் என்பதறிவித்தல் நுதலிற்று.

இ — ள் : தேவர்கள் அண்ணலாகிய பரசிவத்தை ஆயிரம் பெயர்களைச் சொல்லி அர்ச்சித்துத் தியானிப்பர். இறைவனே மனம் மகிழ்ந்து, மனத்துள்ளாகத் தியானத்தில் நிலைத்து நின்று அடியார்கள் திருவடியை வணங்க — அவனே கண்ணையும் கண்ணுட் கருமணியாயும், மணியாடு பாவையாயும் விளங்குவன் என்று தியானிப்பவர்கட்கு, தேவதேவனாகிய சிவன் பெருங் கருணையைச் செய்தருளுவன் என்றவாறு.

தேவர்கள் சகத்திர நாமார்ச்சனையால் வணங்கவும், இறைவன் நெஞ்சம் நெக்குருகி நினைக்கும் அடியவர்களுக்கே அருள்செய்வன் என்பது கருத்து. ( 87)

**வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்**
**பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்**
**மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை**
**நேசத் திருந்த நினைவறி யாரே** 1506

இ-ம் — எனின், சரியையில் மனமாசு அகலாமையும், அதனை அகற்றும் உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பிராணாயாமம் செய்தும், வணங்கியும், மலர்கொய்து சாத்தியும் ஆராயின், மனமானது பாசிக் குளத்தில் எறிந்த கல்லுப்போல இருக்கும். அங்ஙனம் சரியையில் மட்டும் நிற்பார் குற்றமற்ற சோதியாகிய நீலமணிமிடற் றண்ணலை அன்போடு மனத்திருத்தும் உபாயமாகிய நினைவை அறியாராவர் என்றவாறு.

வாசித்தும் - சிவபுராணங்களை வாசித்தும் எனலுமாம். மனம் கல்வீழ் பாசிக்குளமாம் என மாற்றிப் பொருள்கொள்க. நேசம் அன்பு. (88)

## 13. சாலோகம்

அஃதாவது, சரியையாகிற தாசமார்க்கத்திலே நின்றோர் எய்தும் பதமுத்தி. இதனை இரு திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்,

**சாலோக மாதி சரியாதி யிற்பெறும்**
**சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையாம்**
**மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்**
**பாலோகம் இல்லாப் பரனுரு வாமே.** 1507

இ-எனின், சரியையாதிகளான் எய்தப்பெறும் முத்திகள் ஒன்றற்கொன்று உயர்ந்து உபகாரமாதல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சாலோகம், சாமீபம். சாரூபம், சாயுச்சிய மாகிய முத்திகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களான் எய்தப்பெறும்; அவற்றுள், சரியையான் அடையப்பெறும் சாலோகத்து நிலைக்கப் பெறின் சாமீபம் தங்கும்; பெரிய காட்சி இடைவிடாது பொருத்துமாயின் அதுவே சாரூபமுத்திக்கு வழியாம்; அதில் நிலைக்கப்பெறின் பரந்துபட்ட உலகத்தொடர் பில்லாத சிவனுருவாக விளங்கலாம் என்றவாறு.

மாலோகம் - பெரிய காட்சி. லோகம் - காட்சி: அதாவது சாமீபம் எய்தி இடைவிடாது தரிசித்தலாகிய யோகம் முதிரின் சாரூபமுத்தி விளையும் என்பதாம்.

பாலோகம் - பரந்த உலகம்: என்றது ஈண்டு உலக சம்பந்தமாகிய மாயாசம்பந்தத்தை. இறைவன் கொள் கின்ற திருமேனி மாயா காரியமன்றாய் ஞானமே வடி வானதாதலின், யோகியும் அங்ஙனம் ஞானவடிவம் அடைவன் என்பதாம். (89)

**சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்**
**சமய மனுமுறை தானே விசேடஞ்**
**சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றாஞ்**
**சமயாபி டேகந் தானுஞ் சமாதியே** 1508

இ-எனின், கிரியைக்கண் சமயம் முதலான நான்கு தீட்சைகளின் இலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: கிரியையில்சமய தீட்சையாவது மனத்தைச் சிவனெழுந்தருளும் கோயிலாகச் செய்தலாம், கிரியை யில் விசேடமாவது சைவசமயத்திற்குரிய மந்திரத்தை முறையானே செபித்தலாம். மூன்றாவதாகிய நிர்வாண தீட்சையாவது சைவசமயத்தின் மூல மந்திரத்தைத் தெளிதலாம். சமயாபிடேகமாவது நானேயாம் சமாதி கூடுதலாம், என்றவாறு.

தானும் சமாதி என்றது ஹடயோக முறையா லன்றித் தானே விளையும் சிவராச யோகசமாதியில் நிலைத்தலாம் என்றவாறு. (90)

## 14. சாரியம்

இது சிவபூசையாகிய கிரியைக்கண் நின்றார்கள் எய்தும் பத முத்தியாம். இதனை ஒரு திருமந்திரத்தான் உணர்த்துகின்றார்கள்.

**பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்**
**பாச மருளான தாகும்இச் சாமீபம்**
**பாசஞ் சிவமான தாகும்இச் சாரூபம்**
**பாசங் கரைபதி சாயுச் சியமே.** **1509**

இம் - எனின், நால்வகை முத்திகளின் தன்மை யைச் சுருங்க உரைத்தல் நுதலிற்று.

இ - ள் : சாலோக முத்தி என்பது சடமாகிய பாசம் சித்தாகிய உயிர்போல நெகிழ்வது. அப்பாசம் தன் தன்மையாகிய மறைத்தலும் வருத்துதலும் நீங்கி அருள்போல உபகாரப்படுந் தன்மையதாவது சாமீபம்; அப்பாசம் அதிகார மாத்திரையாய் நின்று தனது வலி

முழுதும் குன்றியிருப்பது சாருபம்; அப்பாசமுழுதும் வாசனையும் அற்றுக் கரைந்த நிலையே சாயுச்சியம் என்றவாறு.

சடமாய் – உயிரைச்சார்ந்து அதன் வியாபகத்தை மறைப்பதாய பாசம் நெகிழ்வது சாலோகம்; அருளாய் உபகாரப்படுவது சாமீபம்; அதிகார மாத்திரையாய் நிற்பது சாரூபம்: முழுதுங் கெடல் சாயுச்சியம் என்பது கருத்து. (91)

## 15 சாரூபம்

அஃதாவது, யோகமாகிய சகமார்க்கத்தினின்று எய்தும் முத்தி இறைவனைப் போன்ற உருவம் பெறுதலாம். இதனை இரண்டு மந்திரங்களான் உணர்த்துகின்றார்.

**தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்**
**தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா**
**அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்**
**இங்கிவ ராக விழிவற்ற யோகமே.** 1510

இம் – எனின், சாருபத்தின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: நிலைபெற்ற சாருபம் யோகவுறுப்புள் எட்டாவதாகிய சமாதியினால் விளைவதாம்; தங்கிய சன்மார்க்கமாகிய ஞானநெறி யோக நெறியாகிய தன்னிலன்றி வேறொருவாற்றாற் கைகூடாதாம்; இந்நெறியால், உறுப்போடு கூடிய சரீரசித்தி கைவரப் பெறுவர்; ஆகலால் இங்கு ஒன்றும் தன்னிலையில்

தாழாத யோக நெறி இவர்க்கு மேலும் விளைவதாக என்றவாறு.

இங்கு இழிவற்ற யோகமே இவர்(க்கு) ஆக என முடிக்க. இனி, சாரூபம் அட்டாங்க யோகத்தான் ஆம் எனக் கூறலுமாம். (92)

**சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே**
**சயிலம தாகுஞ் சராசரம் போலப்**
**பயிலுங் குருவின் பதிபுக்க போதே**
**கயிலை இறைவன் கதிர்வடி வாமே** 1511

இம் - எனின், குருவைச் சார்ந்து உயிர் சிவமாம் எனல் நுதலிற்று.

இ - ள் : உலோக சயிலமாகிய மேருமலையைச் சார்ந்த போதே இயங்குவ நிற்பவான எல்லாம் பொன்னுதல்போல, சிவானுபவத்தில் திளைக்கும் குருநாதனுடைய இருப்பிடத்தை அடைந்தபோதே கயிலாயபதியாகிய இறைவனுடைய சோதிவடிவை இவனும் பெறுவன் என்றவாறு.

உலோகம் - தாதுப்பொருள்; ஈண்டுப் பொன்னை உணர்த்தியது. சயிலம் - மலை, சயிலமது ஆகும் என்ற போது அதனது நிறத்தை எய்தும் எனப் பொருள் கொள்க. சிவனுரு ஒளியுரு. அதுபோல் சிவயோகியும் பெறுவன் என்பதாம். (93)

## 16. சாயுச்சியம்

அஃதாவது, சன்மார்க்கமாகிய ஞானநெறியினின்றார் எய்தும் பரமுத்தி, இது இறைவனோடு இரண்டறக்

கலத்தலாம். அதனை இரண்டு மந்திரங்களானுணர்த்து கின்றார்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாகுதல்
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தன்னைச் சாராமல் நீங்குதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே 1512

இம் - எனின், ஞான இயல்பும் அதன் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சைவமாவது சிவனுடன் இயைதல்; அச்சைவத்தை அறிந்து சிவபெருமானே பரம்பொருள் என்று சிவத்தைச் சாருதலும், பின்பு அதனைச் சார்ந் துள்ளோம என்ற நினைப்புமற்று அந்தச் சிவத்தோடு இரண்டறக் கலத்தலும், சிவானந்தமயமாக விளங்கு தலுமாம் என்றவாறு.

இதனால் சாயுச்சியமே சைவம் என்பதும், அது சிவத்தோடு கூடியிருத்தலும், இரண்டறக் கலத்தலும், இன்பமேயாதலும் என முத்திறப்படும் என்பதும் உணர்த்தப் பெற்றன. (94)

சாயுச் சியஞ்சாக் கிராதீதஞ் சாருதல்
சாயுச் சியமுப சாந்தத்துத் தங்குதல்
சாயுச் சியஞ்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே .1513

இம் - எனின், முற்கூறிய மூவகைச் சாயுச்சியங் களின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சாயுச்சியமாவது, மேலாலவத்தையில், சாக்கிராதீதத்தை அடைதலும், விருப்பு வெறுப்பற்ற உபசாந்தநிலைக்கண் நிலைத்தலும், ஞேயமாகிய சிவமே யாதலும், எல்லையற்ற ஆனந்த சத்தியாதலும் ஆகிய இந்நிலைகளாம் என்றவாறு.

சாக்கிராதீதம்: விழிப்புநிலையில் துரியாதீதம் பெறுதல். இதனைப் பெற்றவர்களையே சேக்கிழார்சுவாமிகள் 'விழித்த கண் குருடாத் திரியும் வீரர்கள்' என்பர்.

உபசாந்தம் - ஒன்றினும் விருப்பு வெறுப்பற்ற நிலை. சிவமாதல் - காண்பானும் காட்சிப்பொருளும் அற்றுக் காட்சிப்பொருளாகிய சிவமேயாதல், ஆனந்த சத்தி - சிவமாய்ச் சிவானந்தத்து அழுந்தல். (95)

## 17 சத்திநிபாதம் - மந்ததரம்

தவம், சரியைமுதல் நால்வகைப்பட்டு, அவற்றுள் ஒவ்வொன்றும் நால்வகைப்பட்டு, பலவாய் நிகழ்தற்கேற்ப, பக்குவமாதற் பொருட்டு, மலத்திற்கு அனுகூலமாய் நின்று நடத்திய திரோதானசத்தி மலபரிபாகம் எய்தியவழி, அக்கருணை மறமாகிய செய்கை மாறி, கருணை எனப்படும் முன்னைப் பராசத்தி ரூபமேயாய் ஆன்மாக்கள்மாட்டுப் பதிதலே சத்திநிபாதமாம். இச் சொல் சத்தியின் வீழ்ச்சி எனப்பொருள்படும். நி + பாதம் = நன்கு வீழ்தல். ஓரவைக்களத்தின் நடுவே வீழ்ந்த கல்லின் வீழ்ச்சி, அங்கு உள்ளாரை ஆண்டு நின்றும் அகல்விப்பதுபோல, சத்தியின்நிபாதம் நிகழ்ந்த அளவின், அஃது அவ்வான்மாவை மனைவி மக்கள் மாடு வீடு என்ற உலகத்துழனிக்குப் பயந்து அவ்வுலக

வாழ்வினின்று பயந்தோடி ஓர் உண்மைக் குருவை நாடச்செய்யும், ஆதலால், சத்தியின் பதிவு நிபாதம் எனப்பட்டது. சத்திநிபாதம் சோபான முறையான் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும். அவற்றுள் மந்ததர சத்திநிபாதத்தின் இயல்பை நான்கு மந்திரங்களான் உணர்த்துகின்றார்.

**இருட்டறை மூலை யிருந்த குமரி**
**குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்**
**குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி**
**மருட்டி யவனை மணம்புரிந் தாளே. 1514**

இம் - எனின், திருவருட்சத்தி தன்னை உய்யக் கொண்டவாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஒளியற்ற அஞ்ஞானமயமாகிய உடலில் மூலைக்கண் கிடந்த சத்தி, ஞானசூனியனாகிய ஆன்மாவைக்கூடுதற்கு எண்ணி, அவன் அஞ்ஞானத்தைப் போக்கி, தன்னியல்பும், தடையியல்பும், தலைவனுபகாரமும் உணரச்செய்து, அவனை மருட்டி, மணம்செய்து கொண்டாள் என்றவாறு.

சத்தியை ஒரு பெண்ணாக உருவகித்து அதற்கு ஏற்பப் பொதுத்தன்மைகளைப் புகன்றவாறு.

இருள் - அஞ்ஞானம், தன்னையும் காட்டாது தலைவனையும் காட்டாது ஆன்மவியாபகத்தை மறைத்து நிற்கும் ஆணவமலத்தின் காரியம் இது. அதனையுடைய அறை – மாயாகாரியமாக அஞ்ஞான உறையுளாக இருக்கிற உடல். அதன்கண் இருந்த குமரி – உயிர்கட்கு அஞ்ஞானத்தைப் போக்கி ஞானஒளியை உபகரிக்க

திரோதானசத்தியாக உடனிருக்கும் அருட்சத்தியாகிய பராசத்தி. குருட்டுக் கிழவன் - கண் அவிந்த கணவன். அநாதியே ஆணவமலச் சேர்க்கையால் வியாபகமாகன்ற ஆன்மா. கூடல் - அவனைச் சார்ந்து அவனுக்கு நித்தியானந்தத்தை நல்குதல். மருட்டி - தன்வசமாக்கி. மணம் புரிதல் - ஆன்மகுணம் கெட்டு அருட்குணம் சாரச்செய்தல் (96)

**தேம்புல னான திசையது சிந்திக்கில்**
**ஆம்புல னாயறி வார்க்கமு தாய்நிற்குந்**
**தேம்புல னான தெளிவறி வார்கட்குக்**
**கோம்புல னாடிய கொல்லையு மாமே.** **1515**

இம் - எனின், சத்திநிபாதர்க்குச் சத்தி சுவைக்கப் படுபொருளாக நிற்றலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இனிய பொருளான நிலையை ஆராயின், தமக்கு ஆம் விஷயம் இதுவேயென அறிந்தனுபவிக்க வல்லார்களுக்கு அமுதம்போல இனிப்பதொன்றும்; அம்மட்டோ ! தேன்போலும் பொருளான தெளிவை நுகர்வார்க்குப் பசுக்கள் விஷயமாக விரும்பிய சிவஞானப்பயிர் விளையும் முல்லைநிலமாகிய கொல்லையும் ஆம் என்றவாறு.

தமக்கு இனிக்கும் விஷயமான நிலையை ஆராயின் சிவசத்தி ஆக்கந்தரும் அறிவாய், அறிவிற்கு அமுதாய் இனிக்கும் ; தேறலின் தெளிவாகச் சத்தியை விரும்பி நுகரவல்லார்க்குப் பசுக்கள் தமக்கு விஷயமாக விரும்பிய முல்லை நிலமாம் என்பது கருத்து.

கோப்புலன், கோம்புலன் என எதுகைநோக்கி மெலிந்தது. கோ – பசு. திருமூலதேவர் ஆயாராணநிலைக்கு ஏற்பச் சத்திநிபாத அநுபவம், பசுக்கள் தமக்கு விஷயமாக விரும்பிய முல்லைநிலமாம் என்றார்கள். பொருள் உயிர்கள் நுகர்தற்கேதுவாய பேரின்ப நிலைக்களமாம் என்பது. கோப்புலன் – சிறந்தபுலன்; அதாவது சிவஞானம் எனக் கொள்வாரும உளர் (97)

**இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி**
**அருள்நீங்கா வண்ணமே யாதி யருளும்**
**மருள்நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்**
**பொருள்நீங்கா இன்பப் புலம்பயின் றானே.** 1516

இ – னின், சத்தியருளும் உபகாரம் இத்தன்மைத்தென்றல் நுதலிற்று.

இ – ள்: ஆதிசத்தி, ஆணவமல இருளிலிருந்தும் அகலச்செய்து, கறங்கும் சகடமும்போல இடையறாது வரும் கணக்கற்ற பிறவிகளைக் கடக்கச்செய்து, திருவருளினின்றும் என்றும் பிரியாமே தோயும் வண்ணம் அருள் செய்வள்; அதனால் சத்திநிபாதம் பெற்ற உயிர், திருவருளில் என்றும் நீங்காத தேவதேவனாகிய சிவபெருமானோடு கூடி, புருஷார்த்தமாக ஆன்மாக்கள் தவறாது அடைதற்கு உரியதான வீட்டின்பமாகிய பேரறிவுத் திறத்தில் பயின்றவனாவன் என்றவாறு

ஆதி நீக்கி கடத்தி அருளும் எனவும், அதனால் ஆன்மா கூடிப் பயின்றான் எனவும் முடிக்க. 'இன்பம் புலம்பயிறானே' எனப் பாடம்கொண்டு உண்மையின்பத்துத் தானேபொருந்திச் சரீரமாய்நிற்கும் எனக் கூறுவாருமுளர். சிறந்தது தெரிக. (98)

**இருள்சூ ழறையில் இருந்தது நாடிற்**
**பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போல்**
**மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி**
**அருள்சூழ் இறைவனும் அம்மையு மாமே. 1517**

இ-ம் - எனின், இதுவுமது.

இ - ள் : திருவருட்சத்தி, அறியாமையே நிரம்பிய இந்த மாயா காரியமாகிய உடலில் இருந்த இயல்பை யாராயின், இருட்டறையில் பொருள்களைத் தேடுதற்கு உபகாரப்படும் விளக்கு இருட்டறையிற் புகுந்து பிரகாசமாக எரிந்தாற்போல, ஆணவ காரியமாகிய அறியாமையால் விளைந்த மயக்கத்தில் இதயத்தாமரையில் ஒளிப்பிழம்பாய் எழுந்தருளியிருக்கும் சிவம் ஆன்மாக்கள்மீது வைத்த கைம்மாறு வேண்டாக் கருணையால் சிவமும் சத்தியுமாக விளங்குவர் என்றவாறு.

ஆணவத்தால் மறைப்புண்டு அறிவிழந்து இருளான ஆன்மாக்களிடம் இறைவன் சிவமும் சத்தியுமாக விளங்கி அறியாமையை நீக்கி ஆட்கொள்வர் என்பதாம். **(99)**

## மந்தம்

மந்த சத்திநிபாதமாவது, திருவருட்சத்தி திரோதானசத்தியாய் ஆன்மாக்களைச் சார்ந்து மாயையுள் பதிவிப்பது போலப் பதிவித்துக் கன்மங்களைப் புசிக்கச் செய்து, ஆடையிற்சேர்த்த உவர்மண்போலப் பல கன்மங்களை ஒட்டிச் சிவஞானம் உதவிய பேரருட்செயல் ஆகும்.

**மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி**
**வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்**
**குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி**
**அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே. 1518**

இம் – எனின், சத்திநிபாதத்தின் மந்தபரிபாக நிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆன்மாவைத் தன்வயம் ஆக்கிக் கூடி ஆணவமலத்தொடு மயங்கியிருந்த நிலையைப் போக்கி, கன்மங்களை அச்சம் உறுத்தி வெருண்டோடச்செய்து, ஆன்மாவிற்த இன்பம் விளையச் செய்து. அறியாமை யைப் போக்கி, சிவசீவ குணங்களை உணர்த்தி, திருவரு ளின் கண்ணேயே நீங்காது விளங்குதற் கேதுவாய சிவ ஞானத்தை வழங்கினர் என்றவாறு.

கருத்து வெளிப்படை. (100)

**கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்**
**கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்**
**கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேற்**
**பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. 1519**

இம் – எனின். சத்திநிபாதம் கைவரப்பெற்றார் மீட்டும் வாதனை தாக்காது அதன்கண் நிலைத்திருக்க என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவருட்சத்தியின் நெறிக்கண் தோய்ந்த அநுபவஞானிகள் ஆணவ வலியால் அதன்கண்ணேயே நிலைத்திருக்கும் கருத்திலராவர் ; அங்ஙனமாகாதவாறு நிலைக்கும் உறுதியான ஞானமுண்டாயின் தொடர்ந்து பின் விளையும் பிறவித்துன்பம் இல்லையாம் என்றவாறு.

கன்னியாகுமரிக் கடற்றுறையில் நீராடுபவர் கன்னியா பரமேசுவரியின் மார்க்கத்தில் நின்று அவளருளில் தோயுங் கருத்திலர் ஆவரே ! அதுவும் உண்டாகுமாயின் பிறப்பில்லையே என்று வேறும் ஒருபொருள் வெளிப்படையாகக் கொள்ளக்கிடத்தல் காண்க. (101)

**செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்**
**எய்த வுணர்ந்தவர் எய்யலர் இறைவனை**
**மைவென் றகன்ற பகடுரி போர்த்தவெங்**
**கைய னிவனென்று காதல்செய் வீரே.** 1520

இ - ள்: பந்தசத்திநிபாதமுடையார் சிவமே பரம்பொருளெனக் கொண்டு பத்தி செய்க எனல் நுதலிற்று.

இ - ள் : செய்யனாகிய பிரமனும், கரியனாகிய இந்திரனும், வெளியனாகிய உருத்திரனும், நற்பச்சையனாகிய திருமாலும் அரனைச் சார்ந்துய்ய அறிந்தாரையும் அரனை அடைந்திலர். அங்ஙனமாகலால் நீங்கள், மேகத்தைக் கருமை நிறத்தால் வென்ற பெரிய யானையின் தோலைப் போர்த்த விருப்பத்தக்க ஒழுக்கமுடையான் பரபொருள் என்று உணர்ந்து உறுதிகொண்டு காதல் செய்யுங்கள் என்றவாறு.

பிரமனாதியர் இறைவனைக் கங்கைக்கண் சென்று தரிசிக்கும் நற்பேறு பெற்றார், பரமனோடு இரண்டற ஒன்றும் இன்பமில்லை பெற்றிலர் ; நீங்கள் சிவமே பரம்பொருள் என்றுணர்தலால் நற்பேறு எய்தலாம் ; அன்பு செய்யுங்கள் என்பது கருத்து. அவர்கள் கண்டும், அதிகாரமலத்தில் உள்ள சகலான்மர்க்கள் ஆதலின் பேரின்பம் பெறாராயினர் ; நீங்கள் திருவருட்சத்தியின்

வீழ்ச்சி பெற்றவர்களாதலின், உங்களுக்கு வீட்டின்பம் கிட்டும்; அன்பு செய்து உய்யுங்கள் என்றவாறும், யானைத்தோல் போர்த்தும் இறவாமையே அரனுடைய முழுமுதற்றன்மைக்குச் சான்றாதலை, தக்கயகாப்பரணி உரையானுந் தெளிக.

**எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்**
**தையலுந் தானுந் தனிநா யகமென்பர்**
**வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்**
**கையிற் கருமஞ்செய் காட்டது வாமே.** 1521

இ - னின். அங்ஙனம் பத்தி செய்வார்க்கு அரனருளுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அரனையடுத்து ஒன்றிய காலங்கள் எத்தனையாயினும், சத்தியும் தானும் ஒப்பற்ற நாயகம் என்று உணர்த்தியருளுவார்கள். இதனை உணர்ந்து இடைய றாது நாளும் வணங்குபவர்கட்கு, சிவனடிக்கு அன்பு செய்து அடங்கியிருக்கும் நிலையைக் காட்டும் எடுத்துக் காட்டாக, திருக்கரததால் ஆம் என்றவாறு.

திருக்கரத்தால் ஆவது யாங்ஙனம் எனின், சின் முத்திரையால், தாடலையாகப் பரம்பொருளினடியிலே உன் சிரம் ஒன்றமுனைப்பற்றுக்கிட; அதனால் உனக்குப் பேரின்பம் சித்திக்கும் என்றமையாம்.

காட்டு - எடுத்துக்காட்டு. கருமம் - அடிமையாய் அடங்கிநிற்கும் பணி. தையலும் தானும்வேறாய்த் தோன்றினும் நாயகம் என்ற தலைமைத்தன்மையால் ஒன்றுவர் என்பதை உணாத்தத் தனிநாயகம் என்பார் என்றது. வணங்குபவர்களும சிவசத்திகளைப் பேதித்து எண்ணுமல் அபேதமாக எண்ணுக என்றதாம். ( 103 )

கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்
வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ணல்
நின்றுகண் டார்க்கிருள் நீக்கிநின் றானே. 1522

இ - ன், பக்குவிகட்குச் சோதிதரிசனமும் அதன்பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இடைகலை பிங்கலையாகிய இரண்டு நாடிகளையும் தொடர்ந்து புருவமத்திவரையில் சென்று தீப ஒளி போலவதாய காட்சியைக் கண்டுகொண்டோம், பழமைகள் யாவற்றிற்கும் பழைமையாய், எல்லாம் ஒடுங்குதற்கிடமாய் உள்ள பரமனும், மேலான சுடர் வடிவினனும், வண்டுகள் தேனைக்கொண்டு ஆடுகின்ற மலர்களையணிந்த நீண்ட சடையுடைய அண்ணலுமாகிய இறைவன், தன்னிடம் நிலைபெற்று நின்று தரிசித்தார்க்கு அறியாமையாகிய இருளை நீக்கி நின்றான் என்றவாறு.

இரண்டு என்ற எண்ணுப்பெயர் அதிகார இயைபும் நூலமைதியும் நோக்கி நாடிகளை உணர்த்தி நின்றது; நாடியின் வழியாகப் புருவமத்தியை அடையின் சோதி தரிசனமாம் என்ற இயைபும் உணரநின்றமையின், 'சுடர் ஒளி' இந்த இரண்டும், ஆதாரமுடைய ஒளியும், இல்லாத ஒளியும் என வேற்றுமை யுணரநின்றன. 'சோதியே சுடரே சூழொளி விளக்கே' என்றபோதும் இதனைக்காண்க.

பண்டு பண்டு - பழைமைக்குப் பழைமையாய். ஓயும் - எல்லாம் ஒடுங்குதற்கு இடமாயுள்ள பரமன்

தெய்வங்கள் சூடிய மலரிலே வண்டு மொய்யாதாயினும் வண்டு கொண்டாடுமலர் என்றது "புற்றில் வாழ் அரவன்" என்பதுபோல பொதுமைப் பொதுமை நோக்கிக் கூறியது.

நின்று காணல் - சலியாது சாதிகூடல், இருள் - அறியாமை.

**தீவிரம்**

தைலதாரைபோல இறைவனிடம் நீங்காத அன்பு உடைமையின் மலநீக்கம் பெற்று. ஆடை நெருப்புப் பற்றிக்கொண்டவனைப் போல விரைந்து – இறைவன் அருளிற்சேரிய முதிர்ந்தநிலை. இதனை வரும் நான்கு திருமந்திரங்களான் உணர்த்தியருளுகின்றார்கள்.

**அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்தில்**
**எண்ணிக்கும் ஏழேழ் பிறவி யுணர்விக்கும்**
**உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்**
**கண்ணுற்று நின்றக் கனியது வாகுமே.** 1523

இம் - எனின், இறைவனையே தரிசித்து அதுவாதலே தீவிர சத்திநிபாதம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இனிக்கும் பெண்பிள்ளையாகிய பராசத்தி அப்பன் தோட்டமாகிய இவ்வுலகில், எண்ணிக்கொள்ளக்கூடிய ஏழாக எழுகின்ற பிறவிகளை உணரச் செய்யும்; அதனால் ஆன்மா தனக்குள் நிற்பனவாகிய மலமாயா கன்மங்கள் நீங்க முதல்வனையே தரிசித்து நின்று, கனியாகிய அச்சிவமேயாகும் என்றவாறு.

அண்ணிக்கும் - அணுகும் எனலுமாம். அப்பன் - இறைவன். தோட்டம் என்றது உலகத்தை. உலகம் இறைவனுக்குரியதாய் அவன்தர நமக்குத் கிடைத்த தாகலின் அப்பனுர் தோட்டம் என்றது.

எண்ணிக்கும் - எண்ணிக்கொள்ளும்: வழக்கியல் மொழி. இவ்வுலகில் நாம் எடுத்த பிறவிகளை உணரச் செய்யும் என்பதாம். உண்ணிற்பது எல்லாம்; ஒருமை பன்மை மயக்கம். உண்ணிற்பனவாகிய ஒவ்வொரு பொருளையும்; என்றது ஐவகைப்பாசங்களையும். சத்தி நிபாதம் பெற்ற ஆன்மா கண்ணுற்று நின்று அக்கனி யாகும் என எழுவாய் வருவித்து முடிக்க. (105)

**பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்**
**மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும்**
**குறப்பெண் குவிமுலை கோமள வல்லி**
**சிறப்பொடு பூசனை செய்யநின் றூர்க்கே. 1524**

இ-ம் - எனின், தீவிரசத்திநிபாதம்பெற்று அவளை வழிபடுவார் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மலையரசன் மகளும், குவிந்த பரஞானம் அபரஞானம் என்ற இரு முலைகளை உடையவளும், அழகிய கொடி போல்பவளும் ஆகிய பராசத்தியை நித்திய நைமித்திக முறையால் வழிபடுகிறவர்களுக்கு. அவள், இடையறாது வினைவயத்தான் வரும் பிறவியை யறுப்பாள்; பெரிய தவத்தை நல்குவாள்; அவித்தியா காரியமான மறதியைப் போக்குவாள்; உலகமனைத்தும் இவளை வழிபட வைப்பாள் என்றவாறு.

கோமளவல்லி, நின்றூர்க்கு அறுக்கும்; நல்கும்; அறுக்கும் வைக்கும் எனமுடிக்க. சிறப்பு - நவராத்திரி,

பௌர்ணமி முதலிய விழாக்கள். பூசனை - நாட்பூசை. தீவிரசத்திநிபாதமுற்றார் அவளைப் போற்றுவர். அதனால் அவள் இன்ன இன்ன பயன்களைப் பாலிப்பள் என வகுத்தவாறு. (106)

**தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்**
**பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடும்**
**ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்**
**தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. 1525**

இம் - எனின், தீவிர சத்திநிபாதம் பெறும் அதிகாரிகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: எட்டுத்திசைக்கும் தலைவனாகிய சிவத்தை மலர்கள் விளங்குகின்ற மாலையணிந்த புரிந்த குழலையுடையாளாகிய சத்தியோடு தியானியுங்கள்; அங்ஙனம் தியானிக்கும் அறிவுடையார்களுக்கு மிக்க நீல ஒளியானது இடைவிடாது புலனும் என்றவாறு.

நீல ஒளி என்றது பராதரிசனத்தை. ஆகவே சத்திநிபாதம் மிகும் என்பதாம். (107)

**நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்**
**பணிகினும் பன்மலர் தூவிப் பணிவன்**
**அணுகிய தொன்றறி யாத வொருவன்**
**அணுகும் உலகெங்கு மாவியு மாமே. 1526**

இம் - எனின், சத்திநிபாதம் பெற்றார் ஞானமுற்று உலகும் உயிரும் ஆய் நிறைவர் எனல் நுதலிற்று.

இ - ள்: சத்திநிபாதம் பெற்றானை அணுகினும் ஞானக் கொழுந்தாகிய சிவஞானத்தை நல்குவன்:

அவனை வணங்கின் அவனும் பல பூக்களைத் தூவி வழிபடுவன். தன்னை வந்தடைந்த துன்ப இன்பங்கள், உற்றார் மாற்றார் அன்பர் என்பர் ஒன்றையும் வேறு படுத்தி அறியாத அவ்வொப்பற்றவன் தான் அணுகிய உலகெங்கும் உயிர்போல நிறைந்து நிற்பன் என்றவாறு.

சத்திநிபாதம் பெற்ற ஞானியை நணுகின் சிவ ஞானம் உபதேசிப்பன். ஞானக்கொழுந்து – ஞானத்தின் உச்சி, என்றது உணர்வரிய மெய்ஞ்ஞானத்தை,

பணிகினும் பல் மலர் தூவிப் பணிவன் : சிவ ஞானிக்கு அடியார் வேடமும் அரனெனத் தொழும் உயர்மனப்பான்மை உண்டாம் ஆதலின், அன்பர்கள் தம்மைப் பணியின் இவன் அவர்களைப் பலமலர் தூவிப் பணிகுவன் என்று அணைந்தோர் தன்மையின் சிறப்புத் தெரிவித்தவாறு.

அணுகியது ஒன்று அறியாத ஒருவன் : சிவஞானி பேதஞானம் அற்றுச் சிவமே தானாய், பித்தர் பாலர் நிலையை ஒத்திருப்பன் ஆதலின் தம்மை வந்தணுகிய துன்பம் இன்பம் முதலிய ஒன்றையும் அறியாத ஒப்பற் றவன் என்றது. சிவம் இயங்குவ நிற்பவான யாவற்றி னுள்ளும் புறம்பும் ஒத்துக் கலந்து பூரணமாக இருத்தல் போல, இவனும் ஆவன் என்பதை 'அணுகும் உலகெங் கும் ஆவியும் ஆமே' என்றது. **(108)**

## தீவிரதரம்

அஃதாவது, முற்கூறிய சத்திநிபாதத்தில் மிகமுறு கிய நிலையாம். இதனை மூன்று மந்திரங்களான் உணர்த்தி யருளுகின்றார் திருமூலதேவநாயனார்.

**இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி**
**குருவென வந்து குணம்பல நீக்கித்**
**தருமென ஞானத்தால் தன்செய லற்றால்**
**திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. 1527**

இம் - என்னின், இருவினை யொப்பும் சத்திநிபாதமும் பெற்ற ஞானி எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இருவினைகளும் நேரும் வகையில் ஒத்த காலத்து, இனிய திருவருட்சத்தி குருவாக எழுந்தருளி, ஆன்ம குணங்களைப் போக்கி அருளுவள் என்ற அறிவால் பசுவாகிய தன் செயலற்றிருப்பின், மும்மலங்களும் கெட்டுச் சிவமேயாவன் என்றவாறு.

இருவினையொப்பாவது, ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணியம் பாவம் இரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து, விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறொப்ப நிகழ்தலாம். இது மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிய மாபாடியத்துக்கண்டது. ஏனையோர் கருத்தும் புடை நூலாரின் பொருந்தாக் கோளும் ஆகிய விரிவை எட்டாஞ் சூத்திரம் முதலதிகரணத்து 'பசித்துண்டு' என்னும் உதாரண வெண்பாவின் உரைக்கிடையிற் காண்க.

அருட்சத்தி குருவென வருதலாவது, அலரும் பருவத்தின் அரும்புபோல இருவினை யொப்புப் பெற்ற பரிபாகிக்கு உண்மைஞானம் உணர்த்தத் திருவருட் சத்தியே குருவாக எழுந்தருளுதலைக் குறித்ததாம்.

குணம்பல போக்கலாவது, சீவகுணம் போக்கிச் சிவகுணம் பொருந்தச் செய்தல்.

ஞானத்தால் – உறுதியான அறிவால். தன்செயல் – ஆன்மச்செயல். **(109)**

**இரவும் பகலும் இலாத இடத்தே**
**குரவன் செய்கின்ற குழலியை உன்னி**
**அரவஞ்செய் யாமல் அவளுடன் சேரப்**
**பரிவொன்றி வாழும் பராபரை தானே.** **1528**

இம் – எனின், சத்தி பதியும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இராப்பகல் அற்ற இடத்தில் இருந்து கொண்டு, குராமலரை அணிந்த கூந்தலையுடையாளாகிய சத்தியைத் தியானித்து, மௌனமாக அவளுடன் கூடியே இருக்க, பராபரையாகிய அவளும் அன்போடு இவனைப் பொருந்தி வாழ்வள் என்றவாறு.

இரவும் பகலும் அற்ற இடம் – மதி மண்டலமாகிய சகத்திராரம்.

குரவம் செய்கின்ற குழலி - குண்டலினியாகிய பராசத்தி. அவளை உன்னுதலாவது மூலாதாரம் முதல் முறையே ஏற்றிப் பிரமரந்திரத்தை அடையச் செய்து, மீட்டும் கீழிறங்காதவாறு தியானித்தல்.

அரவம் – ஒலி. பராபரை பரிவு ஒன்றி வாழும் எனக் கூட்டுக.

பரிவொன்றிலாளும் எனத் தவறான பாடங்கண்டு இடர்ப்படுவாரும் உண்டு. வாழும் என்ற பாடம் மூலநிதி யுடைய எமது ஞானக்கருவூலத்துப் பிரதியிற் கண்டது. **(110)**

**மாலை விளக்கும் மதியமும் ஞாயிறும்**
**சால விளக்குந் தனிச்சுடர் அண்ணலுள்**
**ஞானம் விளக்கிய நாதன்என் உள்புகுந்**
**தூனை விளக்கி யுடனிருந் தானே.** 1529

இ௯ - எனின், தீவிரதர சத்திநிபாத முடையார்க்குச் சிவம் பிரகாசிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மாலைக்காலத்து விளக்கும், மதியமும், ஞாயிறுமாகிய ஒளிப்பொருள்களையும் மிக விளக்கஞ் செய்கின்ற ஒப்பற்ற பரஞ்சுடராகிய பரசிவம், ஆன்மாவினுள் ஞானம் பிரகாசிக்கச் செய்வதற்காக, தானே தலைவன் என்று அறிவித்து, உயிர்க்குயிராகப் புகுந்து உயிர் குடியிருக்கும் குடிலாகிய உடலையும் ஒளியுடலாக விளங்கச் செய்து உயிருக்கு உடனுயிராந்தான் என்றவாறு.

மாயேயமான உலகப்பொருளை விளக்கும் மாயேயமான சூரிய சந்திர அக்கினிகளுக்கும் ஒளிமிகச் செய்பவரான பரஞ்சோதிப்பெருமான் உயிருடனாக உண்மை ஞானம் விளங்கச்செய்ய உயிருட்புகுந்து உடலையும் ஒளிபெறச் செய்து உடனிருந்தான் என்பது கருத்து.

விளக்கு ஒளிதருவது மாலைக்காலத்தாகலின் மாலை விளக்கு என்றது. விளக்கிய : செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். விளக்கிய புகுந்து எனக்கூட்டுக. அறிவிக்க அன்றி அறியா உளங்கள் ஆதலின், தலைவன் தான் என்பதை அவனறிவிததாலன்றி உயிர்களுணரா வாகலின் ' நாதன் என் உட்புகுந்து ' என்றது. ஊன் - உடல் ; ஆகுபெயர், உடனிருந்தான் - சத்திநிபாதர் செய்யும் செயல்களுக்கு உடனாக இருந்தான் என்பது.

இதனால் அவர்க்கு ஆகாமிய சஞ்சிதங்கள் சாரா எனக் குறிப்பித்தவாறு. (111)

## 18- புறச்சமய தூஷணம்

அஃதாவது, சித்தாந்தசைவம் அல்லாத அகமும் புறமும் ஆகிய சமயங்களின் பொருந்தாமை கூறுதல். இதனை இருபது திருமந்திரங்களான் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். இவற்றுள் 'சிவமல்லதில்லை' என்பது முதலிய பல மந்திரங்களான் சிவபரத்துவம் உணர்த்துவரேனும் சித்தாந்த சைவச் செம்பொருள் கூறி ஏனைய மதங்களுக்கு அந்தச் சிறப்பின்மையை உணர்த்துமுகத்தான் தூஷித்தவாறு.

**ஆயத்துள் நின்ற அறுசம யங்களுங்**
**காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா**
**மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்**
**பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே. 1530**

இ-னின், கடவுளைக் காட்டும் சமயம் இதுவென உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : கூட்டமாக விளங்கும் ஆறு சமயங்களும் உடலுக்குள் வீற்றிருக்கின்ற பரம்பொருளைக் காணா ; அச்சமயங்களைப் பற்றுவார், மாயையாகிய குழியில் விழுவர் ; அதனால் மனைவி மக்கள் என்னும் கட்டில் அகப்பட்டுப் பதைக்கின்றவர்கள் ஆவர் என்றவாறு,

புறச்சமயங்கள் கடவுளைக் காணா ; அதனால் அவற்றை மேற்கொள்வாரும் மலமாயை பாசங்களினின்று நீங்கார் என்பதாம். ஆயம் – கூட்டம். சமயக்

கூட்டங்கள் ஆறு - ஆறுவகையான அகமும் புறமும், அகப்புறமும், புறப்புறமுமாய சமயங்கள்.

காயம் - உடல். உடல், உத்தமனிருப்பிடமாகிய கோயிலாதலின் அங்கே கடவுளைக் காணார் என்றது. சமயிகள் காண்கிலார் எனக் கூறவேண்டியிருக்கச் சமயங்களும் காண்கிலா எனச் சமயங்களை வினைமுதலாகக் கூறியது சமயிகளுக்கு உணர்விருந்தும் கருத்தாத் தன்மை யிழந்து கொள்கைவழி நடப்பவராயினமையின் என்க. ஆயினும் பிற்பகுதியில் சமயிகளைச் சுட்டுதல் காண்க.

மாயக்குழி – புறச்சமயக் கொள்கைகள் ; அன்றிக் கருக்குழியிற்பட்டு மீளவும் பிறந்து எனலுமாம் ( 112 )

**உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்**
**வள்ளல் தலைமகன் மலருறை மாதவன்**
**பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படுங்**
**கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே.** 1531

இ-ம் - எனின். இறைவன் இடைவிடா துறையும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் இறைவன் நினைப்பவர் மனத்துள் மறைந்தும், எங்கும் வியாபகப்பொருளாயும் விளங்குபவன் ; அவனே உயிர்கட்கு வேண்டுவ யாவற்றையும் கைம்மாறு வேண்டாது வழங்கும் வள்ளல் ; ஆன்மாக்கள் தன்னிச்சைவழிச் சென்று கெடாதவாறு சிவநெறிக் கண் செலுத்தும் தலைவன் ; இதயத்தாமரையுள் எழுந்தருளியிருக்கும் சத்தியுத்தன். நவத்துவாரங்களோடு கூடிய உடலாகிய குடிசையிற் புகுந்து புறப்படும்

கள்ளத்தலைவன் ; அவன் திருவுள்ளக் கருத்தைப் புறச் சமயிகள் அறியார் என்றவாறு.

இம்மந்திரக் கருத்து ' என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு, என்னுளே நிற்தும் இன்னம்ப ரீசனே ' என்னும் குறுந்தொகைக் கருத்தோடு ஒத்திருத் தல் காண்க. தான் என்றது இறையை. உள்ளத்துளே கரந்து என்றது ஒன்றாய் நிற்கின்றமையையும், எங்கும் நின்றானென்பது வேறாய் நிற்கின்றமையையும் உணர்த் தின. புகுந்து புறப்படும் - உயிர்ப்பாக உடலிற்புகுந்து வெளிப்படும். போள்ளல் - பொத்தல். **(113)**

**உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்**
**குள்ளதத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை**
**உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்**
**குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே 1532**

இ - ளின். அரன் அவரவர் நிலைக்கு ஏற்ப அருளுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உயிரினிடமாக விளங்குகிறான் இறைவ னென்பார்க்கு அவர்களுயிரினிடமாக இருந்து அருள் புரிவன் ; வேறாக வெளியில் இருக்கின்றான் என்கின்ற பேதஞானிகளுக்கு வேறாக வெளியில் நின்று அருள் வழங்குவன் ; இரண்டிடத்துமில்லை என்னும் நாத்திக வாதிகளுக்கு இரண்டிடத்தும் இல்லாதவனாகின்றான் என்றவாறு.

அன்றி, உள்ளத்தும் உளன் என்பார்க்கு உள் ளத்தும் உளன் புறத்துமுளன் எனவும், புறத்துளன் என்பவர்க்கு உள்ளத்தும் உளன் புறத்தும் உளன்

எனவும் கூட்டி அவரவர் அறியாமையால் கூறுவாராயினும் இறைவன் ஒப்ப இருந்து அருளுவன் எனக் கருணைத்திறங் காட்டியவாறு எனவும் கொள்ளலாம். அங்ஙனமே உள்ளத்து இல்லை என்பார்க்கு இருமருங்கும் இல்லாதவனாகவும், புறத்தில்லை யென்பார்க்கும் அங்ஙனமேயாகவும் விளங்குவன் எனலுமாம். (114)

**ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்**
**ஆறு சமயப் பொருளும் அவனலன்**
**தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்**
**மாறுதல் இன்றி மனைபுக லாமே.** *1533*

இம் - எனின், இறைவன் சமயாதீதப் பழம்பொருளாமாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆறு சமயங்களையும் அறிந்தவர்கள் இறைவனை உள்ளவாறு உணர்ந்தாரல்லர். ஆதலால், ஆறுசமயங்களால் அறிவிக்கப்பெறும் பொருள்களும் அவனல்லன் என்பது துணிபு. ஆகவே இறைவனைத் தேறுக : தெளிக ; தெளிந்தபின் மாறின்றி வீட்டின்பத்தை எய்தலாம் என்றவாறு.

ஆறுசமயங்களின் வகைகளையும் கொள்கைகளையும் சிவஞானமாபாடியத்தும், சித்தியார், சங்கற்பநிராகரணம் முதலிய நூல்களிலும் பரக்கக்காண்க. மனை - வீடு, முத்தி. (115)

**சிவமல்ல தில்லை யறையே சிவமாந்**
**தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்**
**கவமல்ல தில்லை அறுசம யங்கள்**
**தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்யு நீரே.** *1534*

இ-ம் - எனின், இதுவரை தலைவன், இறைவன் என இலக்கண வகையானும் அளவையானும் உணர்த்திய ஆசிரியர் இறைவனுவான் சிவனே என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சிவமல்லாது இறையில்லை. இது துணிவு. அதுபோலச் சிவயோகமல்லாது தவம் இல்லை. சமயத் துறையில் புகுந்து சிறக்க விரும்புவார்க்கு ஆறு சமயங் களும் வீணனவையாகும். ஆதலால் சிவயோக சமாதி யிற் றேறிய ஆசாரியன் சீபாதத்தைச் சேர்ந்துய்யுங்கள் என்றவாறு.

தலைப்படுதல் – கூடுதல் ; சிறத்தல், ஆதலால் கூடிச் சிறப்பார்க்கெனப் பொருள் கூறப்பெற்றது. அறையே • பறையறைந்து உண்மை உணர்த்துவதாம். சிவமாந் தவம் அல்லது தவம் இல்லை என ஒரு சொல் வருவித்து முடிக்க. அறு சமயங்கள் தலைப்படுவார்க்கு அவம் அல்லது இல்லை என்க. (116)

**அண்ணலை நாடிய ஆறு சமயமும்**
**விண்ணவ ராக மிகவும் விரும்பியே**
**முண்ணின் றழியு முயன்றில ராதலான்**
**மண்ணின் றெழியும் வகையறி யார்களே.** 1535

இ-ம் – எனின். அறுவகைச் சமயத்தினது முடிபும் பதமுத்தியே என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் இறைவனை விரும்பிய அறுவகையான சமயங்களும் பதவிகளைத் தந்து விண்ணவர்களாக விரும்பியேயாம் ; முள்போலும் துன்பம் தருவதாய இப் பிறவி அறவேயழிய முயன்றிலர் ஆதலால், அவர்கள்

கன்மபூமியை விட்டு நீங்கும் உபாயம் அறியாதவர்கள் ஆவர் என்றவாறு.

அண்ணல் - இறைவன். பைரவம், காளாமுகம், பாசுபதம், சௌரம், கௌமாரம், காணபத்யம் முதலான பலவேறு அறுவகைச் சமயங்களும் அவ்வவர் பதங்களாகிய முத்தியைத் தந்து தேவர்களாக்கும். அவற்றை மேற்கொள்ளுவார் காமியப்பலன் கருதிச் செய்வோரேயாவர். அவர்கட்குப் பரமுத்தி சித்தியாது என்பதாம்.

முள் நின்று - முள்போலும் துன்பம் தருவதாய பிறவியினின்று. மண் - மாயேயமாகிய அனைத்துலகையும் உணர்த்திற்று. (117)

**சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்**
**பவகதி பாசப் பிறவியொன் றுண்டு**
**தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில்**
**அவகதி மூவரும் அவ்வகை யாமே.** 1536

இ - னின், சிவகதியின் உயர்வும் ஏனையகதிகளின் இழிவும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவகதியே கதி : ஏனையவெல்லாம் பிறவிக்கேதுவாய கதிகள்; அவற்றைச் சாரின் பாசத்தால் இடையறுது விளைவதாய பிறவியோடு ஒன்றுதல் உளதாம் ; நேரே சிவத்தைச் சார்தலுக்கு வாயிலாகிய தவகதியோடு தோன்றில், வீணான பதமுத்திகளில் சிக்கிய அயன் மால் உருத்திரராகிய மூவருங்கூட அத்தவகதியைப் பின்பற்றுபவர் ஆவர் என்றவாறு.

நேர் ஒன்று தவகதி தன்னொடு தோன்றில், அவ கதி மூவரும் அவ்வகையாமா எனக் கூட்டுக. நேர் - ஒப்பு. தனக்குநேர் தான் ஒன்றேயான தவகதி என்ப தாம். தவகதி தன்னொடு தோன்றில் - தவகதியானது தவத்தோனாகிய தன்னொடு தோன்றுமாயின். அவகதி மூவரும் - தவகதிபற்றாது அவகதியைப் பற்றிப் பதவி களைப்பெற்ற மூவரும். அவ்வகையாம் - அவ்வகையில் இவர்களைப் பின்பற்றி ஈடேறுவர் என்பதாம். அவர் எனற்பாலது ஆம் என நின்றது; ஞானிகள் வாக்காகிய ஆரிடமாதலின்.

(118)

**நூறு சமயம் உளவா நுவலுங்கால்**
**ஆறு சமயமவ் வாறுட் படுவன**
**கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா**
**வீறு பரநெறி யில்லா நெறியன்றே** **1537**

இ - எனின், பலசமயங்களுள்ளும் சிவநெறியே தனிச்சிறப்புடையது எனல் நுதலிற்று.

இ - ள் : சொல்லுமிடத்து, பல நூற்றுக்கணக் கான சமயங்கள் உள்ளனவாம். அவைகள், உட்சம யங்கள் ஆறும், புறச்சமயங்கள் ஆறுமாக உள்ளடங்கு வனவாம். நூல்களிற் கூறப்படுகின்ற சமயநெறிகள் கொண்ட விதிமுறைக்கண் நில்லாத தனிப்பெருமை பரநெறியில் ஆம் சிவநெறியன்றோ என்றவாறு.

உட்படுவன ஆறு; எனவே, சமயம் ஆறு என்பது புறச்சமயத்தைப் பாரிசேடத்தால் உணர்த்திற்று. நெறி நில்லா வீறு பரநெறியில். ஆம் நெறியன்றே எனக் கண்ணழிவு செய்து, அகமும் புறமுமாகிய சமய நெறிக்கண் நில்லாத தனிப்பெருமை பரநெறியாகிய

சிவநெறியில் விளையும் நெறியன்றோ எனப் பொருள் கொள்க. வீறு – தனிப்பெருமை. இதனை ஈறு எனப் பிரித்து இடர்ப்படுவாரும் உளர். (119)

**கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்**
**சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்**
**குத்தந் தெரியார் குணங்கொண்டு கோதாட்டிப்**
**பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.** 1538

இ - னின், சிவனே பரம்பொருள் என்பதை அறியாத சமயிகளின் இழிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பொருள் அறியாமலே கத்துகிற கழுதைகள்போன்ற மூடர்கள், சுத்தசிவன் எங்கும் தோய்ந்து நிற்கின்றான் என்பதைத் தமது அஞ்ஞானமாகிய குற்றத்தால் அறியாதவர்களாய், சிவனுடைய குணங்களை அறிந்து பாராட்டமாட்டாதவர்களாய், பித்தம் தலைக்கேறிப் பிறந்து இறப்பார்கள் என்றவாறு.

குற்றம் என்பது எதுகைக்கேற்பக் குத்தம் என ஆயிற்று. பரசிவம் எஞ்சாத பூரணமாய் இருப்பதை அநாதியேயுள்ள ஆணவமல காரியமாகிய அஞ்ஞானத்தால் தெரியமாட்டாராய், சிவகுணங்களை ஏற்றுப் பாராட்டமாட்டாதார் ஆயினர். அதனால் பைத்தியம் பிடித்து மீண்டும் மீண்டும் பிறந்திறந்து உழல்வர் என்பது கருத்து. (120)

**மயங்குகின் றாரு மதிதெளிந் தாரும்**
**முயங்கி யிருவினை முழைமுகப் பாய்ச்சி**
**இயங்கிப் பெறுவரே லீறது காட்டில்**
**பயங் கெட்டவர்க்கோர் பரநெறி யாமே.** 1539

இ - னின், உண்மைச்சமயம் இதுவாமென உணரும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று

இ - ள : மலத்திற் பிணிப்புண்டு மயங்குகின்றார்களும், அங்ஙனம் மயங்காது புத்தி தெளிந்தவர்களும் கூடி. தம் வினைகளிரண்டையும் குகையின்கண் புகச் செலுத்தி, இறைவன் அன்பின் கண்ணேயே இயங்கி, அவனருளைப் பெறுவாராயின். அனைவர்க்கும் ஈருண நாட்டில் அச்சமில்லாது ஆடுபவர்க்கு உரியதோர் பரநெறி வினையுமா என்றவாறு.

மயங்குகின்றார் - அஞ்ஞானத்தாலே தன்னையும் தலைவனையும் தடையையும் அறியாது மயங்குகின்றவர்களும், தானே தலைவன் என்பாரும். தன்னுணர்ந்தும் தலைவனைச் சார்ந்து வெளிப்படுகின்றது என்பாரும், தன்னறிவால் அனைத்தையும் அறிந்து தான் சுகரூபி எனத் தெளிவாரும் எனப் பலவகையர்.

மதி தெளிந்தாரும் - தலைவன் ஒருவன் உளன் ; அவன நித்தியானந்த வடிவுடையான்; தடையினீங்கி அவனை அடைந்து அநுபவித்தலே சிறந்தநெறி எனத் தெளிந்தாரும்.

இரு வினை முயங்கி - அவ்விருவருமே நல்வினை தீவினைகளோடு கூடி. தெளிந்தார் பிராரத்த வினையோடு கூடி, மயங்கினர் பிராரத்தத்தோடு பின்னியும், ஏனைய ஆகாமிய சஞ்சிதங்கள் ஏறப்பெற்றுக் கூடியும் என்பதாம். முழை முகப் பாய்ச்சி – வினைகள் சேட்டியாவாறு பாழான குகைவாயில்களில் பாயச்செய்து. முகப்புப் பாய்ச்சி என்பது முகப்பாய்ச்சி என விகாரப்பட்டது

இயங்கி – வினைகெட்ட ஆன்மாக்கள் இயங்குதற் குரிய இடர் திருவடிப் பற்றேயாதலின் இயங்கி என்ற வினைக்கேற்ப இடம் வருவிக்கப்பெற்றது.

பெறுவரேல் - திருவடிச்சார்பைப் பெறுவரேல் எனச் செயப்படுபொருள் வருவிக்கப்பெற்றது

ஈறது காடு - சுடுகாடு. பயம் கெட்டவர் – அச்ச மற்றவராகிய சிவன். கெட்டவர்க்கு ஓர் பரநெறி - கெட்டவர்க்குரியதோர் பரமார்க்கம். ஆம் - ஆகும்; விளையும் என்பதாம். (121)

**சேவகர் அணியன் பிணியிலன் பேர்நந்தி**
**தூயன் துளக்கற நோக்கவல் லார்கட்கு**
**மாயன் மயங்கிய மானுட ராமவர்**
**காயம் விளைக்குங் கருத்தறி யார்களே** 1540

இம் – னின், உண்மைச் சமயி உணரும் இறை யின் உண்மையியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சேய்மைக்கண் உள்ளான்; அண்மையில் உள்ளான்: இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்; அவன் பெயர் நந்தி என்பதாகும்; சித்தசலனமின்றித் தியானிக்வல்லவர்கட்குத் தூய்மையான பொருளாக விளங்குபவன்; மாயையால் மயக்கப்பெற்ற மனிதர் கட்கு மாயன்; அம்மனிதர்கள் தமக்கு அவன் உடலை உதவிய கருத்தை அறியார்கள் என்றவாறு.

இறைவன் தமக்கு உடலை உதவியது வினைகளை நுகர்ந்து பாசங்களை நீக்கித் திருவடிச்சார்புபெற என்பதை அறியாராயினர் மக்கள் என்பது கருத்து. (122)

111

வழியிரண் டுக்குமோர் வித்தது வான
பழியது பார்மிசை வாழ்தல் உறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழி வறி வார்நெறி நாடநில் லாரே. 1541

இ-ம் - எனின், கன்மபூமியிற் பிறத்தலின் நோக்கமும், அஃதறியாமையான் எய்தும் கேடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நற்கதி தீக்கதியாகிய இரண்டற்கும் ஒரே வித்தானது வினையால் இப்பூமியில் வாழ்தல். இதில், சுழுமுனைத் தியானம் கைவந்த சிவஞானியின் உபதேச வழியில் நின்று, தங்கேட்டினைத் தாமே அறிவார் புறநெறிகளை விரும்பார் என்றவாறு.

வழி இரண்டாவன சன்மார்க்கம் துன்மார்க்கம் என்பன. இவை ஊர்த்துவகதி அதோகதி என்றும் கூறப்படும். ஓர் வித்தது - இவ்வழி இரண்டற்கும் விதையான மாயையாகிய விதை ஒன்றே நல்வழிச் செல்வார் நல்வழி நாடவும். தீவழிச்செல்வார் அதனைச் தோயவும் செய்வது மாயை ஒன்றே. மாயையே வினைகளை அழுந்தி அனுபவிக்கச் செய்வன. அதற்கு உபகாரமாகத் தனு கரணாதிகளாகப் பயன்படுவன என்பது தெளிக. பழி - மாயை. பார்மிசை வாழ்தல் - கன்மபூமியில் பிறந்து வாழ்தல்.

சுழி அறிவாளன் - நடுநாடியாகிய சுழுமுனையை அறிந்து அனுபவிக்க வல்லவன். சொல் - உபதேசம். அவன் உபதேசவழியில் நிற்பவர்கள் தாம் பிறந்ததன் நோக்கம் அறிவார்கள் ஆதலின் தம் அழிவு அறிந்து தப்புவார்கள் ஆயினர். நெறி - புறச்சமயம். நாட - விரும்ப.

**மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்**
**நாதம தாக அறியப் படுநந்தி**
**பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்**
**ஆதியும் அந்நெறி யாகிநின் றானே** 1542

இம் - எனின், இறைவனை வணங்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பெரிய தவமுடையார் அனைவரும் மகா தேவன், பிரான் என்று வணங்குவர். நாத வடிவாக அறியப்படும் நந்தியை, இவர் அவரென்று இரண்டாட் டாது உறுதியாக இவனே பிரான்; இவனலாது பிரா னில்லை யென்று தொழப்பெறின், முதல்வனும் இவர் கள் தொழுகின்ற அந்நெறிக்கண் வெளிப்பட்டு நின்று அருளுவன் என்றவாறு.

நாத வடிவான இறைவனைப் பேதஞானமின்றி வழிபடுக; அவன் அம்மார்க்கத்தில் வந்து அருள்வழங் குவன் என்பதாம். (124)

**அரனெறி யப்பனை யாதிப் பிரானை**
**உரநெறி யாகி யுளம்புகுந் தானைப்**
**பரநெறி தேடிய பத்தர்கள சித்தம்**
**பரநெறி யாவிடிற் பல்வகைத் தூரமே.** 1543

இம் - எனின், புறநெறிச்செல்வார் இறையருள் எய்தமுடியாது எனல் நுதலிற்று.

இ - ள்: மேலான மார்க்கத்தைத் தேடிய அன்பர் சித்தம், சிவநெறிக்குத் தலைவனாக விளங்குபவனை, முதற்கடவுளை, பரஞானத்தை வழியாகக்கொண்டு

அடியேன் உள்ளத்தில் புகுந்தவனை அறியாவிடினும் அவர்கள் சித்தத்தை அரன் திருவுளத்துக் கொள்ளா விடினும், சமயவாழ்விற்குப் பலவகையானும் தூரம் ஆம் என்றவாறு.

இறைவனால் ஏற்றுக்கொள்ளப் பெறுதவர்களும், இறைவனை அறியாதவர்களும் சமயிகள் ஆகார்; புறத் திற் சேய்மைக்கண்ணோர் என்பது கருத்து. உரநெறி — அறிவுநெறி. (125)

**பரிசற வானவன் பண்பன் பகலோன்**
**பெரிசறி வானவர் பேற்றில் திகழுந்**
**துரிசற நீநினை தூய்மணி வண்ணன்**
**அரிதவன் வைத்த அறநெறி தானே** 1544

இம் - எனின், பெருமானருளிய சன்மார்க்கத்தின் உயர்வு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நீ உன் பரிசாகிய ஆன்மபோதம் நீங்க, இந்திரன், பண்புடையனாய பிரமன், சூரியன், தம்மைப் பெரிதாக அறியும் ஏனைய தேவர்கள் இவர்கள் பெற்ற பேறாகிய பதவிகளில் விளங்கும் குற்றம் நீங்கத் தியானிப்பாயாக. தூய வெண்பளிங்குபோலும் நிறமுடையவனாகிய பரசிவம் ஆன்மாக்களாகிய நம்பொருட்டு வைத்த சன்மார்க்கநெறி அதுவேயாம் என்றவாறு.

வானவன் — விண்ணைத் தனது ஆட்சியிடமாகக் கொண்ட இந்திரன், பண்பு - குணம், பண்பன் - குணவானாகிய பிரமன்; பண்பு அடைமொழி இன்றிச் சாத்துவிகத்தை உணர்த்தி, பண்பன் என்பது அக்குண முடைய பிரமனை உணர்த்திற்று.

பெரிசு அறி வானவர் - தம்மையே பெரிதாக எண்ணி இறுமாக்கும் தேவர்கள். அவர்கள் அடைந்த பேறு - இந்திரன் முதலிய இறைபவர் பதங்கள். அதன் கண் நிகழும் துரிசு - மலமாயைகளால் மறைப்புண்டு அஞ்ஞான வசத்தராய்ச் செருக்குதல். அது நீங்க நீ நினை; அதுவே இறைவன் நாம் உய்யத் தந்த சன்மார்க்க நெறி என்பதாம். ( 126 )

**ஆன சமயம் அதுஇது நன்றெனும்**
**மாய மனிதர் மயக்க மதுபொழி**
**கானங் கடந்த கடவுளை நாடுமின்**
**ஊனங் கடந்த வுருவது வாமே.** 1545

இம் - எனின், புறச்சமயிகளின் பொய்யுரை கேளாது விழுப்பொருளை நாடுக எனல் நுதலிற்று.

இ - ள் : சமயங்களான இவற்றுள் இது நல்லது அது நல்லது என்கிற மயக்கமாகிய மதுவைப் பொழி கின்ற மாயமனிதர்களாகிய காட்டினைக் கடந்து விளங் கும் இறைவனை நாடுமின்; அதுவே ஊனெடுத்த உடம் பைக் கடந்துள்ள ஞானவுருவுடையதாம் என்றவாறு.

மாய மனிதர் - வஞ்சகர். மயக்கம் மது பொழி கானம் - அறிவீனத்தால் மயங்கிச் சொல்லும் உரை களாகிய கள்ளைப் பொழிகின்றகானம். நாடுமின் என்றது பொதுவகையான் அனைவர்க்கும் அறிவித்தது. ( 127 )

**அந்நெறி நாடி அமரர் முனிவருஞ்**
**சென்னெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்**
**முன்னெறி நாடி முதல்வன் அருளிலார்**
**சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே.** 1546

இ-ள்: அந்தச் சிவநெறியைத் தேடி அடைந்த தேவர்களும் முனிவர்களும் தாம் செல்லத்தக்க நெறியாகிய சிவநெறியைக் கண்டார்கள். சிவன் என்றே சொல்லப்பெற்றனர். அதன்பின்னும் முதல்வன் அருளிலராய், செல்லவேண்டிய நெறிக்கண் செல்லமாட்டாராய், மக்கள் காட்டிய நெறியே உயர்ந்தது என்று திரியவுணர்ந்து அவர்கள் திகைக்கின்றவாறு என்னே! என்றவாறு.

இம் - எனின், சிவநெறியை நாடச் சிவனருள் இன்றியமையாதது எனல் நுதலிற்று.

உண்மைஞானம் பெற்றும் வாசனை தாக்க முதல்வன் அருள் பெருமையால், செல்நெறிக்கண் செல்லமாட்டாராய்த் திகைக்கின்றவாறு என்? என்பது கருத்து. ( 123 )

**உறுமா றறிவதும் உள்நின்ற சோதி**
**பெறுமா றறியிற் பிணக்கொன்றும் இல்லை**
**அறுமா றதுவான வங்கியு ளாங்கே**
**இறுமா றறிகிலர் ஏழைகள் தாமே.** 1547

இம் - எனின், உறுமாறும், அதனால் அறுமாறும் இங்ஙனம் என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நாம் அடையத்தக்க நெறியாக அறிவதும் உயிர்க்குயிராக நிற்கின்ற சோதியைப் பெறுதற்குரிய நெறியில் நின்று அறியில் யாதாமொரு மாறுபாடும் உண்டாகாது. நம்முடைய மல கன்மங்கள் நீங்குதற்குரிய வழியாக உள்ள செந்தீயுள் நாமும் தாடலைபோல இலயித்தலை அறிகிலர் அறிவிலிகள்; என்னே இவர்கள் தன்மை யிருந்தபடி என்றவாறு.

உறும் ஆறு அறிவதும் உள்நின்ற சோதி (யை) பெறுமாறு அறியில் பிணக்கொன்றுமில்லை; (மலகன்மங்கள்) அறும் ஆறதுவான அங்கியுள் ஆங்கே (தான்) இறும் ஆறு அறிகிலர் ஏழைகள் தாம் எனக் கண்ணழித்துப் பொருள்காண்க. அங்கி என்றது ஞானக்னி வடிவாய பரசிவத்தை. அங்கியுள் இறுதலாவது சிவச் சோதியுள்கலந்து தானறுதல். தலைவன்தாளே தலைப் படுதல். ஏழை - அறிவிலி. (129)

வழிநடக் குப்பரி சொன்றுண்டு வையங்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. 1548

இ - னின், ஒன்றேதான் உண்மைச்சமயம்; புறச்சமயங்கள் யாவும் கற்பனை எனல் நுதலிற்று.

இ - ள் : சீவயாத்திரையில் வழிநடக்கும் உபாயம் ஒன்றேதான் உண்டு. உலக இன்பதது மிக நடப்பவர் புறச்சமயிகள் கூறுகின்ற கற்பனைகளைக் கேட்பர். பிறவிச்சுழியில் அகப்பட்டு நடக்கும் துன்பத்தை நீக்கி உலக இன்பத்தைப் பழித்து நடப்பார்க்கு யாவரானும் பரவப்படுந்தன்மையும் உளதாம் என்றவாறு.

ஒன்றே வழி : அது சிவநெறி ; உலகினை வெறுத்து அதனைப்பற்றி நடப்பார், யாவரானும் ஏத்தப்படுவர் எனக. வையம் கழிநடக்குண்டவர் - உலக இன்பத்தில் மிக்கு நடப்பவர்கள். வையம் ஆகுபெயராக அதன் இன்பத்தை யுணர்த்திற்று. கழிநடக்குண்டவர் - மிக்கு நடப்பவர். கட்டுண்டவர் என்பதுபோல நடக்குண்டவர் என்பதும் நடப்பில் அகப்பட்டவர் எனப்

பொருள்தந்து நின்றது. அவர்கள் கூறும் நெறிகள் அனைத்தும் இறைவன் காட்டின அல்ல; அவர்கள் கற்பித்துக் கூறுவனவே, அவற்றைக் கேட்பர் அறியாமையான் மக்கள். சுழி - பிறவிச் சுழி. பழி - பழித்தல்; முதனிலைத்தொழிற்பெயர். பழித்தலைச் செய்து நடப்பார்க்கு என்க. பரவல் - தோத்திரிக்கப்பெறுதல். (130)

**வழிசென்ற மாதவம் வைகின்ற போது**
**பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே**
**வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட்**
**டுழிசெல்லில் உம்பர் தலைவன்முன் னாமே. 1549**

இம் - எனின், புறச்சமயிகளின் சார்பினை விடுக என உணர்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் அருளிய சன்மார்க்கமாகிய சிவநெறிக்கண் சென்று, அம்மாதவத்தில் நிலைநிற்கின்றபொழுது. பழி பாவங்களில் செல்லவைக்கும் வலிய வினைப்பற்றுக்களை அறுத்து, அவ்வினைவழியே செல்லும் வலிய வினைகளையுடையார் தன்மையைப் புறக்கணித்து நீங்கி. சன்மார்க்கத்துச் செல்லின் தேவதேவனாகிய சிவன் எதிர்ப்படுவன் என்றவாறு.

சென்று அம்மாதவம் எனப் பிரிக்க. பழி செல்லும் வல்வினைப்பற்று - உயிர்களைப் பழிக்கண் செலுத்தும் வலிய கன்மங்களிடத்துண்டாம் ஆசை. ஆங்கே வழி செல்லும் வல்வினையார் - அங்ஙனமே வினையின் வழிச் செல்வார் கூறும் புறச்சமய உபதேசங்களை விட்டு. உழி - இடம்; ஈண்டு ஞானவுலகை உணர்த்திற்று. முன் ஆம - முன்னே எதிர்ப்படுவன் (131)

## 19 நிராகாரம்

ஆகாரம் - வடிவு, நிராகாரம் - வடிவின்மை அஃதாவது, இறைவன் உயிருள் உணர்வாய்க் கலந்து நிற்கும் தன்மையாம், அதனை ஏழு மந்திரங்களான் உணர்த்துகின்றார்.

**இமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு**
**சமையங்கள் பெற்றனர் சாத்திரம் ஓதி**
**அமையறிந் தோமென்ப ராதிப் பிரானுங்**
**கமையறிந் தாருட் கலந்துநின் றானே.** 1550

இம் - எனின், இறைவன் சமயாதீதப் பழம்பொருளாய், உயிருட்கலந்துள்ளார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இமயமலை போல நின்ற தேவர்கள் அறுவகைச் சமங்களை அடைந்தவர்களாய், அவற்றிற்குரிய சாத்திரங்களை ஓதி, அவற்றின் அமைவைத் தெரிந்தோம் என்பார்கள். முதற்கடவுளாகிய சிவனும், பொறுமையோடு முனைப்பு அடங்கி அறிந்த ஞானியர் உள்ளத்துக் கலந்து நின்றான் என்றவாறு.

தேவர்கள் கண்டது தெரிந்தோம் அமைந்தோம் என்ற இறுமாப்பே. இறைவனோ அடங்கியவர்கள் உள்ளத்துக் கலந்து நிற்கிறான் என்பது கருத்து. மலை போன்ற தேவர்கள் என்றது, உருவம் பெற்றார்களேயன்றி உணர்ச்சி பெற்றார்களில்லையே என்ற கருத்தால். அமை - அமைதி, கமை - பொறுமை. க்ஷமை என்பதன் திரிபு. உள - மனம். (132)

**பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி**
**தாங்கு மனிதர் தரணியில் நேரொப்பர்**
**நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்**
**ஏங்கி உலகில் இருந்தழு வாரே.** 1551

இ-ம் - எனின், இறைவனைத் தியானிப்பார் எய்தும் பயனும், தியானிக்காதவர் எய்தும் இழிவும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அழகு பொருந்திய கொன்றைமாலையை அணிந்த படர்ந்த சடையையுடைய பரசிவத்தின் திருவடிகளை இடைவிடாது தம் மனத்துத் தாங்கிய மக்கள் இந்தப் பூமியில் சிவனுக்குச் சமமாவர்; அவன் அடியிணையை நீங்கிய வண்ணமாய், நினைக்காமலே இருப்பவர் துன்பக்கடலிடைபட்டு ஏங்கி, இவ்வுலகில் இருந்து, உய்தியின்றி அழுவார் என்றவாறு.

பாங்கு – அழகு (133)

**இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்**
**அருந்தவ மேற்கொண்டங் கண்ணலை எண்ணில்**
**வருந்தா வகைசெய்து வானவர் கோனும்**
**பெருந்தன்மை நல்கும் பிறப்பில்லை தானே** 1552

இ-ம் - எனின், இதுவுமது.

இ-ள் : சொலற்று இருந்தழுவார்களும், தம் இயல்பு அழிந்தவர்களும் அரிய தவத்தை மேற்கொண்டு, இறைவனைத் தியானிக்கில், வருந்தா வண்ணம் அவர்களைக் காத்து, தேவதேவனாகிய சிவன், தியானிக்கும் ஆன்மாவுக்குப் பெருந்தன்மையை நல்குவன். இனி அவர்களுக்கு வரக்கடவதாகிய பிறப்பும் இல்லையாம் என்றவாறு.

யாரேனும் சிவத்தியானஞ்செய்யின் சிவம் அவர் களைக் காத்து நிலையினுயர்த்திப் பேரின்பம் நல்கும் என்பதாம். ( 134 )

**தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்**
**பாரறி வாளர் படுபயன் றுண்பர்**
**காரறி வாளர் கலந்து பிறப்பார்கள்**
**நீரறி வார்நெடு மாமுகி லாமே.** *1553*

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : இறைவனைத் தமக்குத் தூரமாக அறிபவர் பெத்த முத்திகளிரண்டினும் தமக்கு நீங்காத் துணையாய்த் தோன்றாத்துணையாய் இருக்கும் இறைவன் நினைப்பிலராவர். உலகத்தை உணர்பவர் அவ் வுலகத்துளவாம் சிற்றின்பங்களையே நுகர்வர். கரிய பாசஞானிகள் இறந்து பிறப்பார்கள். இறைவ னியல்பை உள்ளவாறு உணர்ந்த உண்மை ஞானிகள் பெரிய மேகம்போல அனைவர்க்கும் கைம்மாறு கருதாதே பயன்படுவர் என்றவாறு.

தூர அறிவாளர் தூரறிவாளர் எனவிகாரமாயிற்று. பார் - உலகு; ஆகுபெயராக உலக இன்பை உணர்த்திற்று. மாயேயமான உலகஞானிகள் மாயா காரியமான இன்பங்களையே நுகர்வர் என்பதாம். கார் அறிவாளர் - பாசஞானிகள். கரந்து - வினைப்போகங் கழிந்தவழி இறந்து, மீட்டும் சஞ்சிதம் நுகரப் பிறந்து அலைவர். நீர் - தன்மை; இறைவனியல்பு. ( *135* )

**அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி**
**பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங்**
**குறியது கண்டுங் கொடுவினை யாளர்**
**செறிய நினைக்கிலர் சேவடி தானே** **1554**

இம் – எனின், சிவம் செய்யும் உபகாரம் அறிந்திருந்தும் உயிர்கள் நினைக்கின்றிலரே என இரங்குதல் நுதலிற்று.

இ – ள் : ஞானத்தொடு கூடி அழைக்கப்பெற்றதாகிய ஒப்பற்ற தோணி போல்வராகிய சிவம், பழம் பதியாகிய முத்தியுலகில் பறித்தலுடன் நம் பாரங்களையும சிந்தச்செய்யும் அடையாளங்களை அறிந்திருந்தும் கொடிய வினைத்தொகுதியுடையார் சிவபெருமானுடைய சேவடிகளை நினைக்கின்றிலரே என்றவாறு.

தோணி என்றது சிவத்தை. 'ஞானத்தால் அழைப்பர் ஞானிகள்' என்புழிப்போல ஞானிகள் சிவஞானத்தால் சிவனை அழைப்பர். சிவமும் பழம்பதியாகிய சிவபுரத்தைச் சேர்ந்து, ஆன்மாக்களுடைய மலமாயா கன்மங்களாகிற பாரங்களைப் பறித்தலுடன் கெடுக்கும். சிவனைத்தோணி என்றதற்கேற்ப, உயிர்களின் மலமாயா கன்மங்களைப் பாரம் என்றும், அவற்றை இறக்குதலைப் பறித்தல் என்றும் கூறினர். பறித்தல் – பாரம் இறக்குதல். துறைமுக வழக்கு. குறி – திருவருட்குறிப்பு. செறிப – இடைவிடாது. (136)

**மன்னும் ஒருவன் மருவு மனோமயன்**
**என்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்**
**துன்னி மனமே தொழுமின் துணையிலி**
**தன்னையும் அங்கே தலைப்பட லாமே. 1555**

இம் - எனின். இறைவனை மனத்தால் எண்ண ஈடேறலாம் எனல் நுதலிற்று.

இ – ள் : நிலைபெற்ற - ஒப்பற்ற பரம்பொருள் மன வடிவானவன் என்னில், அறிவிலிகள் இகழ்வர்.

அங்ஙனம் இகழாது மனம் பொருந்தித் தொழுங்கள் ; அம்மனத்துள் ஒப்பற்ற இறைவனைத் தலைப்பட்டுக் கூடலாம் என்றவாறு.

மன்னும் ஒருவன் என்றது இறைவன் அநாதி நித்தியன் என்பதையும் அதுலன் என்பதையும் உணர்த்தின. மனோமயன் – நினைப்பவர் மனமே வடிவானவன். அவனுக்கென்று உடலில்லாதவன், நிராகாரன் என்று அறிவித்தவாறு. (137)

**ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்**
**றுங்கார மற்ற அனுபவங் கைகூடார்**
**சாங்கால முன்னுர் பிறவாமை சார்வுறுர்**
**நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே.** 1556

இம் – எனின். பிறவி நீங்கப் பெருமான் கழல் முன்னுக எனல் நுதலிற்று.

இ – ள் : பிரணவமாகிய ஓங்காரத்தின் உள்ளொளியாக விளங்குபவன் ; அவனைத் தம் மனத்துள்ளே தோன்றப்பெற்று அகங்காரத்தின் நீங்கிய அநுபவம் கைகூடப்பெறுர் ; அம்மட்டோ தமக்குவரும் இறப்புக்காலத்தையும் எண்ணுர் ; மீட்டும் பிறவாமையைப் பொருந்தார்; மயக்கம் ஒழியாத புறச்சமய நெறிக்கண் நின்று செத்தார்கள் என்றவாறு. (138)

## 20. உட்சமயம்

இவ்வதிகாரம், அகச்சமயங்கள் ஆறன் இயல்பும் உணர்த்துகின்றது. அகச்சமயம் ஆருவன, பாடாணவாதம் முதலியன்வாகச் சங்கற்பநிராகரணத்துக் கூறப்பட்டவை. அகச்சமயிகள் சித்தாந்தசைவத்தோடு

ஒப்ப ஏகன், அநேகன், இருள், கருமம், மாயையிரண்டு ஆக இவை ஆறனையும் ஒத்துக்கொள்பவர்கள். சித்தாந்த சைவப் பேருண்மையை உணர்த்தின் கொள்ள வல்லவர்கள். ஆகையால் அவ்வுட்சமயங்கள் ஆறனையும் சொல்கின்றது இவ்வதிகாரம்.

**இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்**
**அமைய வகுத்தவன் ஆதி புராணன்**
**சமயங்க ளாறுந்தன் தாளிணை நாட**
**அமையங் குழல்கின்ற ஆதிப் பிரானே. 1557**

இ-ம் - எனின், முதற்கடவுள் சிவமே எனல் நுதலிற்று.

இ-ள் : தேவர்களையும், உயிர்களாகிய எம்மையும் அநாதிக்காலத்தே தனுவாதிகளைத் தந்து பொருந்த வகுத்து வைத்தவன்; பழமைக்கெல்லாம் பழமையானவன்; அகச்சமயங்கள் ஆறும் தன் திருவருளாகிய திருவடியை நாடும்படிதந்து அவற்றிற் கலந்துநின்று வியாபித்திருப்பவன்; இத்தகைய இறைவனே முதல்வனுவன் என்றவாறு.

**ஒன்றது பேரூர் வழியா றதற்குள**
**என்றது போல இருமுச் சமயமும்**
**நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்**
**குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. 1558**

இ-ம் - எனின், இவைதம்முள் வேற்றுமையில்லை எனல் நுதலிற்று.

இ-ள். ஊர்ஒன்று; வழி ஆறு என்றதுபோல, ஆறு சமயங்களும் உள்ளன. அவற்றுள் இது நன்று

அது நன்று என்றுரைப்பவர்கள் மலையைப் பார்த்துக் குரைத்த நாயை ஒப்பார்கள் என்றவாறு.

மலையின் மாண்பை அறியாத நாய் அதைப் பார்த்துக் குரைப்பது போலும்; சமய உண்மை அறியார் அவைதம்முள் ஏற்றத்தாழ்வு இயம்புவது என்க. ( 140 )

**சைவப் பெருமைத் தனிநா யகன் தன்னை**
**உய்ய வுயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை**
**மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பஞ்செய்**
**வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. 1559**

இ-ம் - எனின், சிவனையே யடைக எனல் நுதலிற்று.

இ - ள் : பெருமை வாய்ந்த சைவமாகிய சமயத்திற்கு ஒப்பற்ற நாயகனை, ஆன்மாக்கள் அனைவர்க்கும் அவரவர்கள் பரிபாக நிலைக்கேற்ப உய்ய உயிர்ப்பாக உடனியங்குகிற ஒளிவடிவான குருநாதனை. உண்மை ஞானமாகிய பொருளையுடையவர்கட்கு அன்பனை, இன்பமே செய்கின்ற உலகநாதனை வந்து அடைந்து உய்யுமின் என்றவாறு. ( 141 )

**சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்**
**பவனவன் வைத்த பழவழி நாடி**
**இவனவன் என்ப தறியவல் லார்கட்**
**கவனவ னங்குள தாங்கட னாமே. 1560**

இம் - எனின், அறுசமயத்தவர்க்கும் ஒளியாயிருப்பவன் சிவனே என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அவனன்றே தலைவனாவான் சிவனே; அவன் வகுத்த அறுவகைச் சமயநெறிக்கண்ணும் தோன்றுபவன் அவனே; அச்சமயங்களை ஆராய்ந்து

சிவனே அவன் எனத் துணிந்து அறியவல்லார்க்கு. அப்பரம்பொருள் அவ்வச்சமயங்களிலிருந்து விளங்கு கின்ற முறைமையை உடையதாம் என்றவாறு.

'யாதொரு சமயங்கண்டீர் அத்தெய்வமாகியாங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்' அறுவகைச் சமயத்து ஓர்க்கும் அவ்வவர் பொருளாய், என்ற சித்திததிரு விருத்தங்கள் இம்மந்திரக் கருத்தனவாதலை உணர்க.

பவன் - தோன்றுபவன். பவன் எனும் நாமமுடை யான் எனலுமாம். கடன - முறைமை. (142)

ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை புண்ணிய மல்லதங்
காமாம் வழியாக்கும் அவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே 1561

இம் - எனின், அறுசமயத்துள்ளும் ஆன்மாக்களை யீடுபடுத்துபவள திருவருட்சத்தியே என உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம் ஆன்மாக்கள் கடைத்தேறு மாறு சிவனருளிய ஆறுசமயங்கட்கும் போகும்வழிதா னில்லை. அதற்கேற்ற புண்ணியம் அல்லது அதற்குரிய தானவழியை விளக்கும் உபாயமும் இல்லையென்று உணர்ந்த, உயிர்கட்கு, பரிபாக நிலைக்கு ஏற்ப ஆதார சத்தியானவள் அருள் வழங்குவள என்றவாறு.

சமயம் ஆறுக இறைவனருளியது ஆன்மாக்கள் பெற்ற பரிபாக நிலையின் குறைநிறைக்கு ஏற்றவாறு என்பதாம். ஆதாரப்பூங்கொடி - ஆதாரசத்தி. எல்லா

வற்றையும் தாங்கியிருக்கிற இறைவனுடைய அளவிலாற்றலே ஆதாரசத்தி. அவளே ஆன்மாக்களின் பரிபாகத்திற்கேற்ப அவரவர்களை அவ்வச்சமயத்துப் புதமாறு பணித்து ஞானவிளக்கம் நல்குகிறாள் என்பதாம். (143)

**அரனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்**
**சிரநெறி தேடித் திரிந்தஅந் நாளும்**
**உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்**
**தரநெறி நின்ற தனிச்சுடர் தானே.** 1562

இம் – எனின், அடியேனையும் உண்மைநிலையில் நிறுத்தியது சிவசத்தியே எனல் நுதலிற்று.

இ - ள் ; அடியேன், நிலையான சமயமார்க்கத்தைத் தேடித்திரிந்த அக்காலத்தும் ஞானமார்க்கமாய். மனமாகிற கடலைக்கடந்து இன்பக்கரையேறும் உயர்ந்த நெறியாய் நின்ற பரஞ்சோதியே சிவநெறியாவதை அறிந்தேன் என்றவாறு.

நானும், தேடித் திரிந்த அந்நாள், தனிச்சுடர் அரனெறியாவது அறிந்தேன் எனக்கூட்டுக. அறிந்தேனும் என்பதில் உம் அசை. சிரநெறி - தலையாய மார்க்கம். உரநெறி – ஞானவழி. தரம் - உயர்வு, சிவமே சைவம் என்பது உணர்ந்தேன் என்பதாம். (144)

**தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி**
**பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி**
**ஆர்ந்தவர் அண்டத்துப் புக்க அருள்நெறி**
**போந்து புனைந்து புணர்நெறி யாமே.** 1563

இம் – எனின், இதுவே அடைதற்குரியது என உறுதிகூறல் நுதலிற்று.

இ - ள் : அளவைகளானும் பொருந்துமாற்றானும் நன்கு தெளிந்து சிவமே பரம்பொருளென அடைந்து உய்ந்த சிவநெறியே, புறச்சமய வழிநின்றும் ஆராய்ந்து மீளவும் பெயர்ந்து வந்தடைந்த பெருவழியாம். அதில் பொருந்தியவர்கள் அவரவர்கள் அநுபவத்திற்கு ஏற்பப் பதமுத்திகளை நுகர அவ்வவ்வண்டத்துப் புக்க அருள் நெறியாம். அவ்வம் முத்திகளிலே நின்று நுகர்ந்து மீண்டும் போந்து இதுவே சிறந்தது என்று புனைந்து புணரக்கூடிய மார்க்கமாம் என்றவாறு.

புறச்சமய வழிகளினின்று ஆங்காங்கே ஈட்டிய புண்ணிய விசேடத்தால் மீண்டு வந்தடைதற்கரியதும், புறச்சமய நெறிநின்று பதமுத்தி பெற்றோர் அப்பதவி யினின்று ஞானம்பெற்றுச் சாரும் நித்தியானந்தத் திரு வருள் நெறியும், சிவத்தோடு இரண்டறக் கலக்கும் முத்திநிலை கூறும் சிவநெறியேயாம் என்பதாம். (145)

**ஈரு மனத்தை யிரண்டற வீசுமின்**
**ஊருஞ் சகாரத்தை ஓதுமின் ஓதியே**
**வாரு மரனெறி மன்னியே முன்னியத்**
**தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே.** 1564

இம் - எனின், சிவநெறிக்கண் நிற்றற்குரிய உபாய மான திருமந்திர சாதனம் இதுவாகும் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மனத்தை இரண்டற அறுங்கள் : வீசிய மின்போலும் இகாரத்தால் ஊரப்பெற்ற சகாரத்தை ஓதுங்கள் ; அங்ஙனம் ஓதிச் சிவநெறிக்கண் வாருங்கள்; அதில் நிலைபெற்றுத் தியானிக்க அகரத்தை ஊர்ந்து நின்ற சிவபரம்பொருள் தோன்றும் என்றவாறு.

மனத்தை இரண்டற ஈரும் — மனம் சென்று பற்றியதன் வடிவாக, கருவியும் காட்சியும் ஆகிய இரண்டுபட்ட நிலையிலே இருப்பது ஆதலின் அதனை இரண்டுதன்மையற அறுங்கள்; அதாவது வெட்டுங்கள் என்பதாம். ஈர்தல் — அறுத்தல். வீசும் மின் ஊனும் சகரம் — சிகரம். 'சி' என்னும் சிவாக்கரம். வீசும்மின் — மேல்வீசி எழுதப்பெறுவதாய இகரம். அதிருக்கும் பஞ்சாக்கரமாகிற சிகாரத்தை ஓதுங்கள்; அப்பொழுது சிவம் தோன்றும்; அதுவே சைவமாம் என்பதாம்.

வீசும் 'ம்' மின் ஊனும் சகாரம் — சம் என்பது. அத்து ஊரும் சுடரொளி — அகரத்தை ஊர்ந்துவரும் அம். ஆகவே, சம் ஹம் என்று தியானிக்க. அதனல் ஆன்மாச் சிவனும் என்பாரும் உளர். (146)

மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை ஆதிப் பிரான்தன்னை
நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தின்
நயக்குறி காணில் அரனெறி யாமே 1565

இ - னின், ஞானநெறியே சைவம் எனல் நுதலிற்று.

இ - ள்: மின்னல் போலும் அடையாள முடையவனை, அந்தணர்கள் வேதநெறியின்படி செய்கின்ற யாகத்தீயின் வடிவுடையவனை, முழுமுதற் கடவுளை, தியானிக்கப்பெறும் பல்வேறு வடிவங்களையும் தனக்கு வடிவாக உடையவனை, பரஞானத்துச்சியிற் பார்க்கப் பெற்றால் சிவநெறியாகிய சைவமாம் என்றவாறு.

மினற்குறி — மின்னல்போலும் நாதக்கலை. சோடச கலையுள் மின்னலைப்போல்வது நாதக்கலை என்க.

அனற்குறி - சுவஸ்திகம். இவை யோகக்காட்சி, நினைக் குறி - நினைப்பாகிய வடிவு. ஞானக்கொழுந்து - பர ஞானத்துச்சி. நயக்குறி - விரும்பத்தக்க வடிவு. இவை ஞானக்காட்சி. யோகக்காட்சியினும் ஞானக்காட்சியி னும் காண்பது சிவநெறி என்றவாறும். (147)

**ஆய்ந்துணா ரார்களின் ஆன்மாச் சதுர்பல**
**வாய்ந்துண ராவகை நின்ற அரனெறி**
**பாய்ந்துணர் வார்அரன் சேவடி கைதொழு**
**தேர்ந்துணர் செய்யவோர் இன்பமு மாமே. 1566**

இம் - எனின். இதுவுமது.

இ - ள்: ஆராய்ந்து அறியாதவர்களின் ஆன்மா வானது அறியவொண்ணாதவண்ணம் பலவகையாற் சாமர்த்தியம் வாய்ந்துநின்ற சிவபெருமானது நெறிக் கண், பரவிநின்று அறிகின்ற ஞானிகள் சிவபெருமா னது திருவடிகளைக் கைதொழுதலிலேயே தெளிந்து. உணர்தலைச் செய்ய ஒப்பற்ற இன்பம் விளையும் என்றவாறு.

ஆய்ந்துணரார் - ஆகமங்களானும். தன்னநுபவத் தானும், திருவருட்டுணையானும் ஆராய்ந்து இதுவே உண்மைநெறி, இவனே பரமபதி என உணராதவர்.

உணராதவர்களின் ஆன்மா உணராவகைச் சதுர் பலவாய்ந்து நின்ற அரன் என இயைக்க.

பாய்ந்துணர்தல் - பள்ளம் புகுபுனல்போல் சிவ நெறியில் பற்றுக்கொண்டு அறிதல். கைதொழு - கை தொழுதல்; முதனிலைத்தொழிற்பெயர். (148)

**சைவ சமயத் தனிநா யகன்நந்தி**
**உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு**
**தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய**
**வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. 1567**

இம் - எனின், சன்மார்க்கநெறியே சைவநெறி எனல் நுதலிற்று.

இ – ள் : சைவ சமயத்திற்குத் தனிநாயகன் சிவ சிவபெருமான் ; அவன் ஆன்மாக்கள் உய்ய வகுத்துத் தந்த குருநெறி ஒன்று உண்டு. அதுவே தெய்வத்தன்மை பொருந்திய சிவநெறியாகிய சன்மார்க்கம் ; அதனைச் சார்ந்து மக்கள் உய்ய என உலகமக்களுக்காக இவன் வகுத்து வைத்தான் என்றவாறு.

(149)

ஏனைய வெளிப்படை.

**இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்**
**பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி**
**எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்**
**ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே. 1568**

இம் - எனின், நெறியால் பேதம் இல்லை ; ஒத்து உணரின் முத்தியெய்தலாம் எனல் நுதலிற்று.

இ – ள் : அறுவகை அகச்சமயங்களிலும் இது தான் தவம் அதுதான் தவம் என்று பேதஞானம் பற்றிப் பேசும் பித்தர்களைக் காணின் எங்கள் பரமாசாரியனாகிய சிவம் நகும். எத்தவமாக இருப்பின் என்ன ? எங்கே பிறக்கில் என்ன ? அபேதமாக நின்று அறியவல்லார்க்கு விரைவாக முத்தியென்ற ஊரை அடைதல் உண்டாம் என்றவாறு.

இத்தவம் அத்தவம் என்ற பேதஞானம் அற்றுச் சிவன் எல்லாவற்றிலுமிருந்து அருள்புரிதலை உணரின் முத்திபெய்தல் எளிதாம் என்பது கருத்து. (150)

**ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்**
**ஆமே பிரானுக் கதோமுக மாறுள**
**தாமே பிரானுக்குந் தன்சிர மாலைக்கும்**
**நாமே பிரானுக்கு நரரியல் பாமே.** **1569**

இம் - எனின், இதுவுமது

இ - ள் : சிவபிரான் ஐந்து திருமுகங்களோடு அரிய உயிர்கள் எங்குமாவன்; சிவபிரானுக்கு அதோமுகம் ஒன்றுடன் கூட ஆறு திருமுகங்களாம். தாமே தலைவனுயர், சிரமாலை தரித்த இறையாயும் எழுந்தருளியுள்ள பிரானுக்கு நாம் என்றும் அடிமை; இதுவே மக்களியல்பாம் என்றவாறு.

பிரான் முகம் ஐந்தொடும் ஆருயிர் ஆம் எனக் கூட்டி, மேற்கூறிய பொருள் காண்க. ஐந்து; ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்ற ஐந்து முகங்கள். ஐம்முகங்களோடு சதாசிவ மூர்த்தியாய் மன உன்மனி சத்தியோடும் உயிர்களிடமாக விளங்குவன் என்பாதர். அத்துடன் அதோமுகத்தையும் கொண்டு ஆறுமுகங்களுடன் மாயையைக் கலக்கிப் பிரபஞ்ச உற்பத்திபண்ணுவன் என்பதாம்.

தாமே பிரான் — தனிமுதல்வன். தனக்குத் தலைவனில்லாதவன். தாமே பிரானுக்கு, தன் சிரமாலைக்குப் பிரானுக்கு நாம் நரரியல்பாம் எனக்கூட்டி, சிரமாலை அணிந்த தாமே முதலாய பிரானுக்கு நாம் நரர் இயல்புடையரே ஆவேம் என்பது. சிவ சீவ இயல்பு

கூறியது. சிவம் என்றுமே தலைவன்; அழியாதவன் அதனைத் தெரிவிக்கும் சாதனம் அவன் அணிந்துள்ள சிரமாலை. நாம் என்றும் பசுக்களே என்றவாறு.

இங்ஙனமன்றி, சிரமாலை அணிந்திருந்தாலும் சிவனுக்குச் சீவத்துவம் சுதர்மமே எனக்கொண்டு சிவசீவ அபேதமாகக் கூறி. அதற்கேற்ற சொல்லியையபின்மையும அறியாது இடர்ப்படுவாரும் உளர்.

சிவம் இயல்பாகவே அனைத்தையும் ஒருசேர உணரும் சித்து; உயிர், சிவமே ஆசாரியனாக எழுந்தருளி உணர்த்த உணரும் சித்து என்பதையும் ஓரார் அவர் என்க. (151)

ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களு மாய்நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கட் டெய்வமும் அந்தமு மாமே. 1570

இம் – எனின், சிவமும் சத்தியும் உபகாரப்படும் உண்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முதல்வன் உலகம் அனைத்தையும் கலந்து விளங்குபவன்; பெருக்கெடுக்கின்ற கடலும், அது சூழ்ந்த உலகும், அதில் வசிக்கின்ற உயிர்களுமாக நிற்பவன்; சிவத்தோடு அபின்னமாக நின்ற பராசத்தி பிரபஞ்சோற்பத்திக் காலத்தில் உற்பத்திக்கு உபகாரியாயும், முடிவில் எல்லாவற்றையும் ஒடுக்கிக்கொள்பவளாயும் உடனுறைவள் என்றவாறு.

சிவம் எல்லாமாயும் விளங்குகிறது; சத்தி சிவத்தோடு அபேதமாய் உற்பத்திக்குக் காரணமாயும், சங்காரத்திற்கு உதவியாயுமிருக்கிறது. என்பாதம். (152)

**ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்**
**ஆய்ந்தறி யாவண்ணம் நின்ற அரனெறி**
**ஆய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழ**
**ஆய்ந்தறிந் தேனிம்மை அம்மைகண் டேனே 1571**

இ-ம் - எனின், சிவன் பசு பாச ஞானங்களால் அறியப்படாமல், பரஞானம் ஒன்றுனே அறிய நிற்பவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தற்போத முனைப்பால் ஆராய்ந்தறிபவர்களாகிய தேவர்கள் வித்தியாதரர் முதலியவர்கள் ஆய்ந்து அறிய முடியாதவண்ணம் நின்ற சிவபரம்பொருளின் நெறியாகிய சைவத்தை, அவனுடைய திருவடியைக் கைதொழும்பேறு பெற்றமையால் ஆய்ந்து அறிந்தேன்; இவ்வுலகப் பற்றுக்களைக் காய்ந்து இவற்றால் பயனின்மையை அறிந்தேன்; மறுமையின்பமாகிய திருவடிப் பேற்றை அறிந்தேன் என்றவாறு.

ஆகவே தேவர்கள் ஆன்மபோதத்தால் அறியமுற்பட்டனர்; அவர்களுக்கு அறியவொண்ணுத சிவத்தை அவனது அருளாகிய திருவடிவணக்கத்தால் அறிந்து இம்மையின்பத்தில் உவர்ப்பும் மறுமையில் உவப்பும் கண்டேன் என்பதாம். ( 153 )

**அறியவொண் ணுதவ் வுடம்பின் பயனை**
**அறியவொண் ணுத அறுவகை யாக்கி**
**அறியவொண் ணுத அறுவகைக் கோசத்**
**தறியவொண் ணுததோர் அண்டம் பதிந்ததே. 1572**

இ-ம் - எனின், உடம்பு உதவியதன் உறுபயனிது என உணர்த்தல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் நமக்கருளிய உடம்பின் பயனை அறியமுடியாது. அப்பயன் எய்தும் நெறியை நம்மால் அறிய ஒண்ணுதவண்ணம் ஆறு வகையாகச் செய்து, அநுபவத்தானன்றி அறியவொண்ணுத ஆரு தாரங்களை யுடைய இவ்வுடம்பிலே வரையறுத்து அறிய வொண்ணுத ஒளிமயமான சிதாகாச வடிவாய சிவம் பதிந்து பேரின்பம் நல்குவதாயிற்று என்றவாறு.

நமக்கு இவ்வுடம்பு ஏன் அருளப்பெற்றதென்பது அறிய ஒண்ணுத பரமரகசியமாம் ; உடம்பு உதவிய பயனை எய்தும் நெறிகளை அகச்சமயம் ஆருக்கி, ஆரு தார அனுபவியாகச் செய்து, சிதாகாசவடிவாய சிவம் பதிந்து என்றும் நீங்காது விளங்குகின்றது என்பது கருத்து.

கோசம் - உடல். அறுவகைக்கோசம் - ஆறுவகை யான ஆதாரங்களையுடைய கோசம். அண்டம் - ஆகாசம். அறியவொண்ணுத அண்டம் - சிதாகாசம் ; அது சிவம். (164)

## திருமந்திரம் ஐந்தாம் தந்திரம்

பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன் முற்றிற்று.



உ
சிவமயம்

# ஆறும் தந்திரம்



## 1. சிவகுருதரிசனம்

திருமூலதேவ நாயனுர் ஐந்தாம் தந்திரத்துச் சுத்த சைவம் முதலாக நால்வகையான சைவமார்க்கங்களை உணர்த்திச் சைவஞ்சார்ந்தோர் நிற்கும் நிலைகள் சரியை யாதி நான்கு எனவும், அவை சன்மார்க்க முதலான நான்கு பெயர்களை எய்தும் எனவும், அவற்றில் வழுவா தொழுகினுர் எய்தும் பதமுத்திகளும் சாலோகமாதி நான்கு எனவும், சகலான்மாக்கள் எய்தும் திருவருட் பதிவு மந்ததர முதலாக நான்காம் எனவும் உணர்த்தி, இந்த நெறி நில்லாத புறச்சமயிகளை வெறுத்து ஒதுக்க வேண்டியதன் இன்றியமையாமையைத் தத்துவ வாயிலாகத் தெரிவித்து. நிராதாரமாய் இறைவன் உட்கலந்தொளிரும் இயல்புகளையும் அறிவித்து, உட்சம யத்துச் சைவ சமயத் தனிநாயகன் நந்தி உய்ய வகுத்த குருநெறி ஒன்று உண்டு எனத் தோற்றுவாய் செய்த வண்ணம் ஆறுந்தந்திரமாகிய இதில் சிவகுருதரிசன முதலான பதினுன்கு அதிகாரங்களான் சமய உண்மை களையும் சாதனத்தையும் உணர்த்தத் தொடங்கிய திருமூலதேவ நாயனுர் முதற்கண் சிவகுருதரிசனம் உணர்த்துகின்றுர்கள்.

சிவகுரு – சிவனே குரு. சிவகுரு தரிசனம் – சிவனே குருவாக மானிடச் சட்டை தாங்கி எழுந்தருளி வந்து காட்சி தந்து காட்டுவன காட்டி, ஊட்டுவன ஊட்டி உண்மைகாணச் செய்தலாகிய உபகாரம். இதனைப் பதினேழு மந்திரங்களான் உணர்த்துகின்றூர்கள்.

**பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கிச்**
**சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்**
**சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்**
**சித்தம் இறையே சிவகுரு வாமே. 1573**

முதற்கண் உள்ள இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், தம் முதலே குருவாக வருதலை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: எல்லா உயிர்களிடத்தும் அவ்வவற்றின் பரிபாக விசேடங்களுக்கு ஏற்ப விளங்கியும் விளங்காதும் எழுந்தருளியுள்ள கருணைக்கடலாகிய இறைவனே உயிர்களை என்றும் நீங்காது பத்திசெய்ய ஆணைபிறப்பித்து, எல்லாத் தேவர்களும் தாம் தாம் ஈடேறப் பரவும் திருவடியை அடியேற்கருளி, எமது மல மாயை கன்மங்களைப் போக்கிச் சுத்தஞ் செய்யும் உபதேசமொழியால் குற்றங்கள் நீங்கச் சோதனை செய்து, சத்தாகிய தன்னையும், அசத்தாகிய பாசங்களையும், சதசத்தாகிய ஆன்மாவையும் காட்டலால் சிவகுரு ஆவர்; இது உண்மை என்றவாறு.

அன்பைத் தந்து, அடி காட்டி, ஆன்மாவைச்சுத்தி செய்து, முப்பொருள்களையும் உள்ளவாறு உணர்த்து

தலால் சிவனே சிவகுருவாவன் : இது சித்தம் என்பது கருத்து.

பத்தி - இறைவன்பால் செலுத்தப்படும் அன்பு. இது எண்ணெய் ஒழுக்குப்போல இடையறாது செலுத்தத் தக்கதொன்றாதலானும். அத்தகைய அன்பையும் இறைவனே உயிர்களுக்கு உண்டாக்கவேணும் என்று அருளினால் அல்லது உயிர் தாமே எய்தும் தரத்தின அன்றாகலானும் 'பத்திப் பணித்து' என்றார்.

பரவும் அடி நல்கி - தேவர்கள் அனைவரும் தாம் வாழப் பரவுகின்ற திருவடியை அடியேம் வாழத் தாமே நல்கி, பரவப்படும் அடி எனச் செயப்பாட்டு வினையாகப் பொருள்கோடலும் உண்டு.

சுத்த உரை - சுத்தமாயாகாரியம் ஆகாத பரநாத வடிவான சீபஞ்சாக்கரம். சீபஞ்சாக்கரம் ஏனையெழுத்துக்களைப்போல மாயாகாரியமன்று : சிவமே யானது. அதனைக் குருஉபதேசித்தவுடன் ஆன்மாவினிடத்து அநாதியேயுள்ள ஆணவமலம் வலி குன்றியும் ஏனைய கெட்டும் ஒழிதலின் அத்தகைய பெரும்பயனைத் தரும் உபதேச மொழியைச் சுத்தவுரை என்றார்.

துரிசு - குற்றம், ஆன்மாவினிடம் உள்ள ஆணவ மலமும், அதன் காரியமாகிய அஞ்ஞானமும். அதன் விளைவாகிய ஏனைய குற்றங்களுமாம். ஆன்மாவுக்கு மலத்தினது இயல்பையும் அதன் உண்மையையும் உணர்த்தி அதன் வலிதன்றச் செய்யும் கிரியை, ஞான தீட்சாமுறையில் மலமாயா கன்ம சோதனை என வழங்கப் பெறுதலின் அப்பரிபாஷை தோன்றச் சோதித்து என்றார்.

சத் – பாசஞான பசுஞானங்களினாலே அறியப் படாது பதிஞானம் ஒன்றானே அறியப்படும் உண்மைப் பொருள் ; அதுசிவன். இதனை " இந்திறன் அல்லது சிவசத்தாம் என " என்னும் சிவஞானபோத ஆறும் சூத்திரப் பகுதியான் அறிக.

அசத்து – அறிவினால் அறியப்பட்ட சுட்டாகிய பாசப்பொருள். இது உலகமும், மாயையும், மலமும் ஆம். இதனை " உணருரு அசத்தெனின் " என்னும் சிவஞான போதப் பகுதியானும், " அறிவறிந்த எல்லாம் அசத் தாகும் " எனனும் மேற்கோளானும் அறிக.

சதசத்து – சத்தோடு கூடிச் சத்தாயும் அசத்தோடு கூடி அசத்தாயும் இருக்கும் உயிர். இம்மூன்றையும் உணரச் செய்பவன் குரு.

இம்மந்திரத்தில் ' பத்திப் பணித்து ' என்பதால் சரியையும், ' பரவும் அடிநல்கி ' என்பதால் கிரியையும் 'துரிசறச் சோதித்து' என்பதால் யோகமும், ' சத்தும், அசத்தும் சதசத்தும் காட்டலால் ' என்பதால் ஞானமும் உபதேசிக்கப் பெற்றமை உணர்த்தப் பெற்றது. (1)

**பாசத்தைக் கூட்டியே கட்டுப் பறித்திட்டு**
**நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே**
**கூசற்ற முத்தியில் கூட்டலா நாட்டத்த**
**தாசற்ற சற்குரு அம்பல மாமே.** 1574

இம் – எனின், ஞானகாயத்தைத் திருமேனியாக உடைய சற்குரு செய்யும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அநாதியே ஆணவமலத்திற் கட்டுண்ட உயிரை அக்கட்டினின்று பாசத்தைக் கூட்டிப்பறித்து, உடலே தானென்றிருந்த அபிமானத்தை விடச்செய்து, நேருக்கு நேராகக் கூசுதலில்லாத பரமுத்தியில் கூட்டு தற்கு உபகாரப்படும் திருவருள் நோக்கத்தை உடையது குற்றமற்ற சற்குருவாம்; அதுவே ஞானகாயமும் ஆம் என்றவாறு.

உயிர்களை மலபந்தத்திலிருந்து நீக்குவதற்காக மாயை கன்மங்களாகிய பாசங்களோடு கூட்டி, போகங்களை ஊட்டி, தன்னோடு அபேதமாய் விசுவசிக்கப்பட்ட உடலை நீக்கி, நேருக்கு நேராக முத்தியில் சேர்ப்பவனே ஆசாரியன்; அவன் அம்பல உருவினன் என்பது கருத்து. நாட்டத்தது ஆசற்ற சற்குரு எனவே முடிதல் இன்றியமையாதது ஆயினும் சற்குருவை அம்பலமாக உருவகித்தமையின் அதற்கேற்ப நாட்டத்தது என அஃறிணை முடிவை அருளினர்.

விடம் உண்டவனுக்கு அவ் விடத்தையோ அல்லது அவ்விடத்தோடு ஒத்த மற்றொன்றனையோ மருந்தாகக் கொடுத்து விடத்தை நீக்குவதுபோல, இறைவன் உயிரின் வியாபகத்தை மறைப்பதாகிய ஆணவ மலமாகிய கட்டினை, பாசங்களைக் கூட்டிப் பழைய அழுக்கோடு புதிய அழுக்கையும் போக்குகின்ற வண்ணான் போலப் போக்குகின்றார் என்பது விளங்கப் 'பாசத்தைக் கூட்டியே கட்டுப் பறித்திட்டு' என்றார். 'கட்டிப்பறித்திட்டு' என்று பாடங்கொண்டு பாசங்களைச் சேர்த்து ஆன்மா செயற்படாதவாறு கட்டி மூல மலத்தையும் பறித்து எனக் கொள்வாரும் உளர்.

நேசித்த காயம் - தானே என்று உயிரால் அபிமானிக்கப்பெற்ற உடல். காயம் விடுவித்து என்றது தேகாபிமானத்தைப் போக்கி என்றவாறு.

நேர்நேரே கூட்டலாம் நாட்டத்தது என்க. முத்தி இறைவனோடு கலந்த வேறற்ற நிலையாதலின் இந்திரியங்கள் காரியப்படாமையால் அதனைக் 'கூசற்ற முத்தி' என்றார். கூட்டலாம் நாட்டத்தது என்பதில் கூட்டற்கு ஆம் நாட்டத்தது என நான்கன் உருபு விரித்துப் பொருள்கொள்க,

மனம் மொழி மெய்களான் குற்றமற்று விளங்குபவரே குரு என்பார் 'ஆசற்ற சற்குரு' என்றார். அம்பலம் அம்பரம் என்பதன் திரிபு. ஈண்டு அது அம்பலவாணன் ஆகிய சிவத்தை உணர்த்திற்று சற்குருவே அம்பலம் என உபதேசித்தவாறு. (2)

சித்திகள் எட்டொடும் திண்சிவ மாக்கிய
சுத்தியும் எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியும் மந்திர சாதக போதமும்
பத்தியும் நாதன் அருளிற் பயிலுமே. 1575

இ - னின், சித்திகள் முதலிய அனைத்தும் சிவனருளால் சித்தித்தற்குரியன என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எண்வகையான சித்திகளும், சாதகனைச் சிவமாகச் செய்த பரிபாகநிலையும், எண்ணப்படும் மல மாயா சத்திகளின் தூய்மையாகிய மல பரிபாகமும், யோகத்தால் விளையும் ஆற்றலும், மந்திரங்களைத் தியானிப்பதால் விளையும் ஞானமும், இறைவன் பால்முறுகி

வினையும் அன்பும் ஆகிய எல்லாம் பெருமானுடைய திருவருளால் பயில்வனவாம் என்றவாறு.

அட்டமா சித்திகளும், சீவனைச் சிவமாக்கிய சுத்த நிலையும், மலபரிபாகம் முதலியனவும், மந்திரத் தியான முதல் ஆற்றுல வினையும் ஞானம் முதலியனவும் ஆகிய இவை அனைத்தும் சிவனருளாலன்றிப் பயில இயலாதன என்பதாம். இவை அனைத்தும் குரு உபதேசத்தால் பயிலத்தக்கவை என்க.

சித்திகள் எட்டு : அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பனவாம். இவற்றின் இயல்பும், இவை தடையாதலும், உபகாரப்படும் முறைமையும் முன் மூன்றாந் தந்திரத்து அட்டாங்க யோகப்பேறு, அட்டமாசித்தி என்ற தலைப்புக்களில் திருமூலரால் சிந்திக்கப்பெற்றவை. ஆண்டுக் காண்க.

திண் சிவம் ஆக்கிய சுத்தி : சீவனைச் சிவமாக்கிய ஆணவமல ஒடுக்கம். அது ஆன்மாவைச் சுத்தம் செய்த நிலையாதலின் இங்ஙனம் கூறினர். ஆன்மா சிவத்தோடொன்றி ஆனந்தமயனாக விளங்கவேண்டிய வன். மலச்சார்பால் அறிவு மறைந்து, அறியாமை மேலிட்டு, அசுத்தனயினன். அவனை மலத்தின் சேட்டையினின்று பிரியச் செய்து சுத்தனாகுதலே, ஆத்ம சம்யோசனமும் பாசநீக்கமுமாகிய ஞானதீட்சையாதலின் அவற்றைச் சிவகுருநாதன் செய்தான் என்றபடி,

எண்சத்தித் தூய்மை – எண்ணப்படுகின்ற திரோதான சத்தியின் தூய்மையான நிலை. இதுவரை உயிர் பாசங்களோடு ஒன்றிப் பசுவாதற்கு உபயோகப்பட்ட

திரோதான மாயை, ஆசாரியன் உபதேசத்தால் தன்னிலிருந்து அருட்சத்தியாய் உயிர் திருவருளைச் சார்தற்கு உபகாரப்படுதற்குரிய தூய்மையான நிலையை உறுதலாம்.

யோகத்துச் சத்தியும் - யோகத்தால் விளையும் வன்மையும், யோகமாவது இயம நியமாதிகளால் உயிர் இறைவனோடு ஒன்றியிருக்கச்செய்யும் பயிற்சியாகும் இறைவனை அகத்தொழிலானும் புறத்தொழிலானும் வழிபட்டு வருவதாகிய கிரியை அடிப்பட்டு ஏரை நிகழும் பக்குவ விசேடத்தான் அதிநுட்ப உணர்வுடையராய். நிட்களமாகிய அதிசூக்கும வடிவமே பொருள். சகளமும் நிட்களமும் அதனை வழிபடுதற்கு இடமாகிய திருமேனி என்று உணர்ந்து அகத்தொழில் மாத்திரையால் ஆருதாரங்களிலும் இறைவனை விதித்தபடி கண்டு வழிபடுவது என்க. அதனால் விளையும் சத்தியாவது உலகியலில் சித்தராக விளங்குதலும், கடந்த நிலையில் சிவயோகியாக உண்மை ஞானம் கைவரப்பெற்று அறிதன் மாத்திரையால் வழிபடும் ஆற்றலுமாம். சித்தராக விளங்கும்போது உலகினர் போற்றுதலால் ஏமாறவும் கூடுமாதலின் அதனை விடுத்து உண்மைஞானம் பெறுதலே உயர்ந்தது என்க. இதனைத் தடுத்து உயர் நிலையிற் பழக்குபவன் குருவாதல் காண்க.

மந்திரம் - சப்தகோடி மகாமந்திரங்களும். சித்தத்தைத் தெய்வமாக்குப. கணபதி முதலிய தெய்வங்களைக் குறித்த மந்திரங்களும், மந்திர அரசாகிய சீபஞ்சாக்கரமுமாம். அவை நினைப்பவனைக் காக்கும் தன்மையன ஆதலின் இப்பெயர்பெற்றது. மந்திரங்கள் நெடுநாள் உருவேற்றுதலும். உருவை மனத்து எண்ணுதலும்,

உருவாகவே யமைதலுமான சாதக முறையில் வளர்க்கத் தக்கன. அங்ஙனம் சாதித்தார் எய்தும் பயன் போதமாகிய ஞானம். இதனையே 'மந்திர சாதக போதமும்' என்றது.

இவையனைத்திற்கும் உள்ளொளிதருவது இறைவனிடம் என்றும் நீங்காத அன்பு. அதனையும் ஆசாரியனே அருளுதல் வேண்டும். மலருக்கு மணம் இயற்கையாயினும் பருவமும் பொழுதும் வர வண்டு ஊதமலர் விண்டு மணத்தை வெளிப்படுத்துதல் போல. அன்பு என்னும் பொதுக்குணம் ஆன்மாவுக்கு இயற்கையாயினும் ஆசாரியன் சிவனைப் பற்றியிருப்பதுதான் பத்தியென்று உணர்த்தவேண்டுதலின் அதுவும் ஆசாரியன் உதவியதாம் என்றார்.

நாதன் – சித்து அசித்தாகிய அனைத்திற்கும் தலைவனானவன்; அவன் சிவன்; சிவகுரு. அவனுடைய அருளால் ஆன்மாவிடம் முற்கூறிய குணங்கள் விளங்கித் தோன்றும் என்பதாம். (3)

**எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்**
**நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்**
**எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலால்**
**சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே.** 1576

இ - னின், கடந்தசிவம் கலந்துமிருப்பதால் சுத்தசிவமே சற்குருவாம் எனல் நுதலிற்று.

இ – ள்: சுத்தமும் அசுத்தமும் பிரகிருதியும் முதலான மாயைகளிலுள்ள உலகங்கள் யாவற்றையும் கடந்து அப்பால் விளங்கும் கடவுள், எமக்காக உலகி

னுள் இப்பாலனுக, பரிபாகமுற்ற ஆன்மாக்களின் உள்ளத்தில் விளங்கித் தோன்றித் திருவருளை உதவலானும், அனைவரும் உய்யும்வண்ணம் ஆட்கொண்டு இப்பூமியிற் காத்தலானும் நமக்கு உபதேசந் தந்த நற்குரு சுத்த சிவமேயாம் என்றவாறு.

அப்பாலைக்கு அப்பாலனுகிய பெருமான் எம் பொருட்டு இப்பாலனுகவும் எழுந்தருளி, எம் மனத்தும் இருந்து, எல்லாரையும் உய்யக்கொண்டருளுதலால் உபதேச கர்த்தாவாகிய குரு சிவனே ஆவர் என்பது கருத்து.

உலகம் மாயா காரியமாய் உயிர்களுடைய போக நுகர்ச்சிக்காக இறைவனுல் படைக்கப்பட்டது. இது பிரகிருதிமாயா புவனம முதல் சுத்தமாயா புவனம் வரையுளள புவனங்கள். இவற்றின் விரிவும் பரப்பும் கந்தபுராணம் அண்டகோசப்படலத்தில் அறிவிககப் பெற்றுள்ளன. இறைவன் இவ்வுலகங்கள் அனைத்தை யும் கடந்து அப்பாலனுயும், கலந்து இப்பாலனுயும் விளங்குகின்ருன் எனபது முதலடியால் உணர்த்தப் பெறுவது.

நல்லார் – பரிபாகிகளான ஞானிகள். அவர்கள் உள்ளம் இறைவனுக்கு உகந்த இடமாகலின், அதனை எப்பொழுதும் வீற்றிருக்கும் கோயிலாகக் கொண்டிருக் கின்ருன் ; அருளை மிக வழங்குகின்ருன் என்பதை 'நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்' என்று அருளிச் செய்கின்ருர்.

இறைவன் ஆன்மாக்களிடம் பட்சபாதம் இல்லாதவன் ஆகையால் ஒப்ப எல்லாரையும் உய்ய ஆட்

கொண்டு அருள்செய்கின்றான். ஆயினும் ஆன்மாக்களுடைய பரிபாகநிலைக்கேற்ப அவரவர்களுக்குப் பயன் தருவதாகின்றது. மழை எங்கும் ஒப்பப் பெய்யினும் பள்ளம் படுகுழிகளில் நீர் தேங்கியும், மேடுகளில் மண்ணீரமாகக் கலந்தும், மலையில் உடனே உலர்ந்தும் போவது போல என்க.

சொல் – மாணவன் மல மாயைகளிலிருந்து நீங்கிப் உய்யவேண்டும் என்ற உயர்நோக்கால் உபதேசிக்கின்ற சொற்கள்.

இதனால் இறைவனே எல்லாரையும் உய்யக்கொள்வதற்காக மானிடச்சட்டை சாத்திவந்து உபதேசித்தலால் அவனே குரு என்பதை அறிவித்தவாறு. (4)

**தேவனும் சுத்த குருவும் உபாயத்துள்**
**யாவையும் மூன்று யுனக்கண் டுரையாலே**
**மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால்**
**யாவையும் நல்கும் குருபரன் அன்புற்றே. 1577**

இ-ம் - எனின், பதியும் குருவும் முப்பொருளில் ஒன்றாயினும் குரு உயிர்களைப் பாசத்தினின்று நீக்கிப் பேரின்பம் அனைத்தையும் நல்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தேவதேவனாகிய சிவபெருமானும், சிவனருளால் பரிபாக முற்றுச் சிவமேயான குருவும் முப்பொருள்களுள் ஒன்றாக எண்ணப்படுதலை அறிந்து குருபரன் அன்புற்று உயிர்களைப் பாசத்தினின்று நீக்கி முத்திநிலையில் அடையத்தக்கனவாகிய எல்லா இன்பங்களையும் ஒருசேர உதவுவன் என்றவாறு.

முப்பொருள்களில் ஒன்ருகச் சிவனும் குருவும் எண்ணப்படினும், குரு உபதேசத்தால் உயிர்களைப் பாசத்தினின்று நீக்கிப் பதியினிடம் சேர்ப்பித்து முத்தி நிலையில் அடையத்தக்கனவாகிய எல்லா இன்பங்களையும் உதவுவன் என்பது கருத்து.

தேவன் – ஒளியான திருமேனியைப் படைத்தவன். தேவன் என்னும் சொல் அடைமொழியின்றி உணர்த்துவது சிவபரம்பொருள் ஒன்றையேயாம். இந்திரன், மால், பிரமன் முதலான எழிலார் மிகு தேவரெல்லாம் திருமேனியில் ஒளியுடையராயினும் அவ்வொளி தண்மதி ஒளிபோலத் தவஞ்செய்து இறைவனிடமிருந்து பெற்ற ஏகதேச ஒளியேயாம். ஆதலால் அவர்களை இன்னுர் என்று சிறப்புப் பெயரோடு கூட்டியே அழைத்தல் வேண்டும். இறைவன் ஒருவனே, தேவ என்னும் சொல்லுக்கு நேர் பொருளானவன். ' தேவாய தேவாய ' என்னும் மந்திரமும் இப்பொருளை வலியுறுத்துவதாம்.

குரு பாவங்களைப் புகுதாதவாறு சீடன் சிந்தையைத் தடுத்து நிறுத்துபவன் என்னும் பொருளது. குரு தான் சுத்தனுக இருந்தால் அல்லது அசுத்தராய மக்களைத் திருத்தவொண்ணுது ஆகலின் 'சுத்தகுரு' என இயற்கை அடைகொடுத்தோதினுர். இதற்கு மல, மாயை, கன்மங்களிலிருந்து இயல்பாகவே நீங்கிய அடிமை ஆருயிரும் சிவகுரு ஆம் என உரைப்பாரும் உளர். சிவத்துவ வியாபகத்துள் செறிந்து நிற்கும் சிவானுபவியாகிற சிவகுரு சிவனேயாதலின் அங்ஙனம் மலத்தின் நீங்கிய உயிரெனல் பொருந்துமோ என்பது ஊன்றி ஆய்தற்குரியது. சுத்த குரு – வெங்கதிர் என்பது போலத்

தன்மை விளக்க வந்ததாகக் கொள்க. இனம் விலக்க வந்ததன்றென்க.

உபாயம் - பொருள்கள். அவை பதி பசு பாசம் என்று மூன்றாக உரைக்கப்படுதலின் இவற்றின் வேறாக எப்பொருளும் இன்மையின் ' யாவையும் உபாயத்துள் மூன்றாய் உனக்கண்டு ' என்றார். உன - உன்ன.

குருபரன் அன்புற்று உரையாலே மாற்றி யாவையும் நல்கும் என முடிக்க, உரை - சீபஞ்சாக்கரமும் அதனை ஓதும்முறையும் நிற்கும்முறையும். ஆன்மாக்கள் நித்தியம் ஆதலின் அதற்கு மூப்பும் இழப்பும் இல்லையாதலின் அவற்றை ' மூவாப் பசு ' என விசேடித்தார். குருநாதன் தன்னுடைய உபதேச மொழியால் உயிர்களைப் பாசங்களிலிருந்து நீக்கிப் பேரின்பத்தை நல்குவன் என்றவாறு. முத்திப்பால் - முத்தியிடத்து.

குருபரன் அன்புற்று நல்குவது கைம்மாறு வேண்டாத கருணையாலாம் என்க. (5)

**சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்**
**தத்தனை நல்கருள் காணு அதிமூடர்**
**பொய்த்தகு கண்ணான் நமரென்பர் புண்ணியர்**
**அத்தன் இவனென் றடிபணி வாரே.** **1578**

இம் - எனின், உலகவர் குருவைச் சிவனென்று மதியாது நமர் என்றும், ஞானிகள் சிவன் என்றும் கொள்ளுவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அநாதியே சுத்த நித்தனுன பரசிவன், குருவாக எழுந்தருளிவந்து ஆன்மாக்களுடைய மல கன்மங்களைப் போக்கி, பரிபாகப்படுத்தி, சிவமாந்தன் மையை நல்கும் அருளை அறியமாட்டாத அதிமூடர்க ளாகிய உலகவர் பொய் மிக்க கண்ணுல் நமர் என்று தம்மோடு ஒப்பவைத்து எண்ணுவர்; சிவபுண்ணிய சீலர்களாகிய சிவஞானிகள சிவனே இவன் என்று திருவடியில் வீழ்ந்து வணங்குவர் என்றவாறு.

இறைவனே குருவடிவாக எழுந்தருளி ஆன்மாக் களுக்கு அருள்செய்யவும் அதனை அறியமாட்டாத மூடர், குருவை மக்களுள் ஒருவராகவே மதிப்பர்; ஞானிகள் சிவனென்றே வணங்குவர் என்பது கருத்து.

சுத்த சிவன் என்பதற்குச் சுத்ததரு என்பதற்கு உரைத்தாங்குரைக்க. சிவன் குருவாக வருதலாவது, கண்ணுதலும் கண்டக்கறையும் மான் மழுவும் மறைத்து மானிடச்சட்டை சாத்தி எழுந்தருளுவன் என்பார் ' சுத்தசிவன் குருவாய்வந்து ' என்ருர்.

அத்தன் - சிவபெருமான். நல்கு அருள் - கொடுக் கின்ற அருள். அத்தனை நல்கு அருளாவது மணியுள் ஒளிபோலச் சீவனுக்குள் சிவாணம் பூக்கச்செய்வது. அதனைக் காணுதாரை அதிமூடர் என இழித்துக் கூறி யது ஒளி கண்டும் தெருளாத செங்கண்ணைப் போட் டைக் கண் என்றது போலக் காரியப்படாமையாகக் கொளக.

பொய்த்தகு கண்ணுல் - பொய்யான புவன போகங்களையே பொருளெனக் கண்டு அறியும் பாச ஞானத்தால். நமர் என்றது சிவகுருவினுடைய கருவி

கரணங்களையும் செயல்களையும் கண்டு நம்மைச் சேர்ந்தவர் என்று மதித்தல். மூடர் பொய்த்தகு கண்ணால் நமர் என்பர் ; எனவே புண்ணியர் மெய்த்தகு கண்ணால் அத்தன் இவன் என்று அடிபணிவார் என்க.

புண்ணியம் பசுபுண்ணியமும், பதிபுண்ணியமும் என இருவகைப்படும். அவற்றுள், பதிபுண்ணியமே ஈண்டுக் கருதப்படுவது. அதனையுடையார் புண்ணியர். தொண்டர்க்குத் தொண்டராதலே புண்ணியமாதலின் ஆசாரியனை அத்தன் என்று அவனடி பணிவாரைப் புண்ணியர் என்றது பொருந்தும் என்க. (6)

**உண்மையிற் பொய்மை ஒழித்தலும் உண்மைப்பார்**
**திண்மையும் ஒண்மைச் சிவமாய அவ்வரன்**
**வண்மையும் எட்டெட்டுச் சித்தி மயக்கமும்**
**அண்ணல் அருளன்றி யாரறி வாரே. 1579**

இ - எனின், குருவருளன்றி ஒன்றையும் அறிபொணாது என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சிவஞானத்தால் அறியாமையைப் போக்குதலும், உண்மையாகக் காணப்படுகின்ற பிரபஞ்சத்தின் மயக்கும் வன்மையும், ஒளி வடிவான சிவத்தின் வள்ளன்மையும் அறுபத்து நான்கு சித்திகளால் விளைகின்ற மயக்கமுமாகிய அனைத்தையும் சிவத்திருவருள் உணர்த்தினாலன்றித் தாமே அறிவார் யார் ? ஒருவருமிலர் என்றவாறு.

அஞ்ஞானம் அகலுதலும், பிரபஞ்ச வைராக்கியம் விளைதலும், சிவத்துவ விளக்கமும். சித்திகளால் விளை

கின்ற மயக்கமும் ஆகிய அனைத்தும் அவன் அருளால் அன்றி, வேறு எந்த உபாயத்தானும் அறிய முடியாது என்பது கருத்து.

உண்மை - என்றும் அழியாத சத்துப்பொருள். ஈண்டு அதனை அறிவதாகிய ஞானத்தை உணர்த் திற்று. ஞானமாவது சிவஞானம். பொய்மை - நிலையா ததும். பொருள் புலப்படாதவாறு மறைத்து மயக்கு வதுமான அஞ்ஞானம். விளக்குப்புக இருள் மாய்ந் தாங்கு சிவஞானம் தோன்ற அஞ்ஞானம் அழியும். அங்ஙனம் அழியச் சிவஞானத்தை அருளுபவன் சிவ குருவே என்பார் உண்மையிற் பொய்மை ஒழித்தலும் அண்ணல் அருளன்றி யாரறிவாரே என்றார்.

பார் - பிரபஞ்சம். மாயாகாரியமாய்த் தோன்றி நின்று அழிவதாய்ப் பொய்யாய் இருந்தும் சகலான் மாக்களுக்கு உண்மைபோலத் தோன்றுதலின் 'உண் மைப் பார்' என்றார். பிரபஞ்சம் தன்னை உண்மைப் பொருள் எனவே உறுதியாக மக்களை நம்பச்செய்து மயக்கும் வலிமை உடைமையின் பார் திண்மையும் அறிவித்தான் ஆசாரியன் என்பது.

ஒண்மை - ஒளி. சிவம் ஒளியான திருமேனியுடைய தாதலின் 'ஒண்மைச் சிவமாய அவ்வரன்' என்றார். அரன் - பாவங்களைப் போக்குபவன் என்னும் காரணத் தான் வந்த பெயர். சிவமாய அவ்வரன் - பாவங்களைப் போக்கும் உபகாரியாகிய சிவம் என்றவாறு. அவனது வண்மை உயிர்களின் பரிபாகம் அறிந்து ஊட்டுதலும் கூட்டுதலும் செய்து பேரின்பத்தில் இருத்துதலாம்.

எட்டெட்டுச் சித்தி – அறுபத்துநான்கு சித்திகள். சித்திகள் ஞானவொயிலான யோகத்தால் அடையப் பெறுவனவாயினும் மேல் உண்மைஞானத்தை அடை யாவண்ணம் வழித்தடையாய் நின்று மயக்குவன் ஆதலின் சித்தி மயக்கமும் உணர்த்திஞன் என்றுர்கள்.

அண்ணல் – சிவகுரு. அருள் – அவன் மயக்கம் தருவனவற்றினின்று நீங்கி உண்மையில் ஒண்மையில் நிலைபெறுக என உணர்த்திய உபதேசம், " உணர்த் திஞலன்றி உணரா உளங்கள் " " காண்பாரார் கண் ணுதலாய் காட்டாக்காலே " என்பாராகலின் உயிர்கள் தாமாகவே உணரா; ஆசாரியன் உணர்த்தவேண்டும் என்பதாம். (7)

**சிவனே சிவஞானி ஆதலால் சுத்த**
**சிவனே யென அடி சேரவல் லார்க்கு**
**நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்**
**பவமான தின்றிப் பரலோக மாமே** 1580

இம் - எனின், சிவனே குரு எனச் சிந்தை செய்யின் விளையும் பயன்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். சிவனே சிவஞானி ஆதலால் குருவைச் சுத்த சிவனே என்று எண்ணித் திருவடியைத் தியா னிக்க வல்லவர்கட்குப் புதிதான தத்துவங்களும், நல்ல முத்தியும் சேரும்; பிறப்பின்றிப் பரலோகம் சித்திக்கும் என்றவாறு.

குருவைச் சிவனே என உறுதியாக உளங்கொளின் பசுகரணங்கள் பதிகரணங்களாகிச் சீவன், முத்தியைச் சேரலாம்; பிறப்பு அற்றுப் பரலோகமும் கிடைக்கும் என்பது கருத்து.

சிவஞானி என்றது ஆசாரியனை, ஆசாரியனை நம்போல் மானிடன் என்று எண்ணுமல் சுத்தசிவமே என்று புத்திபண்ணின் விளைவன இவை என்பதாம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல்; அடைதலுமாம். சேர்தலின் அருமைதோன்றச் 'சேரவல்லார்' என்றார்.

நவமான தத்துவம் - புதிய அனுபவ உண்மை. கரணங்கள் பாசத்தோடு ஒன்றிப் பாசமான காலத்து நுகர்ந்த போகம்போல அற்பமாதலின்றி, அவை சிவ கரணமான காலத்துச் சிந்தை நிறைந்த - நிலைத்த பெரும் போகமான இன்பநிலை அனுபவம் விளைதலை 'நவமான தத்துவம்' என்று அருளியது. அங்ஙனம் நவமான தத்துவம் விளைந்தபோது அவன் சீவன் முத்தனாகிருனாதலின 'நன்முத்தி நண்ணும்' என்றது.

எடுத்த தேகம் வீழ்ந்த பின்பு தொடர்ந்துவரும் பிறப்பற்றுப் பர முத்தி சித்திக்கும் என்பார் 'பர லோக மாமே' என்றார். இங்ஙனம் படிமுறையாக விளையும் பயன் உணர்த்தியவாறு. (8)

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே. 1581

இம் - எனின், குருவே சிவமென்பதை வலியுறுத்துதல் நுதலிற்று.

இ - ள்: எனது குருநாதனாகிய நந்தி குருவே சிவனென உபதேசித்தான்; அங்ஙனமாகவும் உலகவர்

குருவே சிவம் என்பதை எண்ணியிருந்து அறியார்கின்றனர்; குருவே சிவமும் தலைவனுமாக விளங்கும். அன்றியும், வாக்கு மனங்களைக் கடந்த தலைவனும் ஆவன் என்றவாறு.

குருவே சிவம்; அரசன்; தலைவன்; அங்ஙனம் என் ஆசாரியன் உபதேசித்தும், உலகவர் உணர்ந்து உறுதிகொள்கின்றிலரே என இரங்கியவாறு.

குறித்தல் - உறுதியாக எண்ணுதல். ஓர்தல் - ஒரு மனப்பட்டுத் தியானித்தல். உரை உணர்வு - வாக்கும் மனமும். உணர்வு என்ற காரியத்தின் பெயர் அதன் கருவியாகிய மனத்தை உணர்த்தியது. வாக்கு மனோதீதமான பரம்பொருளாவன் என்பதாம். (9)

**சித்தம் யாவையும் சிந்தித் திருந்திடும்**
**அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே**
**சித்தம் யாவையும் திண்சிவ மானக்கால்**
**அத்தனும் அவ்விடத் தேயமர்ந் தானே.** 1582

இம் - எனின், சித்தம் சிவமானபோது அத்தன் இடைவிடாது அமர்வன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தந்தையாகிய பெருமான் உயிர்களுக்குத் திருவருளால் உணர்த்துவது சித்தத்தின்கண் ஆகும். அதனால் சித்தம் அனைத்தையும் அவனருளாலே சிந்தித் திருங்கள். அங்ஙனம், சித்தம் அனைத்தும் நிலைபேறான சிவமானபோது அச்சித்தத்தையே இடமாகக் கொண்டு தந்தையாய சிவன் எழுந்தருளுவன் என்றவாறு.

சித்தத்தால் சிவனைத் தியானிக்கச் சித்தம் சிவமாம்; அச்சித்தத்தை விட்டுச் சிவன் என்றும் நீங்கான் என்பது கருத்து.

சித்தம் யாவையும் சிந்தித்திருந்திடும் அத்தன் அருளாலே உணர்த்துவதாகும். சித்தம் யாவையும் திண் சிவமானக்கால் அத்தனும் அவ்விடத்தே அமர்ந் தானே எனப்பிரித்துக் கூட்டிப் பொருள்காண்க.

சித்தத்திற்குத் தனி இடமும், உருவமும் இல்லை. சிந்தித்ததன் வடிவே வடிவாய் அறிவாய் அமைவது. ஆகவே, சிந்தித்த பொருள்கள் அனைத்தும் சிவமாகக் காணும் எங்கும் நிறைந்த இன்பக்காட்சியை அதாவது பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தத்தைத் தியானித்திருங்கள் என்பதை இம்மந்திரத் தின் முதலடி உணர்த்துகின்றது.

இங்ஙனம் சித்தம் சிவத்தையே சிந்தித்திருக்கும் தன்மையை அடைவது யாங்ஙனம் எனின், வேறு உபாயமின்று; இறைவன் திருவருளாலேயாம் என்பது. இதனை 'அத்தன் அருளாலே உணர்த்துவதாகும்' என்பதால் அறிக. அங்ஙனம் இடைவிடாமல் சிந்தித் திருக்கக் காந்தம் கண்ட பசாசு காந்தமாதல் போலச் சித்தம் சிவமாம். அச்சித்தத்தை இடமாகக்கொண்டு சிவன் நித்தியவாசம் பண்ணுவன் என்பதைப் பின் இரண்டடிகளும் விளக்கும்.

இங்ஙனமன்றி அருளாலே சித்தம் எல்லாவற்றை யும் சிந்தித்துணர்வதும் சிவபெருமான் தனது அருட் சத்தியால் உணரும்படி செய்தலேயாம். உயிர் தானே

உணராது. சித்தம் சிவகரணமானபோது அவ்விடத்து அத்தன் அமர்வான் என்று உரைப்பாரும் உளர்.

தேவதத்தன் கத்தியால் வெட்டினன் என்றவழி வெட்டுதல் கத்தியின் தொழிலும், சடமாகிய கத்தியைத் தொழிற்படுத்துதல் தேவதத்தன் செய்கையும் ஆனாற் போல, சிந்தித்தல் சித்தத்தின் செயலும் சிந்திக்கச் செய்தல் சிவன் உணர்த்தியதால் வினையும் பயனுமாதல் தெளிக. ஆகவே, அத்தன் – உணர்த்தும் வினை முதல்; சித்தம் – உணர்தற்கருவி; ஆன்மா உணரும் வினை முதல் எனப் பிரித்துணர்க. இதனால் ஆன்மாக்கள் சித்தத்தால் சிந்தித்து உணர்தல் சிவனருளாலன்றிப் பிறிதானன்று என்பது தெரிவித்தவாறு.

வேறு சிலர் அத்தனாகிய பெருமான் திருவருளால் ஆவிகளுக்கு உள் நின்று உணர்த்துவன்; அதனால் எண்ணமாகிய சித்தம் யாவற்றையும் உள்ளவாறு உணர்ந்திருக்கும்; அம்முறையில் எண்ணமானது இடையறாது சிவத்தையே நாடுவதால் சித்தம் முதலிய கரணங்கள் சிவகரணமாகும்; அத்தன் ஆவி தானாகவே அமர்ந்திடுவன் எனப் பொழிப்புரைப்பர். இவ்வுரையில் எச்சங்களிற் சில முற்றாக்கப்பட்டுச் சொற்றொடர் துண்டிக்கப்பட்டமையும், அத்தன் உணர்த்துவதாகும் எனச் செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று ஆண்பாற் படர்க்கைப் பெயரைக் கொண்டு முடிதல் இயையுமாயினும் பொருள் தெற்றென விளங்காமையின் இடர்ப்பட்டுக் கொண்டுகூட்ட வேண்டிய இன்றியமையாமை தோன்றலானும் இவ்வுரை ஆழ்ந்து சிந்தித்தற் குரியது. ஆதலால் நீர் சித்தம் யாவையும் சிவனைச் சிந்தித்திருந்திடும் இது அத்தன் அருளாலே உணர்த்துவ

தாகும்; சிந்தித்த பயிற்சி விசேடத்தால் சித்தம் சிவமானபோது அத்தன் அங்கே அமர்வன் என அதிகாரத்திற்கியைய ஆற்றெழுக்காகப் பொருள் கோடலே சிறந்தது. அமர்ந்தான் என்றது விரைவும் துணிவும்பற்றி இறந்தகாலமாயிற்று. (10)

**தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த**
**கோனந்தி எந்தை குறிப்பறி வாரில்லை**
**வானந்தி யென்று மகிழும் ஒருவற்குத்**
**தானந்தி யங்கித் தனிச்சுட ராமே.** 1583

இ-ம் - எனின், சிவஞான நெறியில் எம்மைச் செலுத்தியவன் சிவகுருதேவ என்று அறிந்து மகிழ்பவனுக்குச் சிவன் விளங்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எல்லாவற்றினும் சிறந்ததான சிவ ஞானத்தைச் சேர்தலால் விளையும் சிறப்பினை எம்மோடு கூட்டியவன் எமது ஆசாரியனாகிய சிவனே; அங்ஙன மிருந்தும் என் தந்தையாகிய சிவகுருவின் திருவுள்ளக் குறிப்பை உள்ளவாறு அறிவார் இல்லை; உண்மை உணர்ந்து இறைவனே பரமாசாரியன் என்று உறுதி கொண்டு மகிழ்கின்ற ஒருவனுக்குக் குரு, மாலைக்காலத்துத் தீச்சுடர்போல விளங்குவன் என்றவாறு

எம்மை எடுத்தாண்டு இன்பநிலையில் சந்திக்கும் சிறப்பினைச் சேர்த்த குருவே சிவன்; அவனைப் பரமா சாரியன் எனக்கொண்டு என்றும் தியானிப்பவனுக்குச் இறைவன் மாலைக்காலத்தில் எரியும் இல்லகவிளக்குப் போல்வன் என்பது கருத்து.

சீர்மையுள் சந்தித்த சீர்வைத்த கோன்தான் நந்தி எனக் கொண்டுகூட்டிப் பொருள் காண்க. மகனைப் பள்ளியில் சேர்த்த தந்தையின் கருத்து அறிவுத் துறையில் புகழோடு சிறப்பு எய்துதல் ஒன்றேயாதல் போல மலமாயை கன்மங்களோடு சேர்ந்து மயங்கிக் கிடந்த உயிரைச் சிவஞானத்தோடு கூட்டிச் சிறப் புறவைத்தல் சிவகுருவின் கருத்து. குருவே சிவனெனக் கொண்டு எண்ணி எண்ணி மகிழ்தல் ஒன்றே என்பதும், அங்ஙனம் மகிழ்வான் மனத்திலதான் யாலைக்காலத்துத் தீப ஒளிபோல விளங்குவான் என்பதும் உணர்த்தப் பெற்றன. இதனை "நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீலமணிமிடற்றன்" என்பதனானும் அறிக.

சிலர் சீர்மை என்பதற்குச் சன்மார்க்க ஒழுக்கம் என்றும், சந்தித்த என்பதற்குக் காணப்படுவதான என்றும் பொருள்கொண்டு இடர்ப்படுவர். சிலர் சீர்மை என்பதற்குத் திருவருள் முறைமை என்றும், சந்தித்த சீர் என்பதற்குச் சிவஞான நெறியில் காணப்படுவதான திருவருள் என்றும் உரை காண்பர். எங்ஙனமாயினும் சிவகுரு தரிசனம் என்ற அதிகாரத்திற்கு இவையைப் பொருள்கோடலே சாலச்சிறந்தது. வான் நந்தி - பரமாசாரியன். (11)

**திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை**
**மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்**
**பொருளாய வேதாந்த போதமும் நாதன்**
**உருவாய் அருளா விடிலோர ஒண்ணாதே.** **1584**

இம் - எனின், சிவஞானத்தைச் சிவன் உருவு கொண்டு அருளாவிடின் உணரவொண்ணாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானமாகிய பேறும், அதன் பயனாகிய முத்தியும், சிறப்பு மயாங்காதபடி இறைவன் உதவுகின்ற மயக்கத்தை நீக்குவதாகிய உண்மைப் பொருளான வேதமுடிவான ஞானமும் இறைவன் உருவுதாங்கி உபதேச உரையாக அருளாவிடில் அறியவொண்ணாது என்றவாறு.

இறைவன் உருவாக எழுந்தருளிச் சித்தி, முத்தி, அஞ்ஞானத்தை அகற்றும் மெய்ஞ்ஞானம் இவற்றை உதவியதால் உயிர் சிவமாக விளங்குகிறது என்பது கருத்து.

திருவாயசித்தி : திரு – ஞானம். "போகமும் திருவும் புணர்ப்பானை" என்பதிலும் இப்பொருட்டாதலைத் தெளிக. திரு – செல்வம் எனக் கொள்வாரும் உண்டு. சித்தி – பேறு. திருவாய சித்தி – ஞானப்பேறு.

வேதாந்த போதம் - வேதத்தின் முடிவான உபநிடதங்களால் உணரப்படும் மெய்ஞ்ஞானம். அது என்றும் அழியாத நித்தியப் பொருளாதலின் 'வாய்மைப் பொருள்' எனப்பட்டது. அதனால் சிவஞானமாகிய சிறப்பிலிருந்து மயங்காத அருளும் மயக்கமும் நீங்கும். இவையெல்லாம் அடங்கச் 'சீர்மை மருளாதருளும் மயக்கமும் வாய்மைப் பொருளாய வேதாந்த போதமும்,' என்றார்.

இறைவன் ஆன்மாக்கள்மீது வைத்த கைம்மாறு வேண்டாத கருணையால், கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து, மானைக் காட்டி மானைப் பிடிப்பார்போல மானிடவடிவு தாங்கி, குருவாக எழுந்தருளி உபதேசம் செய்யாவிடில் உயிர்களால் ஆராய முடியாது என்பதனை "நாதன் உருவாய் அருளாவிடில் ஓர ஒண்ணுதே" என்பதால் உணர்த்தினர். இதனை

"ஆரணம் ஆகமங்கள் அருளினுல் உருவுகொண்டே
காரணன் அருளானுகில் கதிப்பவர் இல்லையாகும்
நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாம்
சீரணி குருசந்தானச் செய்தியும் சென்றிடாவே"

என்னும் சித்தித் திருவிருத்தத்தானும் தெளிக. (12)

பத்தியும் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாம் சிவோகமே சேர்தலால்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி அருள்தரில் தானெளி தாமே. 1585

இம் – எனின், திருவருளால் சிவஞானம் தோன்றுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அன்பும், அதனுல் விளைந்த ஞானமும், வைராக்கியமும் சிவத்தை அடைதற்கு விதைபோல்வதாம். சிவோகம்பாவனை செய்தலால் முத்திக்கு ஏதுவாகிய ஞானம் தோன்றும்; அதனுல் ஞானத்தின் தோற்றம் சிவசத்தியின் அருளுதவியினுல் எளிதாகும் என்றவாறு.

பத்தி ஞான வைராக்கியங்கள் பரமுத்திக்கு வித்து ஆதலின் அவற்றைக் கொண்டு சிவோகம்பாவனை

செய்யச் சிவஞானம் தோன்றும்; அதுவும் திருவருட் சத்தியின் உதவியால் எளிதாகக் கிடைக்கும் என்பது கருத்து.

பத்தி இறைவன்மாட்டு எழுந்த முறுகிய அன்பு. அன்பு உயிர்க்குணமாய் உபகாரியைக் கண்டவுடன் உள்ளத்து எழும் நெகிழ்ச்சி. அது அவ்வுபகாரியை இடையீடின்றிக் காண்டலானும், தொழுதலானும், அவன்புகழைக் கேட்டலானும் வெளிப்படுவதாதலின் இறைவன் மாட்டு எழும் அன்பைப் 'பத்தி' என்றார்.

பத்தி — என்பது ஃஜ ஸேவாயாம்' என்ற பகுதி யடியாகப்பிறந்த பெயர்ச்சொல். தியானமும் பூஜையு மாகிய சேவையால் விளைவது என்பது பத்திப்பொருள். அது தலையன்பும் இடையன்பும் கடையன்பு மென முத்திறப்படும். தலையன்பு தைலதாரை போல எஞ் ஞான்றும் இறைவன்மாட்டு நிகழ்வது. இதனைச் "சிந்தை இடையாறு அன்பும்" என்னும் சேக்கிழார் திருவாக்கான் உணர்க. இடையன்பு என்பது மனம் இறைவனோடு ஒன்றியபோது மட்டும் வெளிப்படுவது; சூரியனது சந் நிதியில் காந்தக்கல் கனலைக் கக்குவது போல கடையன்பு இறைவனது திருவுருவத்தைக் கண்டபோதுமட்டும் வெளிப்படுவதாய் ஏனைக்காலத்து அத்தொடர்பே இல்லாது இறுகி இருப்பது; அற்று அற்று ஒழுகும் நீர்த்திவலை போல, அல்லது கனலைக் கண்டவுடன் இளகும் இழுது போல என்லும் ஆம். இது பரசித்திக்கு முதற்படியாதலை உணர்த்தியவாறு.

ஞானம் — முறுகிய அன்பால் எழும் இறையுணர்வு. இதனை "நாயகன் சேவடி தைவரும் சிந்தையும்"

சிந்தையும்" என்னும் சொற்றொடரைக் கொண்டு நன்குணரலாம். இது மாயாமயமான உலகியல் அறிவை உதறித்தள்ளி, திருவடியே சார்தலால் விளைவது ஆகலான் இதவும் பரசித்திக்கு வித்தாயிற்று என்க.

வைராக்கியம் — வெறுப்புத்தன்மை. நம் அறிவால் காணப்படுவனவும் இந்திரியங்களானுகரப்படுவனவு மாகிய பொருள்கள் தோன்றி நின்று அழிவனவாய், சிற்றின்பத்தனவாய், பாலுண்டார்க்கு வாய் புளிக்குமாறு போலப் பிற்பயக்கும் பீழை பெரிதுமுடையன வாயிருத்தலின் அவற்றில் வெறுப்புத் தோன்ற என்றும் நிலையுதலுடைய சிவத்தைப் பற்றுதலும் அதனையே அறிதலும் அதுவே நான் என இருத்தலும் ஆகிய அனுபவங்கள் முறையான் விளையும்; ஆதலால் வைராக்கியமும் பரசித்திக்கு வித்தாயிற்று. விராகம் — ஆசையற்றது. அதன் தன்மை வைராக்கியம் ஆகவே பற்று அறுதியால் விளையும் தன்மையே வைராக்கியமாம்.

பரசித்தி: சித்தி — பேறு: பரம் — பரம்பொருள். ஆகவே பரசித்தி சிவப்பேறும் என்க. பத்தி ஞான வைராக்கியங்கள உண்மை ஞானத்தை உதவ அதனல் பரசித்தி கிடைத்தலின் 'வித்தாகும்' என்றுர்.

சிவோகம் — சிவமே நான் என்றிருக்கை; அஃதாவது தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வுக்கு விஷய மாகாத முதல்வனை ஆராய்ந்து அச்சிவஞானத்தானே ஆசாரியன் 'சிவோகம்' எனத் தன்னுளளே வைத்துப் பாவித்து, 'தத்துவமசி' என்று அறிவிக்க நாடோறும் அதனைப் பயின்று சிவோகம் எனப்பாவித்தல். இதனல்

ஆன்மாக்களை அநாதியே பற்றியுள்ள மல மாயா கன்மங்கள் விட்டு நீங்கும் இதன் விளக்கத்தை

**''கண்டதை அன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்**
**அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த**
**ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட**
**சானத்தில் தீர்விடம்போல் தான்''**

என்னும் சிவஞானபோத வெண்பாவால் அறியலாம். சிவோகம்பாவனை முற்றின் காண்பானும் காட்சியும் காணப்படுபொருளும் ஒன்றி இன்புறுதலாகிய பர முத்திக்கு ஏதுவாகிய சிவஞானம் தோன்றும் என்பதைச் 'சிவோகமே சேர்தலால் முத்தியின் ஞானம் முளைத் தலால்' என்பதால் உணர்த்தியவாறு முளைத்தலால் என்பதில் ஆல் என்பதனை அசைநிலையாக்குக. முளைத்தல் என்பதற்கு முளைத்தல் ஆகும் எனப் பயனிலை வருவிக்க.

அம்முளை என்றது உயிர்களினிடமாக முளைக்கும் சிவஞானத்தை. சத்தியருள் – என்றும் பிரிக்க முடியாது சிவனோடு உள்ள அருளே சத்தி. அது உதவுதலால் ஆன்மாவினிடம் சிவஞானம் தோன்றுகிறது ஆதலின் பத்திஞான வைராக்கியங்கள் சிவோகம்பாவனை முதலியன செய்து, படிமுறையில் எய்துவதைக்காட்டிலும் சிவசத்தி அருள்தரின் எய்துதல் எளிதாமென்று சிவ ஞானத்தை அடையும் எளிமை உணர்த்தியவாறு.

இங்ஙனம் அருளை ஆன்மாவிடம் சேர்ப்பிப்பவன் ஆசாரியன் ஆதல் மேலே உணர்த்தப்பட்டதாதலின் அதிகார இயைபு தோன்றநிற்றல் காண்க.

முத்தியின் ஞானம் முளைத்தலால் என்பதற்கு முத்தி அடைய இச்சை உண்டாதலான் எனவும், அம் முளை என்பதற்கு அந்த இச்சை எனவும் பொருள் கூறுவாரும் உளர். (13)

**இன்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை**
**முன்னெய்த வைத்த முதல்வனை எம்இறை**
**தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படும்**
**மன்னெய்த வைத்த மனமது தானே.** 1586

இம் - எனின், மனம் இடைவிடாது பற்ற இறைவன் அம்மனத்துள் தானே வெளிப்படுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இவ்வுலகத்து அடியேன் எய்துதற்காக உதவிய ஒப்பற்ற இன்பப் பிறப்பை முன்னமேயே எனக்கு உபகரித்த முதல்வனும், தலைவனும் எமது இறைவனுமாகிய பரசிவத்தை ஆன்மா அறிவு துணையாக அடையுங்காலத்து, அவன் ஆன்மாவினிடமாகத் தானே வெளிப்படுவன்; அங்ஙனம் நிலைபெற வைத்த மனம் அச்சிவமேயாம் என்றவாறு.

இப்பிறவியை முற்பிறவியிலேயே வகுத்த முதல்வனை யாம் தியானிக்குங்காலத்து அவனே வெளிப்பட்டருளுவன்; அப்போது நம் மனம் அச்சிவமேயாய் விளங்கும் என்பது கருத்து.

இன்னெய்த: கன்ம பூமியாகிய இங்கே போக போக்கியங்களை அடைவதற்காக அருளாளன் உதவினன் என்பார் இங்ஙனம் கூறினர்.

ஓர் இன்பப் பிறப்பினை : அங்ஙனம் சிவஞானம் மேவப்பெற்றுச் சிவச்சார்பே எய்தும் இன்பத்தைக் காட்டிலும் சிறந்தது ஒன்று இல்லாதலின் அதற்கு ஏதுவாகிய இப்பிறப்பு ஒப்பற்றதும் இன்பப்பிறப்பும் ஆயிற்றென்க.

பிறப்பும் அதில் நுகரப்படும் புன்மை போகங்களும் நம்முடைய பரிபாகப்பட்ட பிராரத்த கன்மத்தினுக்கு இயைய முற்பிறப்பின் இறுதியிலேயே இறைவனால் வகுக்கப்படுவன ஆகலின் 'முன் எய்த வைத்த முதல்வனே' என்றார். எய்தவைத்த எனும் பெயரெச்சத்தை எய்துதற்குக் காரணமாக வைத்த என ஏதுப்பொருள் தோன்ற உரைக்க.

முதல்வன், ஐ. இறை என எழுவாய்களை இயைத்து எண்ணுக. ஐ—தலைவன். நம் அனைவர்க்கும் முந்தோனாதலின் முதல்வன் என்றும், இருந்து இயக்குதலின் ஐ என்றும், உயிரினிடமாக என்றும் தங்கியிருத்தலின் இறை என்றும் இறைவனுடைய முதன்மையும், தலைமையும், இறைமையும் தோன்றக் கூறினார். தன் எய்துங் காலத்து – ஆன்மா தனைனை அடையுங்காலத்து என எழுவாய் வருவித்துரைக்க. மலபரிபாக முற்றகாலத்து என்க.

தானே வெளிப்படும் : உணர்த்த உணரும் சித்தாகிய ஆன்மாக்கள் எனறும் சுதந்திரமற்றன ஆகலான் எளிவந்த கருணையால் இறைவனே வெளிப்படுவன் என்றதாம்.

இங்ஙனம் இறைவன் வெளிப்பட்ட உள்ளம் நிலை பேறு எய்துதற்குதவியது மனமாதலின் அதனை

'மன் எய்த வைத்த மனமதுதானே' என்பதால் உணர்த்தினர். இப்பொருளில் மன் - நிலைபேறு ம். இங்ஙனமன்றி மன்னுகிய சிவம் எய்தவைத்த மனம் அதுவே யாம் எனலும் ஆம். இப்பொருளில் மன், சிவத்தை உணர்த்தும். சிவம் வெளிப்பட்ட மனம் சிவமனம்.

'பின் எய்தவைத்தோர்' எனப் பாடங்கொண்டு பின்னே அடைவதற்குரிய இப்பிறப்பு எனப் பொருள் கூறுவாருமுளர். (14)

**சிவமான ஞானம் தெளியவொண் சித்தி**
**சிவமான ஞானம் தெளியவொண் முத்தி**
**சிவமான ஞானம் சிவபரத்தே ஏகச்**
**சிவமான ஞானம் சிவானந்தம் நல்குமே.** 1587

இம் - எனின், சிவஞானத்தால் சித்தியும், முத்தியும், சிவானந்தமும் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவமேயான ஞானத்தால் பாசத்தின் நீங்கிப் பரத்தைத்தெளிய, ஒளி பொருந்திய சித்திகள் உளவாம் ; அச்சிவஞானத்தால் சித்திகளைச் சதமென்று எண்ணுமல் தெளிய ஒள்ளிய முத்தியாம் ; சிவஞானத்தால சிவமாகிய பரத்தினிடத்தினிடதகில் சேர அது சிவானந்தத்தை அருளும் என்றவாறு.

உடல் உயிர் தடை இவைகளைப்பற்றி அறிந்து தெளியச் சித்திகளும், அவை கானல்நீர் போன்றவை, பரஞானத்திற்குத் தடையானவை என்றுணர முத்தியும், அம்முத்தியுலகில் சிவத்தைச்சாரச் சிவானந்தமும் சிவஞானத்தால் விளையும் என்பது கருத்து.

சிவமான ஞானம் : உயிர் தன்னுடைய மறந்து அறிதலும் உணர்த்திய அளவினதாக உணர்தலும் ஆகிய தன்மைகள் கெட்டு மணியொளிபோல என்றும் விளக்கமுறும் சிவமேயான அறிவு. நான்கு அடிகளிலும் இப்பொருளே கொள்க.

சிவஞானத்தைத் துணையாகக்கொண்டு உலகு உயிர் தடைகளை உணர. அதனால் அட்டமா சித்திகளும் ஏவலர்போல இவன்வசமாகும். அவைகளும் பர முத்திக்குத் தடையாய் இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தன்மையவாய். அகங்கார ஏதுவாதல் உடைமையின் அவற்றையும் உறுதி என்று உணராது உதற முத்தியும். முத்தியிச்சையால் இவை அனைத்தையும் விட்டுச் சிவபரம் பொருளினிடத்துச் சென்றுசேரச் சிவானந்தமும் விளையும் என முறையே உணர்த்தப்பெற்றன.

சிவஞானம் ஆசாரியன் அருளுபதேசம் இன்றி அடைய இயலாதாதலின் அதிகார இயைபு அமைக்க.

இங்ஙனமன்றித் திருவருளால் உயிர்களின் அறிவு தெளிவுபெறும் ; அறிவு தெளியச் சித்தி கூடும் ; வீடும் எய்தும்; தானே சிவமாகும் என்று உரைப்பாரு முளர். இங்ஙனம் கூறுதற்கேற்ற சொல் அமைதி உளதேல் கொள்க. சிவபரம் – சாயுச்சியம் என்பாரும் உளர் (15)

**அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றும்**
**செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்**
**மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை**
**பிறிந்தொழிந் தேன்இப் பிறவியை நானே.** *1588*

இ-ள் - எனின், பிறவி அறுதலைப் படிமுறையான் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யான் இவ்வகன்ற உலகங்கள் யாவையும் அறிந்து, அவற்றின் நிலையாமையை உணர்ந்தேன்; சிவபரமபொருளோடு செறிந்து, ஒன்றி உணர்ந்து ஓதி அவர் திருவருளையும் பெற்றேன்: அறிவு கெட்ட ஆன்மாக்களின் வாழ்க்கையை மறந்து ஒழிந்தேன்: இப்பிறவியை நீங்கினேன் என்றவாறு.

திருமூலர்பெருமான் தன்மேலிட்டுப் பாசஞானம் அகலப் பதிஞானமும், சத்திநிபாதமும் தோன்ற அதனால் அடியரல்லாதாரை அகலலும் பிறவி நீக்கமும் பெறலாம் என்பதை விளக்குகின்றார்.

அறிதல் - தன்னறிவும் நூலறிவும் கருவியாகப் பொருள்களை அறிதல். உணர்தல் - அங்ஙனம் அறிந்தவைகள் அனுபவத்திற்கு வரப் பயிலுதல். இவ்வகலிடம் முற்றும் என்றது பிரகிருதிமாயாபுவனம் முதல் சுத்தமாயாபுவனம் வரையுள்ள உலகெங்களத்தையும் அறிந்து இவை அனைத்தும் மாயேயம் என்றும் பிறவிக்கு ஏது என்றும் உணர்தல். இங்ஙனம் அகலிட மனத்தையும் அழியுந்தன்மையது என்று உணரவே நிலைத்த சிவத்திடத்துச் செறிதலும் அதனையே உணர்தலும் அதனையே ஓதுதலும் ஆகிய அனுபவங்கள் முதிர்ந்தன; அதனால் திருவருள் கைகூடிற்று என்பார் இங்ஙனம் கூறினார்.

மதி மாண்டவர் - அறிவு கெட்டவர்கள் வாழ்க்கை நிலையாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறி

வாண்மை ஆதலின் அதனைக் கடையென்று ஒதுக்கிய தோன்றி, அதன் வாசனையுமின்றிக் கெடுத்தேன் என்பார் 'மறந்து ஒழிந்தேன்' என்றார். இங்ஙனம் சோபானத்தால் பெற்ற பயனுக்குப் பயனாவது பிறவியைப் பிறிந்தொழிந்தேன் என்பதே.

இம்மந்திரம் ஆசாரியனுடைய அருள்இருந்தால்பாசஞான பசுஞானத்தின் இயல்பும், பதிஞானத்தின் உயர்வும், அதனால் பிறவி எய்தலாகும் பெரும்பயனும் அறியலாம் என்பதனைத் திருமூலர் பெருமான், தன்மேல் வைத்துக் காட்டுதலின் இதுவும் சிவகுருதரிசனத்திற்கு இயைபுடைத்தாயிற்று. (16)

**தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்**
**இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார்**
**பிரிக்கின்ற இந்தப் பிணக்கறுத் தெல்லாம்**
**கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே.** 1589

இ - எனின், இதுவும் அது.

இ - ள் : தத்தம் நிலையினின்று கெட்டு ஒழியாத படித் தாங்குகின்ற எல்லா உயிர்களுக்கும் தலைவனாகிய சிவன் உயிர்க்குயிராய் உள்ளும் உயிருக்குக் காவலாய்ப் புறம்பும் இருக்கின்ற தன்மையை ஒருசிறிதும் உலகவர் உணராராயினர். யான் இறைவனிடமிருந்து நம்மைப் பிரிக்கின்ற இந்த மாறுபாடுகளனைத்தையும் போக்கி உலகம் அனைத்தையும் தன்னகத்தொடுக்கிப் புனருற்பத்திக்காகக் கருக்கொண்டுள்ள இறைவனைக் கண்டுகொண்டேன் என்றவாறு.

இவ்வுலகவர்கள் இறையுண்மையை ஒருசிறிதும் உணரார்கள்: யான் இந்தப் பிணக்குகளை நீக்கி, அனைத்தையும் தன்னகத்து அடக்கியிருக்கின்றன இறைவனைக் கண்டுகொண்டேன் என்பது கருத்து.

தரிக்கின்ற பல் உயிர் வினைகளுக்கீடாக இறைவனுதவிய உடல் உறுப்பு உட்கரணம் புறக்கரணங்கள் ஆகிய இவற்றைச் சுமக்கின்ற பல உயிர்கள். அவை ஊர்வன முதல் எழுவகைத் தோற்றத்தை உடைய எண்பத்துநான்கு நூறுயிரம் யோனிபேதங்கள்.

இறைவன் ஒன்றாயும் உடனாயும் வேறாயும் உயிரோடு ஒன்றியிருக்குந்தன்மையை உலகவர் உணரார் என்று இரங்கிக் கூறியது " தலைவன் இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார் " என்பது.

என்றும் மீளா ஆளாய் உடைமையாய் உயிர்கள் இருந்தும் இறைவனிடமிருந்து உயிர்களைப் பிரிப்பன பாசமும் பசுவுமாகலின் அவற்றை. " பிரிக்கின்ற இந்தப் பிணக்கு " எனக் குறிப்பித்தார்.

ஈசனை அறிதற்கு இப்பிணக்குகள் இடையூறுதலின் " பிணக்கு அறுத்து " எனக் குறிப்பித்தார்.

சர்வசங்காரகாலத்து எல்லாம் தத்தம் காரணத்துள் ஒடுங்க, அதுவும் இறைவனிடம் ஒடுங்க, அவற்றின் வினைகள் உண்டாலல்லது கழியா என்ற நிலை பிறக்க, அவற்றைப் பிறப்பித்து வினைப்போகங்களை ஊட்டி உயிர்களைத் தூய்மையுறுத்துவது இறைவன் கருணையாதலின் " பிணக்கு அறுத்து எல்லாம் கருக்

கொண்ட ஈசனை " என்றார். ஈசனைக் கண்டுகொண்டேன் என்றது சிவகுருதரிசனமாதல் காண்க. (17)

## 2. திருவடிப்பேறு

சிவகுருநாதனுடைய இன்றியமையாமையை உணர்ந்து. அவர் உணர்த்திய நெறியில் நின்று தெளிந்த மாணவன் திருவருள் வடிவாகிய திருவடியைப் பெற்று உயர்ந்து உய்ந்ததை உணர்த்துவது திருவடிப்பேறு. திருவடி – திருவருள் ஆன்மா தன்முனைப்பு அடங்கிச் சிவகுருவின் திருவடியே பெறுதற்கு அரிய பேறும் என எண்ணிச் சென்னியிற் சூடுதல் பரிபாகம் முற்றிய காலத்து நிகழ்வதாகலின் இது சிவகுருதரிசனத்தின் பின் வைக்கப்பெற்றது.

**இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே**
**பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்**
**சிவந்த குருவந்து சென்னிகை வைக்க**
**உவந்த குருபதம் உள்ளத்து வந்ததே.** 1590

இம் - எனின், திருவடி மனத்தாமரையில் எழுந்தருளியாவற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவருளால் இறைவனோடு இசைந்து எழுகின்ற அன்பை ஆதாரமாகக்கொண்டு அன்பே வடிவாகக்கருணையால் தோன்றுகிற சிவபரம்பொருளை விடாது முறுகிய அன்பிற்பற்ற, ஆன்மாவின் மலமாயா கன்மங்களைக் கோபித்து, விளங்கும் சிவகுருநாதன் எழுந்தருளிவந்து தலையின்மேல் கையை வைக்க. அதனால் மலவன்மை வாடியதால், மனமகிழ்ந்த குருநாதன் திருவடி உள்ளத்து விளங்கியது என்றவாறு.

அன்பே சிவமாதலின் அன்பு தோன்றச் சிவமும் உடனெழு, அன்பு முற்றச் சிவகுருநாதன் எழுந்தருளி வந்து சென்னியில் கைவைத்தலாகிய பரிசதீட்சையைச் செய்ய, மல கன்மங்கள் நீங்க, சிவகுருவின் திருவடி உள்ளத்தே மலர்ந்தது என்பது கருத்து.

குருநாதனுடைய கோபப்பார்வை ஆன்மாவின் மல வலியைவாட்ட, இருக்கின்ற அஞ்ஞானமும் மாயா கன்மங்களும் நீங்க சிஹெறஸ்தம் செய்து சென்னியைத் தீண்ட, ஆன்மா மலத்தின் நீங்கிச் சிவம் பிரகாசிக்க இருப்பன்; அவன் உளளத்துத் திருவடி தானே வலிய வந்து புதந்தது என்பதாம்.

அன்பு உயிருக்கு இயற்கைக்குணமாயினும் அது இறைவனைக் குறித்து எழாதவண்ணம் தடுப்பது மல மாதலின் அதனை உயிர் தானே வெளிப்படுத்த இயலாது; திருவருள் துணை நின்று வெளிப்படுத்தும் ஆதலின் திருவருளோடு இசைந்து எழும் அன்பு என்றும்.

அன்பில் எழுந்தபடியே பசைந்து எழும் ஈசர். அங்ஙனம் திருவருளால் விளக்கமுற்ற அன்பிலே தோன்றியபடியே விரும்பி எழுகின்ற சிவன். அன்பும் சிவமும் இரண்டன்று ஆதலின் அன்பெழுந்தபோது அதனோடு இறைவனும் ஆன்மாவினிடத்துக் கருணை கொண்டு தோன்றுவன என்பதாம்.

பாசம் - ஒன்றை விட்டு ஒன்று பிரிய இயலாத முறுகிய அன்பு. பாசத்துள் ஏக - இங்ஙனம் இறை

வனிடத்து அன்புகொண்ட உயிர் தைலதாரை போல இடைவிடாத அன்பாகிய முதிர்ச்சியை அடைய.

சிவந்த = சினந்த. 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' ஆகலின் சினந்த குருவைச் 'சிவந்து' என்றார். குரு சினப்பது கொல்ல அல்ல, பொல்லாக் குணத்தைப் போக்க என்க. ஹ்ரீம்பட் என்ற அஸ்தர மந்திரத்தால் கணமாந்திர முரமும் சினந்து கிரியா வதியின்படி தீட்சைபெறும் சீடனை நோக்க அவனது மல மாயா கன்மங்கள் நீங்கினவாகப் பலிக்கப்படு தலும் எண்ணுக,

குருவந்து என்பதற்குக் குருவந்து நோக்க எனப் பொருள கொள்க. நோக்குதலாவது சட்சு தீட்சை

சென்னி கை வைக்க; கை சென்னிமீது வைக்க ஞானசாரியன் சிவோகம் பாவனையிலிருந்து தனது கையைச் சிவன்கையாக (சிவஹஸ்தமாக) எண்ணிச் சீடனுடைய உச்சந்தலையில் வைத்து 'இவனுடைய மலகன்மங்கள் ஒழிவனவாக' என்று எண்ண என்பதாம. இது ஹஸ்த மஸ்தக சம்யோகமாகிற ஸ்பரிசதீட்சை,

இங்ஙனம் குருநாதன் தீண்டியவுடன் தீத்தீண்டிய பொருள் தூய்மையுறுதலைப் போலச் சீடன் உயிர் தூய்மையுறும் சீடன் குருவன்றித் துணையில்லை என்று உறுதி பூணுவன்; அதனால் கருணை வடிவான அவன் திருவடி குளத்துத் தாமரை பூத்ததுபோலச் சீடன் உள்ளத்துத் தோன்றும்.

'திருபதம் உள்ளத்து வந்ததே' என்றதால் இது திருவடிப்பேறுதல் காண்க. (18)

தாடந்த போதே தலைதந்த எம்இறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு
வீடந்த மின்றியே யாள்கென விட்டருட்
பாபுன் முபுவைத்துப் பார்வந்து தந்ததே. 1591

இ - ள்: இறைவன் திருவடியைத் தந்து அஞ்ஞானத்தைப் போக்கி, கால எல்லையில்லாமல் வீட்டுலகை ஆள்க என்றமை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: அடியேனுக்குத் திருவடியை உதவிய போதே தலைமைப் பதவியும் கொடுத்த இம் இறைவனாகிய குருநாதன், அறியாமையை அறுக்கும் ஞானவாளை உதவி, அஞ்ஞானத்தின் வலிமையும் புறம்போகச் செய்து, நீ வீட்டுலகை எல்லையில்லாக் காலம் ஆள்க என அனுப்பி, திருவருள் தோன்றுதற்கு இடமாகிய திருவடியை என்னுடைய தலையில் வைத்து, பூமியில் குருவாக வந்து உதவினன் என்றவாறு.

திருவடியை மனத்துள் அருளியபோதே தலைமை யைத் தந்த எம் இறை ஞானவாள் தந்து, அஞ்ஞான வலிமையையும் போக்கி, வீட்டுலகை என்றும் ஆள்க. என உதவி, என் முடியில் அடியைச் சூட்டினன் என்பது கருத்து.

தாள் தந்தபோதே - திருவடியின்கண் நீங்காத பற்றை என்மனத்து இறைவன் உண்டாக்கிய போதே. முதல் திருமந்திரத்தில 'பதம் உள்ளத்து வந்ததே' என்றார் ஆதலின், அதனை அனுபவித்துத் தாள் தந்த

போதே என்றார் இதற்குத் திருவடி என் சென்னியின்மை சூட்டினபோதே என்று உரைகோடல் பொருந்தாது.

தலைதந்த எம் இறை : இதுபொறி புலன்களுக்கு அடிமையாய்க் கிடந்த என்னை அஞ்ஞானத்தின் நீக்கித் தலைமை தந்ததைச் சுட்டியது.

வாள் தந்து அஞ்ஞான வலியையும் தந்திட்டு எனப் பிரிக்க. தந்திட்டு - வேறுக்கித் தந்து : வாள் தந்து - ஞானவொளி உதவி. வாள் எனக் கருவியாக உருவகித்தமையின் அஞ்ஞானத்தை வாளால் ஈரப்படும் மரமாகக்கொள்க.

அந்தம் - எல்லை. ஆள்க என என்பது ஆள்கென என விகாரப்பட்டது. பார் வந்து இன் முடி அருட்பாடு வைத்துத் தந்தது எனக் கூட்டி எம் இறை எம் போல மானிடச் சட்டை தாங்கிக் குருவடிவாகப் பூமியில் எழுந்தருளிவந்து திருவருள் தோன்றுமிடமாகிய திருவடியை எனது இனிய முடியின் கண்ணே வைத்துத் தந்தான் எனப்பொருள் கொள்க. அருட்பாடு - அருள் தோன்றுதற்கு இடமானது : அது திருவடி.

அருட்பாடு இன் முடிவைத்துத் தந்ததே என்பதால் இம்மந்திரம் திருவடிப் பேற்றினை உணர்த்துவதாயிற்று. (19)

**தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு**
**ஆனசொரூபங்கள் நான்கும் அகற்றின**
**ஏனைய முத்திரை யீந்தாண்ட னன்தந்தி**
**தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே. 592**

இ-ம் - எனின், சிவன் குருவாக வந்து மலமகற்றி ஞான முத்திரையைக் கொடுத்து ஆண்டு திருவடி சூட்டியதை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சிவபெருமான் தானே குருவாகி வடிவு கொண்டு எழுந்தருளிவந்து என்னுடைய இயல்புக்ளாகிய மலம் மாயை கன்மம் தான் என்ற நான்கினை யும் நீக்கிய மற்றொரு முத்திரையைக் கொடுத்து ஆட் கொண்டான்; அவன் தன் திருவடியை முதற்கண் என் முடியிலே சூட்டி அசையாமல் நிலைபெறுத்தியது உண்மை என்றவாறு.

சிவகுருநாதன் வடிவுகொண்டு குருவாக எழுந் தருளிவந்து. சொரூபங்கள் நான்கையும் அகற்றின் ஞானமுத்திரை தந்து ஆட்கொண்டான்; முதற்கண் அவன் அடிசூட்டியது உண்மை என்பது கருத்து.

நந்தி ஆகிவந்திட்டு ஈந்து ஆண்டனன் தான் அடிசூட்டித் தாபித்தது உண்மை என முடிக்க, நந்தி சிவன்; குருவுமாம், தான் அவனுதலாவது "சிவனே குருவெனச் செப்பினன் நந்தி" என்றார் ஆகலின் சிவனே குருவாகி என்க. சொரூபத்து வருதலாவது மானிடச்சட்டைதாங்கி எம்போல எழுந்தருளுதல்.

சொரூபங்கள் நான்கும் அகற்றின் ஏனைய முத் திரை. ஞானமேயான முத்திரை எனப் பிரித்துக் கூட்டுக. சுட்டுவிரலைப் பெருவிரல் அடியில் பொருந்த மடக்கி, ஏனைய மூன்று விரல்களையும் தனியே பிரித்து நிறுத்துதலாகி ஞானமுத்திரை. இந்த ஞானமுத்தி ரையில் சிறுவிரல் முதல் நடுவிரல் ஈறான மூன்றும

முறையே மாயாமலம், கன்மமலம், ஆணவமலம் இவற்றைக் குறிப்பனவாம். சுட்டுவிரல், இந்த மூன்றோடும் கூடியிருந்து, பின்பு பிரிந்து கட்டை விரலாகிய சிவத்தோடு தன் முனைப்பற்றுத் தானற்று அடங்குதலாகிய ஆன்மசொரூபத்தைக் குறிப்பதாம்.

கட்டைவிரல் சிவமாகவே சொரூபங்கள் நான்கும் அகற்றின முத்திரை என்றது. மும்மல சொரூபங்களையும் ஆன்மசொரூபத்தையும் அகற்றின தாடலைபோல் சிவனடிக்கீழ் அடங்கியிருத்தலாகிய சிவமுத்திரையாம். இதனை ஈந்து, இதன் தத்துவத்தை உணர்ந்துய்யும் அறிவையும் உதவினன் என்பார் "ஈந்து ஆண்டனன்" என்றார்.

இப்பயனைக்கொண்டு இறைவன் தன் அடியை என் உள்ளத்தில் தாபித்ததும் முடியிற் சூட்டியதும் உண்மை என்று காரியத்தால காரணம் துணிந்தவாறு காண்க.

இங்ஙனமன்றி மலம், மாயை, கன்மம், மாயேயம் என்ற நான்கையும் அகற்றின என்பாரும் உளர். இவ்வுரைக்கு மாயேயம் என்பது உடல் உலகு முதலியவைகளாகக் கொள்க. ஏனைய முத்திரை என்றது குறிப்பு மொழி; ஞானமுத்திரையை உணர்த்திற்று.

ஈந்தாண்ட நன்னந்தி எனப் பாடம் கொண்டு பாடல் முழுதையும் ஒரே தொடராக்கி முத்திரை ஈந்து ஆண்ட நன்னந்தி அடிசூட்டித் தாபித்தது உண்மை என்று முடித்தலும் ஆம். சிறந்தது துணிக. (20)

உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்கும் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. 1593

இம் – எனின், சிவகுருநாதன் திருவடிப்பேற்றை அருளிச் சொரூப சிவத்தோடு தன்னைச் சேர்த்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : குருநாதன் உரையும் உணர்வும் சுமையும் அற்று அலையற்ற ஆழ்கடல்போலச் சிவமேயாய் விளங்கும் தன்மையை ஒழித்து, நால்வகை வாக்குகளுக்கும் ஆதியான நாதத்தைத் கடந்து விளங்குகின்ற சொரூப சிவத்தோடு என்னைக் கூட்டினன் ; அதனால் யாம் பேசாப் பெருநிலையை எய்தினேம் என்றவாறு.

உரையும், உணர்வும் உயிர்ச்சுமையாகிய ஆணவ மலமும் நீங்கி ஆழ்கடலைப்போல அமைதியாயிருக்கும் சிவமாந்தன்மையில் அனுபவம் கூடாமையின் அதனை நீக்கித் துரியாதீதத்து விளங்கும் சோதி வடிவாகிய சொரூப சிவத்தோடு என்னைக் கூட்டினன் ; சிவத்தோடு யாம் கூடியதாற்பிறந்த இன்பத்தால் பேச்சற்ற நிலை எய்தியது என்பது கருத்து.

சிவத்தோடு ஒன்றிச் சிவமேயானபோது காண்பானும், காட்சியும், காணப்படுபொருளுமாகிய வேறுபாடு இன்மையின் இன்ப உணர்வு எய்தாதாயிற்று. அந்நிலை எய்தாதவாறு பிரித்தருளிச் சிவகுருநாதன் துரியங்கடந்த சிவத்தோடு கூட்டி இன்ப நுகர்ச்சியை அறியுமாறு அருளினன். அதனால் தேனுள்

விழுந்த வண்டுபோல் சுவையை நுகர்ந்து சொக்கிப் போதலைத் தவிர அச்சுகம் இவ்வாறு இருந்ததென்று சொல்லவும் முடியாமையின் பேசாநிலை பிறந்தது என்க.

உரை - மனக்கருத்தை வெளிப்படுப்பனவாகிய சொற்கூட்டம். உணர்வு - அந்தச் சொற்கூட்டத்தைத் தோற்றுவித்தற்கு முதற்காரணமாகிய அறிவு. இவை இரண்டும் சீவபோதத்தின் விளைவும் செயலுமாகலின் உயிருக்குப் பாரமாயின. இவ்வுணர்வும் உரையும் ஆணவமலத்தின் காரியமாகிய அகங்காரத்தால் நிகழ்வன ஆதலால், உயிர் பரம் என்றது இவை இரண்டினையும் ஏற்றி வைக்கின்ற அகங்கார காரணமாகிய ஆணவமலத்தை என்க.

இம்மூன்றும் அற்றபோது உயிர் அலையற்ற கடல் போல அமைதியைப் பெறுகிறது; சிவமாகிறது. அங்ஙனம் சிவமானபோது நுகர்வானும் நுகர்ச்சியுமின்றி, நுகரப்படுபொருளே ஆதலின் அனுபவம் இன்றாகிறது. ஆதலால், ஆசாரியன் ஆன்மா அந்நிலையை எய்தாதவாறு தீர்த்து, தலைவனோடு தலைவியைச் சேர்ப்பிக்கும் தோழிபோல, துரியாதீத சிவத்தோடு ஆன்மாவைக் கூட்டி ஆனந்தானுபவி ஆக்கினான் என்பது 'சிவமாதல் தீர்த்து ... சத்தாதி நான்கும் கடந்த கரையற்ற சொரூபத்திருத்தினன்' என்ற பகுதியால் உணர்த்தப் பெற்றது, அதன் விளைவு, நுகர்ச்சியை இன்னவாறு இருந்ததெனச் சொல்லால் வரையறுத்துச் சொல்ல ஒண்ணுமையேயாம்.

சத்தாதி நான்கு ; சத்தம் - சூக்குமை, மத்திமை, பைசந்தி, வைகரியாகிய நால்வகை வாக்குகள். ஆதி -

அவைகட்கு முதலான நாதம். அதனைக் கடந்த எல்லை யற்ற சொரூபம் பரசிவம். அது துரியாதீத சிவம் எனவும் கூறப்படும். அதனோடு கூட்டப் பேரின்ப நுகர்ச்சி விளையும் என்பதாம். இருவர் கூட்டத்துப் பிறந்த சிற்றின்பத்தை உணர்ந்தாரும் உரைக்க முடியாதவாறு போல. இதனை நுகர்ந்தாருக்கும் சொல்லொணுநிலை பிறந்தது என்றார்.

இம்மந்திரத்திற்குத் திருவடிப்பேறு கிட்டியதும் பிறப்புக்கு ஏதுவாகிய உரையும் உணர்வும் அற்றன; உயிர். சிவம் என்ற வேறுபாடு அற்றன. கடல் தெளியாத நிலையில் திரையும் கடலுமென வழங்கிய நாம் தெளிந்த நிலையில் இரண்டும் ஒன்றையே குறிக்கும் என்று எண்ணுதல் போலச் சீவனும் சிவனும் வேறு எனப் பேசும் பேச்சு அற்று, பூவும் பூவின் மணமும் போல உயிரும் சிவமும் இயைந்தன. அதனால் புணர்ப்பு என்னும் பெயர்பெற்றது. நால்வகை ஓசைகளும் அதன் ஆதியாகிய நாதமும் கடந்த சிவத்தினிடம் உயிரை நுகர்வித்தான் என்று உரைப்பாருமுளர். இதற்கு ஏற்ற சொற்கிடக்கை உளதேல் இதுவும் பொருளெனக் கொள்க.

இது திருவடிப்பேற்றால் விளைந்த பயன் உணர்த்துதலின் இவ்வதிகாரத்ததாயிற்று. (21)

**குரவன் உயிர்முச் சொரூபமுங் கைக்கொண்**
**டரிய பொருமுத் திரையாகக் கொண்டு**
**பெரிய பிரானடி நந்தி பேச்சற்**
**றுநகிட என்னையங் குய்யக்கொண் டானே. 1594**

இம் – எனின், திருவடிசூட்டி உய்யக்கொண்டமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவகுருநாதன் உயிரினுடைய மூன்று வடிவங்களையும் தாம் கைப்பற்றி, உயிரைச் சங்கார முத்திரையினால் கையின்கண் அடக்கித் தன் இதயத்துள்ள பெரிய பெருமானாகிய நந்தியினது திருவடியின்கண் பேச்சற்றுக் கரைந்துபோக என்னை உய்யக் கொண்டான் என்றவாறு.

ஆசாரியன் உயிரின் மூன்று சரீரத்தையும் அகற்றி அரிய பொருளாகிய உயிரைச் சங்காரமுத்திரையால் கைக்கொண்டு, சிவனடியில்சேர்த்து, பேச்சற்று உருக என்னை ஆட்கொண்டான என்பது கருத்து.

குரவன் – ஞானாசாரியன். உயிரின் முச்சொரூபங்களான தூல, சூக்கும, காரண சரீரங்கள். ஆசாரியன் அவற்றைக் கைக்கொள்ளலாவது வினைப்போகம் காரணமாக உயிருக்கு உடல்களோடுள்ள உறவுகளை நீக்குதல். மூன்று உடல்களும் வினையின் வந்து வினைக்கு விளைவாவன ஆதலின் ஆசாரியன சிவநோக்கால் அவை அற்று ஒழிக என நோக்க அவை அகலும்.

மூன்று சொரூபமும் அற்ற உயிர் மல, மாயை கன்மங்களினின்று நீங்கியமையால் அதனை “ அரிய பொருள் ” என்றார்.

முத்திரையாகக் கொண்டு[1] சங்கார முத்திரையால் வாங்கி. என்னை பெரிய பிரான நந்தி அடி உருகிட அடியேனைப் பெரிய பெருமானாகிய சிவபெருமானது

1. இது அகோரசிவபத்ததி கருத்து.

திருவடிக்கண் உருகச் சேர்த்து என்க. சீடனுடைய உயிரைச் சங்கார முத்திரையால் வணங்கித் தன் இதயத் தாமரையில் விளங்கும் சிவத்தோடு சேர்த்து, சிவமாக்கி அதனை மீண்டும் சீடன் உடலிற்புகுவித்து, சிவமணம் நீங்காது கமழச் செய்து உய்யக்கொளளுதல் நிர்வாண தீட்சை முறை இதனை சிவ ஆத்ம சம்யோசனம் எனனும் சிவாகமங்கள். 2

சிலர் இயரபோடு ஒன்றுது, கைக்கொண்டு என் பதற்கு இரவல் பொருளை ஏற்பதுபோலத் தன்னுடைமை ஆக்குகின்றான் என்றும், அரிய பொருள் எனபதற்கு ஆவியும் உடலும் உடைமையும் எல்லாமும் காணிக்கையாகக் கொள்ளுகின்றான் என்றும் உரை கூறுவர், திறை – காணிக்கையாகும் அன்றி, திரை – காணிக்கையாகாமையானும் நிர்வாணதீட்சா விதியை ஒட்டி முத்திரைக்குப் பொருள் கூறுதலே மரபாம் எனத் தெளிக. இதன் விரிவான விதி முறையைச் சிவாக்கிர பத்ததி ஞானதீட்சா விதியிலும் காண்க.

இம்மந்திரம் 'அடி உாகிட உய்யக்கொண்டான்' என்பதால் திருவடிப்பேறு உணர்த்தியதாயிற்று. (22)

**பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே**
**மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்**
**காச்சற்ற சோதி கடன்மூன்றும் கைக்கொண்டு**
**வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே. 1595**

---

2. இதனைச் சிவாக்கிரபத்ததி பக்கம் 212-ல் சிவ சிவ ஸம்யோஜனத்தில் காண்க.

இம் - எனின், ஆட்கொண்ட ஆசாரியன் தற் போதம் அழித்து, சிவபோதம் மிகுவித்துச் சிவமாக ஆக்கினமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உரை மனம் கடந்துநின்ற பேரின்பத் தால் விளைந்த பேரானந்தத்திலே அடியேனை மாயச் செய்து சிவமாக்கி, தற்போதங் கெடுத்து, வெப்பமற்ற ஒளிப்பொருளாகிய இறைவன் முக்காரணங்களாலும் செய்யப்படும மூன்று கடன்களையும் ஏற்று, எனக்குப் புகழும் மாளச்செய்து, தன் திருவடியைத் தந்து என் உளளத்து எனறும் நிலவும என்றவாறு.

சிவானந்தத்தில் அடியேனைத் திளைக்கச் செய்து சிவமேயாக்கி, சீவத்துவம் போக்கி, திரிகரணங்களையும் தமதாகக் கொண்டு திருவடியைத் தந்து என் உயிர்க்கு உயிராய் நிலைபெறுவன சிவன் என்பது கருத்து.

நுகர்ச்சிக்காலத்து இவ்வாறு இருந்தது என்று சொல்லுதற்கு அரியதாகலின் அதனைப் 'பேச்சற்ற இன்பம்' என்ருர். அதனுல் விளைகின்ற ஆனந்தம் பேரானந்தம் எனப்பட்டது.

என்னை மாச்சு அற்ற, என்னைச் சிவமாக்கி என என்னை எனபதை ஈரிடத்தும் கூட்டுக. மாய்த்து எனற்பாலது எதுகை நோக்கி மாச்சு என்ருயிற்று. மாய்த்தலாவது தற்போதம் இழத்தலையும் தான் அறு தலையும். மீண்டும் மாள்வித்து என்றது தனனை இழப் பித்தமை கூறியது. ஆணவமல வலி குன்றிய உயிர் அஞ்ஞான அகங்கராதிகளை இழத்தலின் தன் முனைப்பு அடங்கிச்சிவமேயாம செந்நிலை பெறுகின்றதாதலின் இங்ஙனம் கூறினுர்.

காச்சு - காய்ச்சல் ; அதாவது வெப்பம். ஒளியுள்ள இடத்து அதன் குணமாகிய வெப்பமும் உடனிருக்குமாயினும் திருவருட்சோதிக்கு அஃது இல்லை என்பார் 'காச்சற்ற சோதி' என்றார்.

கடன் மூன்று - மனம் வாக்குக் காயமாகிய இம் முக்கரணங்களாலும் இயற்றப்படும் முறைமையாகிற நினைத்தலும் சொல்லுதலும் செய்தலும் ஆம். அவற்றைக் கைக்கொள்ளுதலாவது பசு பாச வினைகளில் அவற்றை இயக்காது சிவகரணமாகச் செய்தல்.

வாய்த்த புகழ் என்பது எதுகைநோக்கி வாச்சபுகழ் என்றாயிற்று. புகழும் அகங்காரத்திற்கு ஏதுவாய் ஆணவமலத்திற்கு உறுதுணை ஆதலின் அதனையும் ஒழிக்கத் திருவடியைத் தருதலும் மீண்டும் வாசனையாக வந்து மலங்கள் தாக்காதவாறு காவலன் என்றும் இருப்பதுபோல நிலைத்திருந்து காத்தலும் குருநாதன் கடமையாகவே 'புகழ் மாளத்தாள் தந்து மன்னும்' என்றார். மன் - நிலைபேறு. (23)

இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும்மெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணாதே. 1596

இ - எனின், திருவடி சூட்டிய சிவகுருநாதன் அடியேற்குக் காட்டிய உண்மைகள் உரைக்கவொண்ணாதன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : என் இதயத்திலும், கண்ணிலும், தலைமீதும் பதியச்செய்த திருவடிகளையுடைய பராபரனு

கிய குருநாதன் அடியேற்குக் கதிகளை அருளியதும், உண்மையை உணர்த்தியதும், யான் ஒழுகக்தக்க விதிகளை வகுத்ததும் ஆகிய இவற்றின் முறைகள் சொல்ல வொண்ணுதன என்றவாறு.

அடியேன் நெஞ்சிலும், கண்ணிலும், சிரத்திலும் திருவடிசூட்டிய சிவகுருநாதன் அடியேற்தரிய கதிகளையும் உண்மையையும் விதியையும் வகுத்துவைத்த முறை அடியேனுல் சொல்லுந்தரத்தினது அன்று என வியந்தவாறு.

நினைக்கப்படுவதும், காணப்படுவதும், சூடப்படுவதும் அவனது திருவடியே. திருவடி அன்றி வேறு எந்தப் பொருளும் புலனுகாமல் செய்தான் குருநாதன் என்பார் ‘ பதிவித்த பாதப்பராபரன் ’ என்ருர்.

கதி-அடையப்பெறுவதாகிய வீடு. மெய் – அடைதற்கு ஏதுவாகிய உண்மையுபதேசம். விதியாவது அவ்வுண்மைகளை உணருதற்குரிய ஒழுக்கநெறிகளை உணர்த்தும் விதிநூல்கள் ; அதாவது வேதங்கள.

எனக்கு அவன் அருளிய விதங்கள் சொல்ல ஒண்ணுத அனுபவங்கள் என்றவாரும்.

‘ பாதம் பதிவித்த பராபரன் நந்தி ’ என்றது திருவடிப்பேறு உணர்த்திற்று. (24)

**திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்**
**பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்**
**குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்**
**கருவழி வற்றிடக் கண்டுகொண் டேனே.** 1597

இம் - எனின், சிவகுருநாதனைப் பிறவி வேரறக் கண்டமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அடியேனுடைய சிரசின்மீது திருவடி சூட்டி, திருவருள் நிறைந்த கண்ணினாலே நோக்கி, எங்குமாயிருக்கும் பெரிய வடிவை அருளிய பெரிய பெருமானை, குருவடிவாகக் கண்ட தலைவனை, எமது அரசை, பிறவி வரும்வழி வற்றி உலர்ந்துபோகக் கண்டுகொண்டேன் என்றவாறு.

திருவடி சூட்டிய சிவத்தைக் குருவாகக் கண்டேன்; என் பிறவிமூலம் அற்றது என்பது கருத்து.

என் சிரத்துத் திருவடிவைத்து என்பது திருவடி தீட்சையையும், அருள்நோக்கி என்பது நயனதீட்சை யையும், பெருவடிவைத் தந்த என்பது பஞ்சாக்கர சித்தியையும் உணர்த்தின. கருவழி—பிறவிக்கு வாயிலான வினைகள். அவை வற்றிட என்க. இது திருவடிப்பேற்றால் பிறவியற்றமை கூறியது. (25)

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே. 1598

இம் - எனின், திருவடிப்பேற்றால் எய்திய பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவடியே சிந்திக்கும் திருப்பெரு சிவஞானமானது சிவமாகச் செய்யும்; சிவலோகத்தில் சேர்க்கும்; எம்மைச் சிறைப்படுத்தியுள்ள மலத்தி

னின்று மீட்கும்; திண்ணிய சித்தி முத்திகளை அருளும் என்றவாறு.

திருவடி ஞானம் சிவமாக்கி. சிவலோகம் சேர்த்து. மலமகற்றி. சித்தி முத்திகளை அருளும் என்பதாம்.

திருவடி ஞானமாவது திருவருள் வயப்பட்டுத் தன் முனைப்பின்றி இருத்தலாம். அதாவது, திருவருளின் வியாபகத்தில் தான் வியாப்பியமாய்த் தனக்கு ஒரு செயலும் இன்றி இறைவன் செயலே செயலாக அருட் கண்ணால் கண்டிருத்தல்.

சிவமாக்குவிக்கும் — சீவச்செயலும் சீவபோதமும் அகற்றிச் சிவபோதமும் சிவச்செயலுமேயாகச் செய்யும் என்பதாம். சிவலோகம் — வீட்டுலகம். சிறை மலம் - ஆன்ம வியாபகத்தைச் சிறைப்படுத்தி விளங்க விடாமல் செய்கின்றபாசம். இது நீங்கத் திருவடிப்பேறு கிட்டும் என்பதனை.

"இறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து - சிறைவிட்(டு)
அலைகடலில் சென்றடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவில் அரன் பாதத்தை உற்று"

என்னும் சிவஞானபோத வெண்பாவான் உணர்க. இது திருவடிஞானத்தால் பெறும் பயனை உணர்த்தியதாதலின் அதிகார இயைபு விளங்குதல் காண்க. (26)

மேல்வைத்த வாறுசெய் யார்விடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னி படரொளி வானவன்
தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. 1599

இம் - எனின், திருவடிப்பேறு எய்தாதாயின் உளவாம் தீமையை உணர்த்துதல் வாயிலாக அதன் இன்றியமையாமையை வலியுறுத்தல் நுதலிற்று.

இ - ள் ; குருநாதன் மேற்குறித்தவாறு செய்யா விடின் மேலைநாள் ஈட்டிய வினைகள், அறியாமையான் மயங்கிய மனத்தை மாயை வடிவாகச் செய்துவிடும்; ஆகையால், பால்போலும் பிறையைச்சூடிய முடியை யுடைய ஒளிவடிவான இறைவன் தான் திருவடியைச் சூட்டியதோடு திருவடியைப் பதியவும் வைத்தான் என்றவாறு.

உயிர்கள் மீட்டும் மாயையுட்பட்டு மயங்காத வாறு திருவடியைத் தந்ததோடமையாது என்றும் நீங்காத வண்ணமும் செய்தான் குருநாதன் என்பது கருத்து.

மேல்வைத்தவாறு என்றது, முன் மந்திரங்களில் கூறியவண்ணம் இதயத்தும் நாட்டத்தும் சிரத்தும் திருவடிசூட்டியதும், கதி உண்மை விதிகளை உணர்த்தியதும், அருட்கண்ணோக்கம் செய்ததும் முதலான நிகழ்ச்சிகள். அங்ஙனம செய்யாவிடின், ஒளி நீங்க இருள்புகுந்தாற்போல என்னை வினைவந்து மூடிவிடும் ஆதலின் 'மேல்வினை மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்' என்றார். மேல் வினை - ஆகாமிய வினை. மால் வைதத சிந்தை - மலத்தால் மயங்கிய மனம்.

பால்: உவமை ஆகுபெயர்: பால்போலும் பிறையை உணர்த்திற்று தாள் வைத்தவாறு தரிப்பித்தவாறே - தாள் சூட்டியபடியே தரிக்கவும்

செய்தான். அதனுல் வினைகள் பற்ருவாயின; பிறவியற்றது என்றதாம்.

இது தாள் வைத்தவாற்றையும். அதனுல் பெற்ற பயனையும் உணர்த்துதலின் திருவடிப் பேறினதாதல் காண்க. (27)

கழலார் கமலத் திருவடி என்னும்
நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா
அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானும்
குழல்சேரும் என்னுயிர்க் கூடுங் குலைத்ததே. 1600

இம் - எனின், திருவடிநிழலைச் சேரப்பெற்றமையின் விளைவு இதுவாம் எனல் நுதலிற்று.

இ - ள் : வீரக்கழல் பொருந்திய செந்தாமரை போலும் திருவடியாகிய நிழலைச் சேரப்பெற்றேன்; திரிவிக்கிரம அவதாரம் எடுத்த திருமாலாலும் அறியப் பெருத முதற்கடவுளாகிய சிவபெருமானும் தீயுள் அழல்போல என்னுள் பொருந்தும்; அதனுல் பொள்ளல் பல சேர்ந்த என் உயிர் உறையுங் கூடாகிய உடலும் தன்னிலை கெட்டது என்றவாறு.

திருவடி நீழலைச் சேரப்பெற்றமையினுலே பரசிவம் அங்கியுட்சூடுபோல என்னுள் சேர்ந்தது; அதனுல் பொள்ளல்கூடு போயிற்று என்பது கருத்து.

கழல் - ஆடவர்கள் அணியும் வீரத்திற்கு உரிய அடையாள அணி. திருவடி செந்தாமரை மலர்போல நிறமும் மணமும் அழகும் உடையதாய் இன்பத்தேன் ஊறுவது ஆதலின் 'கமலத்திருவடி' என உவமிக்கப்

பெற்றது. வேறு எவராலும் எதனாலும் நீக்க முடியாத ஆணவமலத்தின் காரியமாகிய அறியாமையைவென்று உயிருக்கு ஒளிதரும் வள்ளன்மையால் 'கழலார் திருவடி' என்றார். சுடுவெயிலில் கடுகி நெறிநடந்தார்க்கு இன்பஞ் செய்யும் நிழல் போல, பிறவிப் பாதையில் வினைவெயில் தாக்க, அறியாமை மோகம் மாற்சரியம் முதலான பரல் குத்த, அவதிப்படுகின்ற உயிர்களுக்கு ஆறுதலளிக்கும் இடமாதலின், திருவடியை நிழலாக உருவகித்தார். இங்ஙனம் விரித்துக் கொள்க.

சேரப்பெற்றேன் என்றது திருவடி எய்தப்பெற்றேன், 'யான் பெற்றது யார் பெறுகிற்பார்' என்பது போலச் சேர்தற்கு அருமையும் பெரிது முயன்று சேர்ந்ததால் விளைந்த செம்மாப்பும் தோன்றநின்றன.

எல்லாவற்றிற்கும் முதற்காரணமாகிய மாயையைக் காரியப்படுத்தும் முதற்கர்த்தா ஆகலின் இறைவனை 'ஆதிப்பிரான்' என்றார்.

இருந்தநிலையிலேயே எல்லாவற்றையும் எட்டிப் பார்த்து அறியும் பெருமையன் என்பார் திருமாலை 'நெடுமால்' என்றார். அங்ஙனம் அறியும் திருமாலும் அங்கியாய்த் தோன்றிய சிவனை அறியாது மயங்கினான் என்பார் 'நெடுமால் அறியா அங்கி' என்றார்.

அங்கி - தீ; அழல் — வெப்பம். தீயுள் வெப்பம் போல இறைவன் குணகுணி சம்பந்தமாய் வெளிப்பட்டு உயிர்க்குஉயிராக 'இருந்தலை உணர்த்த' ஆதிப்பிரானும் நெடுமால் அறியா அங்கியுள் அழல்சேரும், என்றார். அழல்போற்சேரும் எனப்பொருள் விரிக்க.

குழல்சேரும் என் உயிர்க்கூடு - காது மூக்கு வாய் கழிவாயில்கள் முதலான ஒன்பது குழல்களைப் பொருந்திய உடல். உடல் உயிராகிய பறவைக்குக் கூடுபோல்வதாகலின், ' உயிர்க்கூடு ' எனப்பட்டது. "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே, உடம்போடுயிரிடை நட்பு" என்னும் வள்ளுவர் வாக்கும் உயிரைப் புள்ளாகவும், உடலைக் கூடாகவும் உருவகித்திருத்தல் காண்க. உடல் குலைதலாவது தீயுள் வெப்பம்போல உயிருள் ஆதிப்பிரான் ஒன்றியவழி உடம்போடு உயிரிடை நட்பு உள்ளவாறுணரப்பட்டு ஒழிக்கப்படுதல் ஆதிப்பிரான் கூடுங்குலைத்தது என முடிக்க.

குழல் சேரும் இன் உயிர்க்கூடு எனவும் பாடம். ஆன்மாவாகிய தனக்கும் உடலுக்கும் உள்ள தன்மை தற்கிழமையதாயினும் குலைத்ததே என்பதால் வேறுதல் விளக்கப்பட்டது.

குலைந்ததே எனப் பாடம் கொண்டு கூட்டின் வினையாக்கலும் ஒன்று.

ஆதிப்பிரானும் குழல்சேரும் மின்னும் உயிர்க் கூடுகுலைத்ததே எனக் கொண்டுகூட்டிச் சிவனும் உமையும் உடற்பற்றை நீக்கி உதவினர் என்று உரை கூறுவாரும் உளர். இவ்வுரையுள் அழல்சேருமங்கியுள் என்பதை ஆதிப் பிரானுக்கும் உமாதேவிக்கும் அடைமொழி யாக்கி, அழலை அடிமையாகவும், அங்கியைச் சிவமாகவும் கொண்டு அவ்விருவரும, யாம் பெரியம் என்ற ஆணவச்செருக்கு அற்றார்க்கன்றி வேறு யார்க்கும் வெளிப்படார்கள் என்பது உணர்த்தப் பெறுதல் காண்க.

**முடிமன்ன ராகின்மூ வுலகம தாள்வர்**
**அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்**
**முடிமன்ன ராய்நின்ற தேவர்கள் ஈசன்**
**குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் ருரே. 1601**

இ-ம் – எனின், தேவர்கள் அனைவரும் ஈசனது அடிமைகள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முடியணிந்த மன்னர்களாயின் மூன்று உலகினையும் ஒருகுடைக்கீழ் ஆளுவர்; "சிவன் திருவடியைச் சிரத்தில் சூட்டிய சிவநெறித் தொண்டர்களாகிய மன்னர்கள் பெறும் இன்பத்திற்கு ஓர் அளவில்லையாம். முடிமன்னராயிருந்த தேவர்களும் இறைவனுக்கு வழி வழியாக வரும் அன்புநெறிக் குடிகளுக்கு அரசாய்க் குற்றம் நீங்கி நின்றோர் ஆவர் என்றவாறு.

இது முடிமன்னராய் மூவுலகம் ஆள்வர் எய்தும் இன்பத்தைக்காட்டிலும் அடிமன்னராயிருந்து எய்தும் இன்பத்திற்த அளவில்லை என்பது உணர்த்தியவாறு.

நிலவுலகத்து முடிசூடும் மன்னர்களாகின் மூவுலகங்கள்மட்டும் ஆள்வர். இறைவனுடைய திருவடியில் நிலைபெற்ற உள்ளத்தாராகிய அடியார்கள் எய்தும் இன்பத்திற்த ஓர் அளவே இல்லையாம். ஆராயின், முடிமன்னராய் நின்ற தேவர்களும் ஈசனுக்குக்குடிகள் ஆவர். அன்றியும், ஈசனுக்கு ஏவல் புரிபவர்களாய் குற்றமற்றுத் தத்தம் பதவிகளில் நிலைபெற்றோராவர் என்பதாம்.

மூவுலகம் என்பது இத்துணையது என்று வரையறுத்து உணரப்படுவதாகிய பிரபஞ்சம். தனி முடி கவித்து ஆளும் அரசு இன்பம் தருவதாயினும் கால

வரையறையும் வினைப்பெருக்கமும் உடையன ஆகலின் அவற்றால் சிறிதும் இன்பம் இல்லை. காளிதாசனும் ஆளும் இன்பம் என்பது குடையைத் தானே தூக்கிக் கொண்டு. அதன் நிழலில் செல்வது போலும் எனல் காண்க.

அடியார்கள் வீடும் வேண்டா விறலினர் ஆகலின் அவர்களை "மன்னர்" என்றார். அடிமன்னர் என்பது திருவடியை மனத்துள் நிலைபெறச் செய்தவர் என்ற காரணம்பற்றி வந்தபெயர். மன்றுளார் அடியார்க்கு என்றும் இன்பம் பெருகுமாதலின் அவர்கள் அடையும் இன்பத்திற்கு அளவில்லை எனப்பட்டது.

முடிமன்னராய் நின்ற தேவர்கள் என்றது நிலவுலகத்தில் மன்னராயிருந்தவர்கள் காமிய கன்மங்களைச் செய்து தேவர்களாவர். ஆயினும், அவர்கள் இறைவனுக்கு என்றும் நீங்கா அடிமையான குடிகளாய் நிலைபெறுதலை உடையராவர் ஆதலின் "ஈசன் குடிமன்னராய்" என்றார். ஈண்டும் மன்னர் என்பதை நிலைபெறுதலை உடையவர்களென வினைப்பெயராகவே கொள்க.

குற்றம் — உயிர்குற்றமாகிற மலமாயை கன்மங்கள் தேவர்கள் தமமைத் தேவரென்று உணராது ஈசன்குடி என எண்ணின் கன்மமும் அஞ்ஞானமும் அகன்று மலவலி குன்றுவர் ஆதலின் "குற்றமற்று நின்றார்" என்றார்.

இதற்குப்பின் இரண்டடிகளுக்கு முடிமன்னர்கள் தேவராவர்; ஈசன் குடிமன்னராகிய அடியவர்கள் திருவடி இன்பத்தை இம்மையே நுகர்வர்; அங்ஙனம்.

குடியாக வாழும் அடியார் மும்மலக்குற்றம் அற்றுநின்ருர்கள்: அதனல் திருவடி இன்பத்துத் திகழ்வரெனத் தமக்கு வேண்டியவாறே சொற்களைப் பெய்து உரைப்பாருமுளர். திருமந்திரச் சொல்லமைப்பு இத்துணையும் ஏற்குமாயின் அதனையும் ஒரு பொருளாகக் கொள்க.

இதுவும் அடியார்கள் எய்தும் இன்பத்திற்கு ஓர் எல்லை இல்லையாகவே தேவர்களும் ஈசன்குடிகளாய்த் திருவடிப்பேறு எய்திக் குற்றமறுவர் என்பது உணர்த்துதலின் இவ்வதிகாரத்திற்கு ஏற்றதாதல் காண்க. ( 29 )

**வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்**
**பொய்த்தே எரியும் புலன்வழி போகாமல்**
**எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு**
**மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே.**

இ-ம் - எனின், அழியுந்தன்மைத்தாகிய புலன் வழி போகாமல் உண்மை ஞானத்தை உணர்ந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அடியேன் பொய்யாக வெதுப்பி வாட்டும் புலன் வழிச் செல்லாமல் திருவடிகளை என் மனத்தினுள்ளே என்றும் நிலைபெறும்வண்ணம் வைத்துக் கொண்டேன்; வினைகளால் இளைத்தவனுகிய யான் பிறந்திறந்து உழலுதற்கு ஏதுவாகிய இருவினைகளை மாற்றி வேதத்தின் முடிவில் விளங்குவதாகிய உண்மை ஆனந்தத்தை அறிந்துகொண்டேன் என்றவாறு.

திருவடிக்கண் மனத்தை என்றும் வைத்தமையால் வேதசிரத்தில் விளங்குவதாகிய சச்சிதானந்த சொரூபத்தை அறிந்து அனுபவித்தேன் என்ருர் என்பது கருத்து.

பொறிகளைக் கருவியாகக்கொண்டு புலன்களைப் பற்றி நுகரும் இன்பங்கள் கானல்நீர்போலத் தோன்றி மறைவன ஆகலானும், என்றும் தீப்போலக் கனற்றுவ ஆகலானும் " பொய்த்தே எரியும் புலன் " என அடை கொடுத்துப் புலனியல்பைப் புலப்படுத்தினர். புலன் வழி போகாமல் என்றது திருவடிக்கண் ஈடுபடுத்த இடையூறனவற்றை நீக்கியவாறு தெரிவித்தது.

நோய் நீங்கியவழி உடல் வலியுறுதல் போலப் புலன்வழியே புந்தி போகாதபோது மனத்துள் திருவடிகள் எழுந்தருளுவ ஆயின. அதனால் " அடிகள் மனத்தினுள்ளே வைத்தேன் " என்கின்றார். அடிக்கண் வைத்தேன் எனப் பாடங்கொண்டு திருவடி ஞானத்தை என்பாரும் உளர். அவர் கண் என்பதற்கு ஞானம் எனப் பொருள் காண்பர். அதிகாரம் திருவடிப்பேறு ஆதலின் அடிகள் வைத்தேன் என்றலே சிறப்புடைத்தாதல் தெளிக.

தமக்கு உரிய பொருள் கிடையாதவழி காமத்தால் எரித்தலும், கிடைத்தவழி போகத்தால் போகக்குதலும் உடைமையின் " எரியும் புலன் " என்றார்.

" எய்ப்பு இளைப்பாகும் " ஆதலின் புலன்வழியே அலைந்து போதிய ஊதியம் பெருமையால் இளைத்தமையை " எய்த்தேன் " என்பதால் குறிப்பித்தார். எய்த்தேன் – இளைத்தவனாகிய யான் எனத் தன்மை ஒருமை வினையால் அணையும் பெயராகப் பொருள் கொண்டு கருத்தாவாக்குக.

மாற்று – முறிக்கும் மருந்து. சித்த மருத்துவத்துள் மருந்தினுள் ஒன்றற்கொன்று பகையும் நட்புமாதலின்

பகையைக் கொடுக்க மருந்தின் வன்மை மாறுமாத லின் அதற்கு மாற்றிடுதல் எனப்பெயர் வழங்குப. இரு வினை மாற்றிட்டு என்றது இருவினைகளாகிய விடத் திற்கு மாற்றாகச் சிவஞானம் என்ற மாற்றினை இட்டு என்க. மாற்றிட்டு என்ற வழக்கால் இருவினைகளை விட மாகவும் சிவஞானத்தை மாற்று மருந்தாகவும் கொள்க.

வேதத்தின் அந்தம் - வேதாந்தம்; வேதமுடி வாகிய ஞானபாதங்களை உணர்த்தும் உபநிடதங்கள். உபநிடதங்களின் உண்மையான அனுபவஞானம் தன் ஆனந்தம். அதனை அனுபவித்தேன் என்பார் 'அவ்வேதத்தின் அந்தமே மெய்த்தேன் அறிந்தேன்' என்றார்.

அடிகள் மனத்தினுள்ளே வைத்தேன் என்பதால் இம்மந்திரம் திருவடிப்பேறதாயிற்று. (30)

**அடிசார லாம்அண்ணல் பாதம் இரண்டும்**
**முடிசார வைத்தனர் முன்னை முனிவர்**
**படிசார்ந்த இன்பம் பழவடி வெள்ளக்**
**குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. 1603**

இம் - எனின், பழங்குடி மக்களாகிய அடியவர் கொள்கை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பண்டைக்காலத்து முனிவர்கள் சிவன் திருவடியைச் சார்தற்கு ஏதுவாகத்தன் ஆசாரியன் திருவடிகளிரண்டையும் தம்முடிமீது பொருந்தவைத் தனர். இதுவே சோபான முறையில் வந்தடைந்த இன்பத்தோடு கூடிய பழமையான அடியார்களாகிய

வெள்ளமென்னும் பேரண்ணை உடைய குடிமக்கள் சாருகின்ற நெறியே கூடி நிற்பவரது கொள்கையாம் என்றவாறு.

முனிவர்கள் திருவடியைச் சாரவேண்டும் என்ற பற்றுள்ளத்துடன் பாதமிரண்டையும் தலையிற் சூடினர்; இதுதான் அடியார் நெறியை அணைந்து நிற்பவர் கொள்கை என்பது கருத்து.

அடிசாரலாம் : தடையாயிருந்த முக்குற்றங்களும் நீங்கத் திருவருளே வடிவான திருவடியைச் சார்தல் இயலுவது ஒன்றும் என்று குருவின் திருவடியை முடிமேல் பொருந்த வைத்தனர் என்பது, முன்இரண்டடிகளால் உணர்த்தப்பெறுகின்றது.

படிசார்ந்த இன்பம் : சோபானக் கிரமத்தில் நின்று அடையப்படுவதாகிய பேரின்பம். அந்த இன்பத்தை எதிர்நோக்கும் மெய்யுணர்வு பல பிறவிகளில் சிவனடியார்களாக இருந்தவர்களுக்கேயன்றி எய்தலாகாமையின் 'இன்பப் பழவடிக்குடி' என்றார்.

வெள்ளம் - மிகுதி. குடிசார் நெறியாவது அடியார்க்கு அடியனாகும் சன்மார்க்கநெறி. அதனைக் கூடி நிற்பவர் கொள்கை அண்ணல் பாதம் இரண்டும் முடி சாரவைத்தல் ஆகும் என முற்பகுதியின் கருத்தைத் தந்து நயங்கண்டு மகிழ்க.

அடியார் கொள்கை திருவடிகள் இரண்டையும் சிரத்தின்மீது அணிதலாம் என்றலின் இம்மந்திரம் திருவடிப்பேறதாயிற்று. (31)

**மந்திர மாவதும் மாமருந் தாவதும்**
**தந்திர மாவதும் தானங்க ளாவதும்**
**சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்**
**எந்தை பிரான்றன் இணையடி தானே.** *(1604)*

இ-ட் - எனின், மந்திரம் முதலிய அனைத்துமாய் விளங்குவது சிவன் திருவடியே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மந்திரம், மருந்து, தந்திரம், தானம், சுந்தரம், தூய்நெறி இவையனைத்துமாவன எம் தந்தையாகிய சிவபெருமானுடைய திருவடித் துணைகளே என்றவாறு.

மந்திரம் முதலிய அனைத்துமாவன திருவடியிணைகளே என்பது கருத்து.

மந்திரம் - நினைப்பவனைக் காப்பது, திருவடிகளும் என்றும் இடையறுது நினைப்பவர்களைக் காத்தலின் 'மந்திரமாவது இணையடி தானே' என்றார்.

மருந்து: பிணி தடுத்து ஊக்கமும் உறுதியும் உதவுவது. திருவடியும் பிறவிப் பிணியைத் தீர்த்து அறியாமையாகிய மயக்கத்தை அகற்றி ஆனந்தமாகிய உறுதியை உதவலின் 'மாமருந்தாவதும் இணையடி தானே' என்றார்

தந்திரம் என்றது விரிந்து நின்று காப்பது எனும் பொருளது. இது இறைவன் வாக்காய். விதிமறைகளை விளக்குவதாய் திருவடிக்குச் செல்லும் உபாயங்களை உணர்த்துவதாய் நிற்றலின் 'தந்திரமாவதும் இணையடி தானே' என்றார்.

தானமாவது அறவழி ஈட்டிய பொருளைச் சற்பாத்திரமாய் உள்ளவர்களுக்குத் தகுதி அறிந்து மனமகிழக் கொடுப்பது. அதனால் விளையும் பயன் சிவஞானப் பேருகும். இதனை முன்னும விளக்கினும். ஆகவே 'தானங்களாவதும் இணையடி' என்றார்.

சுந்தரம் : நஷ்டதிரவிய லாபமும் அழகும் ஆம். ஒன்றுயும் உடனுயும் இருந்தும் மலமறைப்பால் அறியப்படாமையால் நஷ்டமான அழகியபொருள் சிவன் திருவடிகளே ஆதலின் 'சுந்தரமாவதும் இணையடி' என்றார்.

நால்வகை நெறிகளுள் மிகத் தூய்மையானதாய் இறைவனோடு என்றும் ஒன்றியே இருக்கச் செய்யும் உணர்வரிய மெய்ஞ்ஞானத்தைத் 'தூய்நெறி' என்றார். தூய்நெறி பேரின்பப் பேற்றினையன்றி வேறொன்றினையும் அளியாதாலின் 'தூய்நெறியாவதும் இணையடி தானே' என்றார்.

அடிக்கும் தனக்கும் உள்ள அநாதிநித்திய சம்பந்தத்தை இறைவன்மேலிட்டு எனக்கு எந்தையும் பிரானும் ஆவான் என்பார் 'எந்தை பிரான்' என்றார்.

எந்தை ; என் தந்தை என்பதன் மரூஉ. பிரான் வள்ளன்மை உடையவன். இணையடி - இரண்டான திருவடிகள்.

இம்மந்திரத்தால் சிவன் திருவடியே எல்லாமாதலை உணர்த்துதலின் இது திருவடிப்பேறதாயிற்று. (32)

## 3. ஞாதுரு ஞான ஞேயம்

திருவருள் மயமான திருவடிப்பேற்றின் தன்மையும் பயனும் தன் அனுபவநிலையிலே வைத்து உணர்த்திய திருமூலதேவநாயனர் அறிவானும் அறிவும் அறியப்படு பொருளும் ஆகிய திரிபுடி நிலையை உணர்த்திய எடுத்துக் கொண்டார்.

ஞாதுரு ஞான ஞேயமாவது மலபரிபாகமுற்ற அறிபவனுகிய ஆன்மா சிவத்துவ வியாபகம் பெற்ற அறிவால் அதாவது சிவஞானத்தால், ஆனந்தமே வடிவான அறியப்படுபொருளை அறிந்து. அறிபவன் நான் என்ற முனைப்பும் அறிவாகிய கருவியும் ஆகிய அனைத்தும் அறியப்படு பொருளாயிருக்கின்ற அனுபவ நிலையை அறிவிப்பதாம். இங்ஙனம் அறியவே வேற்றுமை அகன்று அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனுகி நிற்கும் நிலை சித்திக்கும். அதிகார முறையையும் இதனுனே விளங்கும்.

**நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்**
**பாங்கான பாசம் படரா படரினும்**
**ஆங்கார நீங்கி யதனிலை நிற்கவே**
**நீங்கா அமுத நிலைபெற லாமே.** 1605

இ-ள் - எனின், ஞேயத்து அழுந்துதலால் பாச நீக்கமும் பேரின்பநிலையும் பெறலாமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : என்றும் நீங்கப்பெருத சிவானந்தமாகின்ற அறியப்படுபொருளிடம் அழுந்திநிற்க, அநாதியே ஆன்மாவின் பக்கமான ஆணவமலம் ஆன்மாவின்

அறிவை மறைக்காது. அங்ஙனம் மறைப்பினும் அகங்காரங்கெட்டு அச்சிவானந்த அனுபவ நிலையில் போராதே நிற்க, என்றும் நீங்கப்பெறாத பேரின்பமாகிற அமுதத்தில் நிலைபெறலாம் என்றவாறு.

சிவானந்தத்தில், நிலைத்து நிற்க ஆணவமலவலி குன்றி அகங்காரம் அகன்று தூய்மையாய் அமுதநிலை அடையலாம் என்பது கருத்து.

சிவானந்தம், ஆன்மாவால் அனுபவிக்கப்படுவதாய், சிவனுக்கே உரியதாய், பூவினில் கந்தம் பொருந்தியவாறு போல் சீவனுக்குள்ளே தோன்றும் சிவமணம். இதுபற்றிய தடை விடைகளையும், அதன் உண்மை இயல்பையும் பௌட்கராகமம் பிரமாணப்படலத்தானும், அதற்கு உமாபதிசிவாசாரியார் செய்த விருத்தியாயினும் அறிக.

சிவானந்தம் : அரும்பு போதாகிப் பூக்காதபோது மணத்தை உடைதாயினும் போதாகிப் பூத்தபின்பே அது வெளிப்படுமாறு போல, பெத்தநிலையில் சிவானந்தம் காயருப்பாய், அரும்பாய், அலரும் பருவத்தாய் உடன் தோன்றாது நின்றும் பின்பு முழு வளர்ச்சியும் பருவமும் எய்தி மலர்ந்த மலரிடம் மணம்போல வெளிப்பட்டு நின்றும் உயிரோடு ஒன்றியிருத்தலின் ' நீங்காச் சிவானந்தம் ' என்றார்.

ஞேயம் – அறியப்படுபொருள். அறியப்படுபொருளின் தன்மை. அறிகருவியாகிய இந்திரியங்களால் எற்றத் தாழ்வும் விளக்கமும் விளக்கமின்மையும் உடையன ஆகலான் அதனை இடைவிடாது பயில்

வார்க்கே பாசநீக்கம் அடையும் என்ற உண்மையை வெளிப்படுப்பார் 'நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்பாங்கான பாசம் படரா ; அமுதநிலை பெறலாம்'[2] என்று பயனும் பயனுக்குப் பயனும் அறிவித்தவாறும்.

பாசம் - அநாதியே ஆன்மாவைப்பற்றி நிற்பதாகிய மூலமலம். அந்தக்கரணங்களின் தலைவனாகிய மனம், பாசத்தொடு சார்ந்தவழி பாசமாயே மறைத்தும், ஞேயத்தில் நிலை பெற்றுநின்றவழி அப்பாசத்தினின்று நீங்கி ஞேயமேயாயும் விளங்கும். அப்போது மூல மலத்தின் காரியமாகிய அகங்காரம் நீங்கி அமுத நிலையாகிய பேராவின்பப் பெருவாழ்வை எய்தலாம் என்பது உணர்த்தியவாறு.

ஞாதா ஞேயத்தில் நிலைபெற்றவழி பாசம் வலி ஒடுங்குதலின் படரா ; ஆயினும், வாசனாமலம் தாக்க ஒருகால் படருதலும் உளதாம் ஆதலின் 'படரினும்' என்றார்.

ஆங்காரம் : புத்தி தத்துவத்தால் விடயத்தை இஃது இன்னது என நிச்சயிப்பேன் என்று ஒருப்பட்டு எழுதற்குக் கருவியாய், இராசதகுணம் மிக்க ஏனைய இரண்டு குணங்களும் குறைந்து தோன்றுவது அது சாத்வீகம் மிகுந்து ஏனை இரண்டும் குறைந்த தைசத ஆங்காரமும், இராசதம் மிக்கு ஏனையிரண்டும் குறைந்த வைகாரிகாகங்காரமும், தாமதம் மிக்கு ஏனை இரண்டும் குறைந்த பூதாதிகாகங்காரமும் என மூவகையாம். இம்மூன்றுமே ஞேயத்து அழுந்தியவழி நீங்குமாதலின் 'ஆங்காரம் நீங்கி' என்றார்.

அதன் நிலை நிற்கவே - ஞேயமாகிய சிவானந்த அனுபவத்தில் நிலை நிற்க. நீங்கா அமுதநிலை - தன்னை அடைந்தாரை என்றும் பிரியவிடாத சாலாநிலையாகிய வீடு. அதனைப் பெறலாம் என்றது எளிமையாகும் என்பது தோன்ற நின்றது.

இம்மந்திரம் ஞாதா ஞேயத்தின் நிற்பதால் விளையும் பாசநீக்கமும் சிவப்பேறும் உணர்த்துதலின் இவ்வதிகாரத் திற்கு இயைபுடைத்தாதல் காண்க. (33)

**ஞேயத்தே நின்றோர்க்கு ஞாளுதி நின்றிடும்**
**ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகும்**
**ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவர்**
**ஆயத்தில் நின்ற அறிவறி வாரே.** 1606

இம் - எனின், ஞேயத்தில் நிலைபெற்றோர்களுக்கு விளையும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அறியப்படுபொருளாகிய சிவானந்தத் தில் நிலைத்துநின்ற பேர்க்கு ஞானத்தை முதலாகக் கொண்ட நாலுநிலைகள் விளையும். அங்ஙனம் ஞேயத்தில் நிலைபெற்ற ஞாதா ஞேயமே ஆதலாகிய வீட்டின்பத்தை எய்தும். ஞேயப் பொருளாகிய சிவத்திற்கு நேசமாகிய சத்தியை நேசித்த பேர்கள், இக்கூட்டத்தால் விளைந்த நிலைபெற்ற மெய்ஞ்ஞானத்தை அறிந்தவர்கள் ஆவார்கள் என்றவாறு.

ஞேயத்தில் நின்றால் ஞானாதிகளும், வீடும் மெய்ஞ் ஞானமும் எளிதின் எய்தலாம் என்பது கருத்து.

ஞேயம் : அறியப்படுபொருளாகிய சிவானந்தம். அதில் நிலைபெறுதலாவது வெயிலொளியில் அடங்கிய

விளக்கின் ஒளிபோல உயிர் தானற்று ஆனந்தமே வடிவாய் நிற்றல், அங்ஙனம் நின்றார் எய்தும் பயனுவன ஞானமும் அதன் பயனாகிய சிவானுபவமும் ஆம்.

ஞானாதி : ஞானத்தில் ஞானமும், ஞானத்தில் யோகமும், ஞானத்தில் கிரியையும், ஞானத்தில் சரியையுமாகிய இவைகளாம். ஞானாதி - ஞானத்தை ஆதியாக உடைய இவைகள் என்க. இந்நான்கும் நிலைபெறின் எல்லாம் சிவச்செயலாவதன்றிச் சீவச்செயலாகாமை தெளிக.

ஞேயத்தின் ஞாதுரு - முற்கூறியவண்ணம் ஞேயத்தில் நிலைபெற்ற அறிபவனாகிய ஆன்மா. ஞேயத்தில் வீடாதம் - ஞேயத்தில் அழுந்தி அனுபவித்தலன்றி வேறொன்றும் அறியாது கிடத்தலாகிய வீட்டின்பை எய்தும் என்பது. வீடு என்பது பற்றறுதியால் உண்மைஞானத்தைப் பெற்று அதுவதுவாயழுந்தி நிற்பதாதலின் அதனை 'வீடு' என்றார்.

ஞேயத்தின் ஞேயத்தை - அறியப்படுபொருளாகிய சிவத்திற்கு நேசத்ததாகிய சத்தியை. ஞேயம் — நேயம் — நேசம் - அன்பு. இவ்வாறு இந்தச் சொல் போலி எழுத்தினைப் பெற்று, நீங்காத அன்பை உணர்த்தி நின்றது. சிவத்தால் நேசிக்கப்படும் பொருள் அங்கியில் சூடுபோல்வதாகிய சிவசத்தியன்றி வேறொன்று இன்மையின் அதனை 'ஞேயத்தின் ஞேயம்' எனறார். ஞேயமாகிய சிவத்தால் அறியப்படும் பொருளை எல்லுமாம். அதனிடம், ஞேயத்தை உற்றவர் – அன்புபூண்டவர்கள் என்க.

... ஆயத்தில் நின்ற அறிவு - கூட்டத்தின் நின்ற அறிவு. கூட்டம் - சேர்க்கை. அஃதாவது, ஞாதா ஞேயத்தோடு இணைபிரியாது இருத்தலால் விளைவதா கிய மெய்ஞ்ஞானம். அது பசு பாசங்களாகிய பிறவற்றைச் சார்ந்துள்ளபோது தோன்றாது, சிவத்தைச் சார்ந்தவழியே உளதாவது ஆதலின் அதனை 'ஆயத்தில் நின்ற அறிவு' என்றார். அவ்வறிவே சிவத்தை உள்ளவாறு அறிதற்கு உறுதுணையாம் என்பதனை 'அறிவு அறிவாரே' என்பதால உரைத்தார்.

சிலர் திருவடிப்பேற்றில் உறைத்து நின்றோர்க்குச் சிவஞானம் நிலைபெறும்; திருவருள் வீடாய சிவத்துடன் பிரிப்பின்றி நிற்கும்; அத்தகைய திருவருட்பேற்றால் திருவடியைச் சார்வர்; அவரே அடியார் கூட்டத்துடன் இணங்கித் தொண்டு புரிவர்; அதுவே அறிவினை நல்கும் வாயிலைப் பயப்பது; அவ்வறிவுடையவரே சிறந்த நிறைந்த அறிவர் என உரை கூறித் தம் போக்கிற்குப் பாடலைப் பிரித்துக் கூட்டிச் சிதைத்து இடர்ப்படுவர். அவர் கூறும் உரையின் வண்ணம் சில சொற்களுக்குப் பொருளின்மையும், இல்லாதபொருள் உளவாதலும் தெளிக.

இம்மந்திரம் ஞேய அனுபவம் உறைக்கப்பெற்றோர் திருவருளை உற்றவராய் உண்மைஞானம் பெற்றவராய் வீட்டின்பத்தை எய்துவர் என்றலின் அதிகாரத்திற்கு ஏற்றதாதல் காண்க. (34)

**தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்**
**தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு**
**தானென்ற பூவை யவனடி சாத்தினால்**
**நானென் றவனென்கை நல்லதொன் றன்றே. 1607**

இ-ள் - எனின், சிவனும் சீவனுமாகிற ஞாதுரு ஞேயங்களை அறிந்து, நான் என்பது அற்று, திருவடி சாரின் பின்னர் வேற்றுமை உணர்வு கூடாது என விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: உண்மைப்பொருள்கள் ஆன்மாவாகிய தான் என்றும் சிவனாகிய அவன் என்னும் இரண்டாம். அவ்விரண்டையும் உயிராகிய தன்னிலே கண்டு சிவ மணங்கமழும் ஆன்மாவாகிய மலரைச் சிவனடியில் சாத்தினால் நானென்றும் அவனென்றும் வேறுபடுத்திப் பேசுதல் நல்லதொரு செயல் ஆகாது என்றவாறு.

ஞாதுரு ஞேயங்களை ஞாதா தன்னிற் கண்டு தன்னைச் சிவன் திருவடிக்கண் செம்பூவாகச் சாத்தி விட்டால அப்படியே அனுபவித்து அழுந்திக்கிடத் தலன்றி வேறாக அறிதல் நல்லதன்று என்பது கருத்து.

தத்துவம் - உண்மைப்பொருள். தான் என்றது ஆன்மாவை. அவன் என்றது சிவத்தை. இங்ஙனம் இரண்டாக அறியப்படுதல் பசு பாசங்களோடு கூடிய வழியே ஆதலின் 'தானென்று அவனென்று தத்துவம் இரண்டாகும்' என்றார்.

ஆன்மா தன்னையுங்கண்டு தலைவனையும் தம்முட் காணுதல் வேண்டுமாதலின் 'தனில் தானென்று அவ னென்று இரண்டும் கண்டு' என்றார்.

தானென்ற பூ - ஆன்மாவாகிய யான் என்ற பூ, அதனைச் சீவமலர் என்பேம். சீவனை மலராக உருவ கித்தமையின் இறைவன் திருவடியை அருச்சிக்கும் இடமாகவும் காட்டினாராதல் தெளிக. இங்ஙனம்

அகங்கார சமர்ப்பணம் செய்து அடிக்கு அடைக்கலம் புகுந்தவர் நான் அவன் என்ற வேறுபாட்டுணர்ச்சி எய்தாராகலின் அதனை எதிர்மறைமுகத்தான் வலி யுறுத்தற் பொருட்டு 'நானென்று அவனென்கை நல்லதொன்றன்றே' என்றார். இதற்கும் வேறு கூறுவாரும் உளர்.

இது ஞாதுரு ஞேயங்கள் வேறின்றி ஒன்றுதலை உணர்த்துதலின் இவ்வதிகாரத்திற்கு இயைபுடைத் தாயிற்று. (35)

**வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து**
**மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு**
**நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்**
**அச்சங் கெடுத்தென்னை யாண்டனன் நந்தியே. 1603**

இம் - எனின், இறைவன் தம்மை ஆட்கொண்ட அருளிப்பாட்டினை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எனது குருநாதனாகிய சிவபெருமான் சீவனுக்கு உபகாரமாக நியமித்த முப்பத்தாறு தத்து வங்களையும் அகற்றி என்னை நிலைத்திருக்கச்செய்து, உலகமெல்லாம் மெச்சும்படிச் சிவபரம் பொருளின் வியாபகம் தலைதூக்கச்செய்து, இந்த அனுபவமே என்றும் உளதாக்கிச் சிவபரம்பொருளாகச் செய்து, அறியப்படுபொருளாகிய சிவத்திடம் விளைவதாகிய அச்சம்போக்கி என்னை ஆட்கொண்டான் என்றவாறு.

பெருமான் தத்துவ தாத்துவிகங்களைக் களைந்து சிவத்துவ வியாபகத்துள் என்னை அடக்கி, தாமாகச் செய்து அச்சம் போக்கி ஆட்கொண்டனன் என்பது கருத்து.

ஆன்மாக்கள் அவ்வப்போது தாங்கும் உடலுக்கு ஏற்ப வினைபோகங்கள் துய்க்கத் தத்துவங்களோடு கூடியிருக்குமாதலின், அவற்றை நீக்கி ஆட்கொண்டான் என்பார் "வைச்சன ஆறாறும் மாற்றி" என்றார். "வைச்ச பொருள் நமக்கு ஆகும்" என்புழிப் போல வைத்த என்பது வைச்ச என்றாயது: போலி.

ஆறாறும் என்ற தொகை ஆகுபெயராய் முப்பத்தாறு தத்துவங்களை உணர்த்தின. அவை பிருதிவி முதல் மூலப் பிரகிருதி இறுதியான ஆன்மதத்துவம் இருபத்தைந்தும், வித்தியா தத்துவம் ஏழும், சிவதத்துவம் நான்கும் ஆம். அவற்றை மாற்றுதலாவது தத்துவசுத்தியைத் தருதல்.

தத்துவங்களோடு கூடியிருந்தவழி மாயையத்துள் அழுந்திக் கிடந்த என்னைப் பிரித்துத் தான் தானாக வைத்து என்பார் "எனை வைத்து" என்றார்.

எங்கும் என்றும் ஒருசேரப் பரந்து இயங்குவன நிற்பனவாகிய யாவையும் தமக்குள் அடங்கத் தாம் வியாபகமாய் இருக்கும் சிவத்துவ வியாபகத்துள்ளே ஆன்மா வியாப்பியமாய் அடங்கியிருக்கும் என்பார் "பரன் தன் வியாத்துவம் மேலிட்டு" என்றார். இந்நிலை அனைவராலும் போற்றப்படுவது ஒன்றாகலின் "மெச்ச மேலிட்டு" என்றார். மெச்ச — புகழ.

ஆன்மா சிவத்துவ வியாபகத்துள் அடங்கியிருப்பதாகிய இன்பநிலை, வினைவயத்தானும் வாசனையானும் பரிபாகநிலைக்கு ஏற்பப் பிரியவுங் கூடுமதாலின் "நிச்சயமாக்கி" என்றார். நிச்சயம் — உறுதி. இங்ஙனம் வியாப

கத்துள் அடங்கிய உயிர் பாலோடு அளாய நீர் பாலா தல் போலச் சிவமேயாமாதலின் "சிவமாக்கி" என்றார்.

அங்ஙனம் ஞேயமே தானாதலால் அஞ்சுவது ஒன்று மில்லை அஞ்சவருவதும் இல்லை ஆகையால் "அச்சம் கெடுத்து என்னை ஆண்டனன்" என்றார்.

இம்மந்திரம் ஞேயத்தால் ஞாதுருவுக்கு அச்சம் அகலலும் ஆனந்தமாதலுமாகிய விளைவுகள் உணர்த் தப்பெறுதலின் இவ்வதிகாரத்ததாயிற்று. (36)

**முன்னை யறிவறி யாதஅம் மூடர்போல்**
**பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்**
**தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்**
**தென்னை யறிவித் திருந்தனன் நந்தியே.** *1609*

இம் – எனின், பெத்த முத்தி காலங்களில் இறைவன் அருளிய முறைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பாச பந்தங்களில் கட்டுண்டு உண்மை ஞானத்தான் பதியை உணராது மூடர்போல் கிடந்த என்னை, உபதேசந் தந்த பின்பு, தானேயாகச் செய்தமையின், அறிவு அறியாமையாகிய இரண்டையுமே என்னினின்று பிரித்தான். ஆன்மாவாகிய தன்னை உணரப் பரசிவமாக்கி, அச்சிவத்தினிடமாக என்னை அறியும்படி விளக்கி, என்னுள் எழுந்தருளியிருந்தான் என் குருநாதன் என்றவாறு.

சிவகுருநாதன், பெத்தநிலையில் மூடமாகக்கிடந்த என்னை உபதேசத்தினால் தெளிவித்து, தானேயாகச் செய்து, என்னுடைய அறிவையும் அறியாமையையும்

போக்கி, பரசிவமாகச் செய்து, என்னையும் தன்னையும் அறியச்செய்தான் என்பது கருத்து.

பெத்தநிலையில் மலமாயா கன்மங்களால் அறிவு மறைந்து கிடக்கும் மூடர்களைப் போலவே முத்தி நிலைக்கு வாயிலாக உபதேசம் பெற்ற பின்பும் ஆன்ம அறிவையும், அதனால் அறியப்பெறுவதாகிய அறியாமையையும் போக்கித் தன்னுள் அடங்கிக் கிடப்பதாய அனுபவநிலையாகிய மூடமாக்கினான் என்பர் "முன்னை அறிவு அறியாத மூடர்போல், பின்னை அறிவறியாமைமைப் பேதித்தான் நந்தி" என்றார். பெத்தநிலை மூடம் அறிவால் அறியாமை காரணமாக விளைந்தது. முத்தி நிலை மூடம் அறிவும் அறியாமையும் அகன்ற அனுபவ நிலையால் விளைந்த மூடம் என்க. இங்ஙனம் அன்றி, ஞானத்தால் அஞ்ஞானத்தை அகற்றினான் எனலுமாம். அறியாமையை அகற்றியபோதும் அறிவேயாய அனுபவ முதிர்வால் அறிகின்றேம் என்ற உணர்ச்சியும் மடங்கிக் கிடத்தலின் "மூடர்போல" என்ற உவம வாசகத்திற்கு இயைவதாதல் காண்க.

பாசத்தோடுகூடிப் பாசமாய்த் தன்னையும் தலைவனையும் அறியாமல் கிடந்த ஆன்மாவை, உபதேசத்தானும் திருவருளானும் உய்வித்துப் பரஞானம் பொருந்தச்செய்த பின்னர் அந்த ஆன்மா தன்னையும் உணரும் தலைவனையும் உணரும் தடையையும் உணருமாதலின் "தன்னை அறியப் பராக்கி, தற்சிவத்து என்னை அறிவித்து (என்னுடன்) இருந்தனன் நந்தி" என்றார், பராக்கி – பாசஞானத்தினீக்கிப் பரஞானமுடையனாக்கி எனக, இங்ஙனமன்றி வேறு கூறி இடர்ப்படுவோரும் உளர். சிவஞானபோதத்தும் "தன்னை அறிவித்து

தான் தானுச் செய்தானே " என்றதும். சுவாமிகள் ' தன் உண்மை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க் குப் பலவாற்றானும் அதனைத் தெரித்து உணர்த்தி எத்தனையும் எளிய அந்த உயிரை எத்தனையும் அரிய தானும்வண்ணம் செய்தளித்தானே ' எனஉரை கூறலும் இதன் கருத்தை நன்கு விளக்குதல் காண்க.

முன்னை, பின்னை என்பன உபதேசம் பெறுதற்கு முன்னும் பின்னும் என்பாரும் உளர்.

ஞேயமாகிய சிவத்தையும், ஞாதுருவாகிய தன் னையும் அறிய உதவினுன் என்பதனுல் இம்மந்திரம் அதிகாரக்கருத்தினை ஏற்றுநிற்றல் காண்க. ( 37 )

**காணுத கண்ணுடன் கேளாத கேள்வியும்**
**கோணுத போகமுங் கூடாத கூட்டமும்**
**நாணுத நாணமும் நாதாந்த போதமுங்**
**காணு யெனவந்து காட்டினன் நந்தியே.** *1610*

இம் - எனின், சிவகுருநாதன் ஞாதுரு ஞான ஞேயமற்று ஞேயமேயான நிலையை உணர்த்திய பெரு மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகப் பொருள்களை அறியாத கண் ணும். கேட்காத காதும், மாறுபடாத போகமும், கூடாத - என்றும் பிணங்கேயிருப்பதான புணர்வும், நாணப்படாத நாணுகிய பற்றும், நாத தத்துவத்தையுங் கடந்து விளங்குவதான அறிவும் காண்பாயாக என என்முன் எழுந்தருளிவந்து காட்டினுன் குருநாதன் என்றவாறு.

தத்தம் புலன்களைப் பற்றாது தனித்து நிற்கும் பொறிகளையும், நிலைத்த போகத்தையும், இடைவிடாத புணர்ச்சியையும், பற்றையும், சிவமேயான அறிவையும் குருநாதன் எனக்குக் காட்டினன் என்பது கருத்து.

காணாத கண் - தத்தம் பொருள்களைச் சென்று பற்றாத கண்கள். கேளாத கேள்வி - கேட்காத காது கேள்வி: தொழிலாகுபெயர்; காதினை உணர்த்திற்று. 'விழித்தகண் குருடாய்த்திரி வீரரும் பலரால்' என்ற சேக்கிழார் திருவாக்கும் சிந்திக்கத்தக்கது. உயிர் பொறிகளை மனம்வாயிலாக அறிவுருவாகிய சிவத்தைப் பற்றிநிற்கச் செய்தலின் பொறிகளிருந்தும் புலன்களைப் பற்றாவாயின. சுந்தரர் பெருமான் தில்லைக்கூத்தன் முன்னிற்கும் போது எல்லாப் பொறிகளின் செயல்களை யும் கட்பொறியே கொண்டது போல, ஈண்டுக் கண்ணும் காதும் மனத்தொடு கூடினமையின் தம் தொழில் இழந்தன என்பதாம்.

கோணுதல் - மாறுபடுதல். போகம் - நுகர்ச்சி உலகத்தில் நுகரப்படும் போகங்களனைத்தும் கணத்துள் மறைவதாயும், முன் இன்பமாய்ப் பின் துன்பாவதாயும் இருக்கும் மாறுபாட்டினை உடையனவாம். சிவபோகம் என்றும் மாறாது மறையாது நிலைத்ததாலின் அது 'கோணாத போகம்' எனப்பட்டது.

கூட்டம் - பிரிவின் வழியது. கூடாத கூட்டமாவது - என்றும் கூடியேயிருக்கும் கூட்டம். அது நாயகன் சேவடி தைவரும் சிந்தைபோல என்றுமே பிரியாத புணர்ச்சி

நாணுதல் - வெட்கப்படுதல். நாண் - கயிறு நாணுத நாணம் - வெட்கப்படுதல் என்னும் பொருள தாராத நாணம்; கயிருகிய அன்பு. அது இடையறுப் பேரன்பை உணர்த்தியது. அன்றி அடிமை என்பாரும் உளர்.

நாதம் - வேதங்கட்கு மூலமான ஒலி. நாதாந்தம் - வேதமுடிபாகிய உபநிடதமும், உபநிடத முடிபாகிய ஞானமும். நாதாந்த போதம் - அந்த ஞானத்திற்தங் கடந்துள்ள அறிவொளி வடிவான சிவம். காணுத கண் - ஞானக்கண். கேளாத கேள்வி. நாணுத நாணம் - வெட்கப்படவேண்டாத வெட்கம் எனலுமாம்.

காண்பானும் காட்சிப்பொருளும் ஒன்றியிருத்தலாகிய உபதேசத்தை உணர்த்தினமை கூறலின் இது ஞாதுரு ஞான ஞேயத்து ஆயிற்று. (38)

**மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்**
**மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்நிற்கும்**
**மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்**
**மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே. 1611**

இம் - எனின், மோனம் கைவருதலின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மௌனம் பழகித் தேர்ந்தபேர்க்கு வீடு பேறு சித்திக்கும்; எண்வகைச் சித்திகளும் தாமே வலியவந்து ஏவல்கேட்டு முன்னிற்கும்; சிவயோகம் பாவனையாகிற அசபை முற்றுப்பெறும்; பஞ்சகிருத்தியங்களும் செய்தல் கூடும் என்றவாறு.

மோனம் கைவந்தோர்க்கு வீடுபேறு முதலான எல்லாம் கைகூடும் என்பது கருத்து.

மோனம் – வாய்பேசாதிருத்தல். கைவருதல் – பழகுதலும், தேர்தலும். முத்தி – திருவடிப்பேறு. சித்தி – அணிமாதிகள்; திருவடிநிலை என்பாரும் உளர். முத்தியைச் சார்ந்தோர் சித்தியை ஒருபொருட்டாக எண்ணார் ஆதலின் 'முத்தியும் கைகூடும்' என முன் எண்ணிப் பின் 'சித்தியும் முன்னிற்கும்' எனல் ஏற்புடைத்தன்றே என வினவுவாரும் உளர். முன் நிற்கும் என்பதற்கு முத்தி எய்துதற்கு முன் எதிர்ப்பட்டுத் தோன்றும் எனச் சொற்பொருள் விளைத்து ஐயம் களைக. அன்றி ஊமையாம் மொழி முற்றும், சித்தி முன் நிற்கும், முத்தியும், கைகூடும், ஐங் கருமமும் முன்னும் என முறைப்படுத்தி இயைத்துப் பொருள் கோடலுமாம்.

ஊமை மொழி - பேசா எழுத்தாகிய அசபை. அது மூச்சுக்காற்றை உள்ளுக்கு இழுக்கும்போது 'ஸோ' என இழுத்து 'ஹம்' எனக் கும்பிக்கும் தியானமாம். இது அவன் நான் என்ற எண்ணத்தைப் பதிவித்துச் சீவனைச் சிவமயமாக்குகிறது. திருமால் இந்தப் பாவனையால் தியாகேசப் பெருமானைச் சித்தத்தில் வைத்தாட்டினார். அதனால் தியாகப்பெருமான் அஜபா நடேசப் பெருமான் ஆனார் என்பது வரலாறு. பின்னரும்,

**'ஊமை எழுத்துடன் பேசும் எழுத்தறில்
ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்'**

எனல் காண்க.

ஊமையாம் மொழி முற்றுதலாவது சோகம் பாவனை சித்தித்தல். சீனும் சிவனைப்போலப் பஞ்ச கிருத்தியம் பண்ண எண்ணும் என்பதால். ஐந்தொழிலையும் ஒரு சேர இயற்றுதல் அரன் ஒருவர்க்கே உரிமை; ஏனையோர் ஒவ்வொன்றில் அவனருளால் இருந்தியற்றற்கு உரியாராக, ஏனையவற்றை இயற்றும் ஆற்றலிலராவர். இவன் ஐந்தொழிலையும் ஒன்றைவிட்டு ஒன்றை முன்பின்னாக இயற்றும் வல்லமையுடையவன் என்பதாம். இதனால் சிவசம வாத மாகாமை காண்க.

இம்மந்திரம் திரிபுடிஞானமற்று அதுவே தானாய் இருக்கும் மோனம் கைவந்ததாலாம் பயன் கூறலின் இவ்வதிகாரப்பொருளை விளக்கிநிற்றல் காண்க. (39)

**முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால்**
**வைத்த கலைகால் நான்மடங் கால்மாற்றி**
**உய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே**
**பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே** 1612

இம் – எனின், பிராணாயாமத்தால் ஞேயத்தழுந்தியிருப்போர் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள். காண்பானும், காட்சியும், பொருளும் ஆகிய திரிபுடி முத்திரையில், முடிந்ததாகிய ஞேயத்திடத்துச் செலுத்திய தவத்தான்விளைந்த ஆனந்தத்தையுடைய ஒளிபொருந்திய குருநாதனின் திருவடியில் ஒன்றி. உயிரியக்கத்தற்காக வைக்கப்பெற்ற இடைகலையும் பிங்கலையும் சுழுமுனையுமாகிய கலைகளினியங்கும் பிராணவாயுவை நாலுவிரற்கடையளவு வீணே

கழிலேயும் நிறுத்துதலாகிய கும்பகத்தைச் செய்து பந்தங்களை அறுத்தவர்கள் மீளவும் பிறந்திறக்கும் நிலையைப் பொருந்தார்கள் என்றவாறு.

பூரணகும்பகப் பிராணுயாமத்துடன் ஞேயத்தழுந் திய பேர்களுக்குப் பிறப்பிறப்பில்லை என்பது கருத்து.

முத்திரை மூன்றின் – திரிபுடி முத்திரையில், திரிபுடி மூத்திரையென்பதை முந்திரை மூன்று எனத் தமிழ் செய்தவாரும். இதற்குச் சாம்பவி முதலிய முத்திரைகளால் என்றும், தீட்சைக்காலங்களில் இயற்றப்படும் பொறியாகிய மூன்றினலும் என்றும் உரை காண்பர் சிலர். இவ்வதிகாரம் ஞாதுருஞான ஞேயமாதலானும், இவற்றைத் திரிபுடி முத்திரை என்றல் மரபாதலானும், சாம்பவி முதலியன தீக்கை வகைகளே யன்றி முத்திரை ஆகாமையானும், தீக்கைகளில் காட்டப் பெறும் முத்திரைகள் கிரியைகளாய் அதற்குரிய அங்கமாமேயன்றி அதனல் கலை கால்மாற்றுதலும் குருதிருப்பாதத்தில் ஒன்றுதலும் நிகழாமையானும் அவ்வுரைகள் ஈண்டு ஏற்புடையனவல்ல என்க.

முடிந்தது மூன்றின்பால் – முடிந்ததாகிய மூன்ரு வதனிடத்து; அஃதாவது ஞேயத்திடத்து என்க.

மூன்றின்பால் உய் தவத்து ஆனந்தத்து ஒண் குரு பாதத்தே கலைகால் நான்மடங்கால் மாற்றிவைத்த பெத்த அறுத்தோர் பிறந்து இறவார் எனக்கூட்டிப் பொருள்கொள்க.

முடிந்தது மூன்றில்பால் உய் தவத்து ஆனந்தத்து ஒண் குருபாதத்தே – முடிந்ததாகிய மூன்ருவது

பொருளாகிய ஞேயத்திட்த்துச் செலுத்திய தவத்தினுல் விளைந்த பேரானந்தத்தையுடைய ஒளிமயனை குருவின் திருவடியில் என்க, ஞேயத்தழுந்திய குரு நம்மை ஞேயத்தழுத்திநுதலின் அவன் திருவடியில் ஒன்றிய பேர்க்குப் பிறப்பில்லை என்றவாறும்.

கலை கால் — இடகலை பிங்கலை சுழுமுனை ஆகிய மூன்று கலைகளின் வழியாகவும் இயங்குகின்ற காற்று அதனை நால்மடங்கால் மாற்றுதலாவது.

"ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே"

என்றுராதலின் (568) பதினறு மாத்திரைக் காலம் பூரிக்கப் பெற்ற காற்றை அறுபத்துநான்கு மாத்திரையளவு கும்பித்தலாம். நால்மடங்க பூரிக்கப்பெற்ற கால அளவை நான்கு படங்கு ; அதாவது 16 × 4 = 64 ஆக மாற்றி என்க. இதனை,

"வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டும் இரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணுக இவ்விரண்(டு)
ஓமத்தால் எட்டெட்டுக் கும்பிக்க உண்மையே"

என்பதாலும் (573) அறிக. நால்மடங்கால் என்பதற்கு நாலு விரற்கடை என்பாரும் உளர். அவர் திருமந்திர மரபை உணராராம் என்க.

உய் தவத்து ஆனந்தத்து என்பது எதுகை நோக்கி உய்த்தவத்தானந்தத்து என வல்லெழுத்து மிக்கது.

மூன்றின்பால் உய் எனக் கூட்டுக. இதனை உய்த்த வஸ்து ஆனந்தத்து எனப் பிரித்துச் செலுத்திய வஸ்துவாகிய சிவானந்தத்து என்பாரும் உளர். வஸ்து - பொருள். அதாவது சிவமென்பது அவர்கள் கருத்து.

குருபாதத்து வைத்த மனத்தோர்க்கு, தனு கரண புவன போகங்களில் வைத்த பற்றுள்ளம் நீங்க, மல மாயா கன்மங்கள் நீங்குதலின் 'பெத்தம் அறுத்தோர்' என்றார்.

பிறந்து இறவாரே என்றது, ஞேயத்தழுந்தியவர்கட்கு ஆகாமிய சஞ்சித கன்மங்களறுதலின் பிறவியும் அதன்பின் நிகழும் இறவியும் இல்லையாம் என்பது.

இம்மந்திரம் ஞேயத்துக் கும்பகத்தால் அழுந்திப் பெத்தம் அறுத்தோர் பிறவார், பேரின்பம் எய்துவர் என்றலின் இவ்வதிகாரப்பொருளை நன்கு விளக்குதல் காண்க. (40)

**மேலைச் சொருபங்கள் மூன்று மிகுசத்தி**
**பாலித்த முத்திரை பற்றும் பரஞானி**
**ஆலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற**
**மூலச் சொரூபன் மொழிஞா துருவனே. 1613**

இம் - எனின், ஞாதுருவின் சிறப்பிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறப்பட்ட காண்பானும் காட்சியும் பொருளுமாகிய மூன்றையும் விளங்கித் தோன்றும் திருவருட்சத்தி உதவிய முத்திரைகளால் உறுதியாகப் பற்றிய சிவஞானி, மகிழ்ச்சியை உதவும் நடனத்தின்

வாயிலாகக் காட்சிப்பொருளை அடைந்து நீங்கிய மூல மலத்தையுடைய இயல்பினனுவன் ; அவனே ஞாதுரு என்றவாறு.

முப்பொருளினும் திருவருட்சத்தி உதவிய நெறியிற் பற்றிய பரஞானி மூலமலம் அற்றவனய் ஞேயத் தழுந்துவன் ; அவனே ஞாதுரு என்பது கருத்து.

முப்பொருள் – காண்பானும் காட்சியும் காட்சிப் பொருளும். ஈண்டு மேலை என்றது நீங்காச் சிவானந்த ஞேயத்தே என்பது முதல் ஒன்பது மந்திரங்களான் விளக்கப்பெற்ற என்பது உணர்த்தி நின்றது.

சொரூபங்கள் – சிறப்பியல்பு ; தன்னியல்பு எனலு மாம். காண்பான் முதலிய மூன்றிலும் கலந்து அதனதன் இயல்பை விளக்கஞ் செய்த சத்தியாகிய திருவருள் அவற்றினிடமாக அருளிய அடையாளங்களைப்பற்றி நின்றவனே பரமஞானி என்பார் மேலைச் சொருபங்கள் மூன்று மிகு சத்தி பாலித்த முத்திரை பற்றும் பரஞானி என்ருர்.

முத்திரைகளாவன, காண்பான் அறிவில் சத்தி அறிவுக்கறிவாய்க் கலந்திருந்து பாச பசு ஞானங்களை அறியவொட்டாது செய்து, காணப்படுபொருளாகிய சிவத்தையே காட்டுவதாகிய உபகாரத்தால் விளைந்த அடையாளம். அது பதியையன்றி வேருென்றையும் அறியாமை.

காட்சியிற் கலந்து மிகுவித்த அடையாளமாவது ஆன்மபோதக் காட்சியாயிராது சிவஞானமாயிருக்கை.

காணப்படு பொருளிடத்துக் கலந்து மிகு முத்திரையாவது சிவத்தோடொன்றி அருடலே குறியாய் இருக்கை. இங்ஙனம் திருவருள் கலந்துநின்று, காண்பதும் காட்டுவதும் காணப்படுவதுமாக இருத்தலை அறிபவனே பரஞானி என்றவாறும்.

ஆலித்தல் – மகிழ்தல். ஆலித்த நட்டம் – ஆனந்த தாண்டவம். சிதாகாயப் பெருவெளியாகிய புருவ மத்தியில் ஆனந்ததாண்டவ தரிசனம் செய்து பின் காண்கின்றோம் என்ற உணர்ச்சியும் அற்று ஞேயத்தோடு ஒன்றி, அறிகின்றேன் என்ற தன்முனைப்பாகிற மூலமலமும் அற்ற சிறப்பியல்பை உடையவனே ஞாதுரு ஆவான் என்பது கருத்து.

இம்மந்திரம் ஞாதுருவின் சிறப்பியல்பு உணர்த்தினமையின் இவ்வதிகாரத்திற்கு இயைபுடைத்தாதல் காண்க.
(41)

## 4. துறவு

அஃதாவது இருவகைப் பற்றினையும் முற்றத் துறத்தல். "ஆசை அறுமின்கள் ஆசையறுமின்கள் ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்றுங்குப் பற்றறுத்தலாம். வள்ளுவர் "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு" என்றாராலெனின், ஞேயத்தழுந்திய அநுபவ ஞானிகளுக்கு அப்பற்றும் பற்றாய் அவனே தானேயாகிய நெறிக்கு இடையீடாமாகலின், மேல்வீட்டில் ஏற விரும்புவார்க்கு ஏணி கருவியாய் இன்றியமையாததாயினும் ஏறியபின் மேல்வீட்டை வாசத்தலமாகக் கொண்டு ஏணியை எண்ணாதவாறுபோல, சாதன

மான பற்றற்றான் பற்றினைப் பற்றிநின்று சத்திய மான சிவானுபவநிலையைச் சேர்ந்தபின்னர் அப் பற்றுள்ளம் தானே நீங்குமாதலின் இங்ஙனம் கூறப் பெற்றது. இத்தகைய உயர்துறவைப் பத்து மந்திரங் களான உணர்த்திய எடுத்துக்கொண்டார் ஆசிரியர் திருமூலதேவநாயனுர்.

மேல் காண்பான் காட்சியால் காணப்படுகிற பொருளைத் திருவருள் கண்டு காட்ட உணர்ந்து காணப்படும் பொருளிற் றோய்ந்தபின் இத்தகைய உயர்துறவு தானே அமைதலின் அதிகார முறைமை யும் இதனுனே பெறப்படும்.

**இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்**
**துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை**
**மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்**
**கறப்பதி காட்டும் அமரர் பிரானே.** **1614**

இ-ம் - எனின், துறவான் விளைந்த தவத்தான் ஒளிவண்ணனைக் காண்டலும் மறவாமையும் செய்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறப்பும் பிறப்புமாகிய இம்மை மறுமை யினின்று நீங்குதறகாகத் துறக்குந் தவத்தாற் காணப் பட்ட ஒளிவடிவான திருமேனியுடைய இறைவனை மறக்காதவர்களாய், நாடோறும் வாயால் புகழ்வார்க்குத் தேவதேவனுகிய பெருமான் அறமயமான நகரைக் காட்டுவன் என்றவாறு.

துறக்குந் தவத்தால் தூய ஒளிவண்ணனைக் கண்டு மறவாதார்க்கு இறைவன் சிவலோகம் காட்டியருளுவன் என்பது கருத்து.

இறப்பு – இப்பிறப்பிற்குரிய பிராரத்த கன்மங்களை நுகர்ந்து தொலைத்தவழி உயிர் உடலின்ன்று நீங்குதல். இது இம்மைக்கு உரியதாகலானும், இறப்பின் பின்பே வினைச்சேடமுளதேல் பிறப்பு நிகழ்தலானும் இறப்பை முற்கூறினர். "அந்தம் ஆதி" என்பதுபோல.

பிறப்பு - இறந்தபின், உயிர் ஆகாமியமாயிருந்து எடுக்கும் பிறவிக்கு நுகர்ச்சிக்கு உரியதாம் பிராரத்த கன்மப் பொசிப்பிற்காக உடலொடு கூடுதல். இவை இரண்டும் இம்மையும் மறுமையு மாதலின் 'இருமையும்' எனப்படும், இருமை ஈண்டு 'இருமை வகைதெரிந்து' என்றாற் போல எண்ணின்கண் நில்லாது இம்மை மறுமைகளின் தன்மையாகிய வினைகளை உணர்த்தி நின்றது. தவத்தால் சோதிப் பிரானைக் கண்டபின் இருமை நீங்கப் பெறுவர் ஆதலின் நீங்கி என்ற செய்தென் எச்சத்தைச் செயவெனெச்சமாக்கிக் காரணப் பொருளதாக்குக.

துறவு கருவிகரணங்கட்கு விருந்தாய போகபோக்கியங்களை இல்லாமையாலும் மாட்டாமையாலும் வலியத் துறத்தலன்று. மனம் மடைமாறியவழித் தானே நழுவுதலே துறத்தலாம். அங்ஙனம் தானே நழுவுந்திறம் தவத்தான் விளைவதாம், தவமும் தவமுடையார்க்கே ஆம் ஆதலின். ஆகவே, துறக்குந்தவம் என்பதற்குத் துறத்தற்குரிய தவத்தான் கண்ட என்க. கண்ட - அறிந்த. 'கற்றீண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி, என்பதில் காணற்கு உரிய பொருள் ஈண்டுக் கொள்க.

சோதிப்பிரான் - ஒளியான திருமேனியுடைய இறைவன், இதனை அனுபூதிமான்கள் ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி. சோதியே சுடரே நலமக விளக்கு, தூண்டா மணிவிளக்கை சோதிகண்டாய் எனப்பலவாறாக அருளியிருத்தல் காண்க. சோதி விளக்கொளி விண்மணிஒளி அறிவொளி என முத்திறப்படும். இவற்றுள், அறிவொளியே தலைசிறந்தது. அறிவொளி கற்ற நூற்கல்வி அறிவும் உயிரின் இயற்கையான அறிவும். ஆசான் அருளுதவி கொண்டு மலநீக்க விளக்கம்பெற்ற உண்மை அறிவும் என முத்திறப்படும், அவற்றுள் இறைவன் உண்மை அறிவொளி ஆவர் என்க. அதுவே சுட்டி அறியப் படாததாய், தூய்மையாய், எல்லையற்ற இன்பம் பயப்பதாய், யாவற்றையும் இருந்தநிலையே முற்று முணர்வதாய் அமைவதாதலின். பிரான் வள்ளமை யுடையவன்.

மறப்பு - நம்போலும் பெத்தான்மாக்களுக்கு மல வலியாலும் வினைவயத்தாலும் விளைவது. தவத்தால் சோதிப்பிரானைக் கண்டவர்க்கு வாசனமலம் தாக்க ஞாயிறுமண்டலத்தை வெண்முகில்மறைத்தாற் போல விளைவது. அவற்றுள், பின்னதே ஈண்டு ஏதுவாதற்கு உரியதென்க.

வாய் மொழிவார் — வாயான் மொழிவார். எனவே, நினைத்தலும் அடங்கினமை காண்க. ஆகத் தவத்வால் கண்டார் நினைப்பும் சொல்லும் செயலும் சிவத்தொடர் பினதாகவே இருத்தல் விளக்கப் பெற்றது.

அமரர்பிரான் - தேவதேவன். இங்ஙனம் உண்மை நிலை உதவமாட்டாத தேவர்களையும் தேவர்பிரான் என்று மக்களுக்குத் தெளிவுறுத்த ஈண்டு அமரர் பிரான் என்று அருளியது.

அறப்பதி - அறமேயான சிவநகர்.

இம்மந்திரம் துறவின் பயன் கூறுதலால் துறவாதல் காண்க. (42)

**பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே**
**மறந்து மலவிருள் நீங்க மறைந்து**
**சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்**
**துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. 1618**

இம் - எனின், துறந்த பக்குவான்மாக்களுக்குச் சிவம் வெளிப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள் : வினைக்கீடாகப் பிறந்தும், வினைப்போகம் கழிந்தவழி இறந்தும், பலவகையான அறியாமையின் வயப்பட்டுச் செய்வன தவிர்வனவற்றை மறந்தும் வாழ்ந்து, துறக்கத் தக்கனவற்றைத் துறந்த உயிர்க்ளுக்கு, அறியாமையைச் செய்யும் இருளாகிய ஆணவம் நீங்க, சத்திநிபாதம் பொருந்தும் பருவத்தில் இது வரை விறகில் தீப்போல மறைந்து, இப்போது தயிரில் நெய்போல வெளிப்பட்டுச் சிறந்த சிவபெருமான், மேன்மேலும் சுடருகின்ற பேரொளிப் பிழம்பாகக் காணப்படுவன் என்றவாறு.

வினைக்கழிவும், மலநீக்கமும் சத்திநிபாதமும் பெற்ற உயிர்கட்கு இதுவரை மறைந்திருந்தபெருமான் சுடரொளியாய் வெளிப்பட்டருளுவன் என்பதாம்.

பிறந்தும் இறந்தும் பல் பேதைமையாலே மறந்தும் (வருந்துகின்ற) துறந்த உயிர்க்கு மல இருள் நீங்க, அருள்சேர் பருவத்து, மறைந்து சிறந்த சிவன் சுடரொளியாம் எனக்கூட்டிப் பொருள் காண்க.

பல் பேதைமையாலே மறந்தும்; மறத்தலாவது அறியாமையான் தன்னியல்பை மறத்தல். அஃதாவது ஆன்மாவின் இயல்பு இறைவனை உள்ளவாறு உணர்தலாயிருக்கவும், அது செய்யாது, மறத்தல், இது பலவகையான பேதைமையால் விளைவது. பேதைமைகள் பலவகையாவன மூலமலத்தின் காரியவேறுபாட்டான் மோகம் எனவும், மதம் எனவும், அராகம் எனவும் கவலையெனவும், தாப மெனவும், வாட்டம் எனவும் விசித்திர மெனவும் ஏழுவகைப்படும் அறியாமைகளாம். இவற்றின் இயல்பையும் விரிவையும் ஞானநூல்களில் காண்க.

அடுக்குப்பானையில் அடிப்பானை விழ எல்லாம் விழுமாறுபோல, ஆணவமாகிய மூலகாரணம் கெடக் காரியங்களாகிய பேதைமைகள் அழிந்தன என்பார் மலநீங்க, என்றார், மலநீக்கம் – மலபரிபாகம், சூரியன் எழுதலும் பொருள் புலப்பாடும் வெம்மையுணர்ச்சியும் ஒருங்குநிகழ்தல் போல மலபரிபாகமும் சத்திநிபாதமும் ஒருங்கு நிகழ்ந்தன என்பார், இருள்நீங்க அருள்சேர் பருவத்து, என்றார்.

சிவன் உயிரின்கண் விறகிற்றீயும், பாலில் நெய்யும் போல மறைந்து நிற்பன்; பரிபாகம் எய்தியவழித் தயிரின் நெய்போலச் சிறந்து விளங்குவன் என்பார் மறைந்து சிறந்த சிவன் என்றார்.

திருமூலர் கூறும் துறவுள்ளம் இருவினையொப்பும் மலபரிபாகமும சத்திநிபாதமும் எய்தியவழியே விளைவ தாகலின் இத்துணையுங்கூறிப் பின்னர். வாசனையாக உயிரைச் சார்ந்துள்ளதான பற்றும் துறந்தஉயிர்க்கு என்றார்.

அங்ஙனம் பரிபாகமுற்ற உயிர்கட்கு இறைவன் தோற்றச் சுடரொளியாய் விளங்குவன் என்பதைச் 'சுடரொளியாமே' என்பதால் புலப்படுத்தார்

இவ்வண்ணம் இம்மந்திரம் துறந்தார்க்குச் சிவன் வெளிப்படுதலை உணர்த்திற்றுதலின துறவதிகாரத்தில் இடம்பெற்றது. (43)

**அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்**
**உறைவது காட்டகம் உண்பது பிச்சை**
**துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்**
**பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே.** 1616

இம் - எனின்; துறந்தார்க்குத் துணைவன் சிவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அறமே வடிவானவன்; பிறப்பில்லாத அநாதியானவன்; உறவாக யாருமில்லாதவன்; அவன் தங்குமிடமோ காட்டகம்; உண்பதோ ஊரிடு பிச்சை; அநாதியே இயல்பான துறவி; துறந்தவர் பிறவியைத் தொடராதே அறுத்துபகரிக்கும் பித்தன்; காணுங்கள் என்றவாறு.

இறைவன் அறவடிவாய் உறவும் பகையுமில்லாத அநாதி நித்தியன், துறவி துறந்தவர்க்குப் பிறவியைப்

போக்கும் பித்தன், கண்டு அனுபவியுங்கள் என்று அன்பர்க்கு அறிவித்தவாறு.

அறவன் - அறமே வடிவானவன். அறங்களை உடையான், அறங்களை அருளியவன் எனலுமாம்.

பிறப்புடையார்க்கே தாயும் தந்தையும் தமையனும் தம்பியும் முதலிய உறவுண்டு. அஃது இலாதானுக்கு யாருமிலர் என்பார். 'பிறப்பிலி யாரும் இலாதான்' எனக் காரணகாரிய இயைபுதோன்ற முறைப்படுத்தார்.

துறவன் என்பதற்கியைய முன்னர் 'உறைவது காட்டகம், உண்பது பிச்சை' என்றருளினர். சுந்தரர் பெருமானும் 'உண்பதும் ஊரிடு பிச்சை' என்றது காண்க.

துறந்தவர்க்குப் பிறவி அறுத்தலையே கைம்மாறு வேண்டாத கடமையாகக் கொண்டிருத்தலின் அதனையே பித்தாகக்கொண்டான் என்பார் 'பித்தன்' என்றார்.

கண்டீர், ஏ என்பன முன்னிலையசைகள். காணுங்கோள் என்று உலகவரை ஏவியதுமாம்.

இம்மந்திரத்து, துறந்தவர்தம்மைப் பிறவி அறுத்திடும் பித்தனென்றமையால் அதிகார இயைபு தோற்றுவிக்கப் பெற்றது. ( 44 )

**நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்**
**நெறியில் வழுவின் நெருஞ்சில் முட்பாயும்**
**நெறியில் வழுவா தியங்க வல்லார்க்கு**
**நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே.** 1617

இ-ம் - எனின் விதியைப்படைத்து அதன்வழியே ஒழுகுகின்றவர்கள் எய்தும் பயனையும் படைத்தவன் இறைவனே என்று உபதேசித்தல் நுதலிற்று.

இ-ள் : வழியைப்படைத்தான் அதில் நெருஞ்சில் முள்ளையும் படைத்தான்; நெறியினின்று தவறி நடப்பின் நெருஞ்சில்முள் குத்தும் ஆதலால் நெறியினின்று தவறுது நடக்க வல்லார்க்கு வழியிலுள்ள நெருஞ்சில் முள் பாயமாட்டா என்றவாறு.

வழியையும் அதில் முள்ளையும் படைத்து நெறி தவறுது நடக்கின் முள் தையாது என்ற உணர்வையும் தந்தவன் இறைவன் என்பது கருத்து.

இம்மந்திரம் துறவதிகாரத்தது, பிறிதுமொழிதல் என்னும் அணிபட நின்றது.

நெறி - துறவி அகக்கரணமும் புறக்கரணமும் அடங்கி அருளுடையனுய் யாவர்க்கும் இனிய கூறித் தவத்தனுதல் வேண்டும் என்னும் நெறி.

நெஞ்சில் - பழியும், பாவமும், இழிவும், நரகமுமாய் ஊறுசெய்வனவாய முள்போன்ற துன்பங்கள்.

நெறியில் வழுவுதல் – முற்கூறிய நெறியில் தவறி, விட்ட குறைகளையே தொட்டுக்கொண்டு, அழுக்காறும் வெஃகலும் வெகுடலும் பொல்லாக்காமமும் பூண்டு, புறங்கூறியும் பொய்த்துரைத்தும். நமக்கும் கூடா ஒழுக்கத்துத் தலைப்படல்.

நெஞ்சில் பாய்தலாவது, பலரால் பழிக்கப்படுதலும், புடைக்கப்படுதலும், அரசனுல் ஒறுக்கப்படுதலும், தீவாய் நரகிடைத் துன்புறுதலும் போல்வன.

நெறிதவறுது நடப்பின் ஏழிரிலுள்ள நெருஞ்சிலும் குத்தாது என்றது உரிஞ்சி நடப்பாரை உள்ளபடி நோவ நெருஞ்சியும் செய்வதொன்றிலை என்ருற் போல ஊறு செய்யாமையும், தான் மடிதலுமாம்.

துறவறநெறிக்கண் நின்ருர் இம்மியளவும் வழுவா தொழுகுதல் வேண்டும் என வற்புறுத்துதலின் இம் மந்திரம் துறவின் கண்ணதாயிற்று. (45)

**கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்**
**நாடி வளைந்தது நான்கட வேனலேன்**
**ஆடல் விடையுடை அண்ணல் திருவடி**
**கூடுந் தவஞ்செய்த கொள்கையன் ருனே;** 1618

இ - னின், துறவின் ஒழித்தவம் பூண்டாரது உறுதி உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; வெற்றியோடு கூடிய இடபத்தைத் தன் ஊர்தியாகவும் கொடியாகவும் உடைய அண்ணலாகிய பெரிய பெருமானது திருவடிகளை என்றும் பிரியாதே கூடும் தவஞ்செய்த கொள்கையை உடையேனுதலின், எனக்குவரும் கெடுதிகளையும், அடியேனுடைய கடமை களையும் என் குருவின்பாற்கேட்டு மகிழ்ந்ததால் என்னை ஐம்பொறிகளாகிய ஐவரும் தேடிச்சுற்றியதையான் கடக்கமுடியாதவன் அல்லேன் ; உறுதியாகக் கடந்தே விடுவேன் என்றவாறு.

சிவத்தைச்சாரும் பேறு பெற்றேனாதலின் என்னைப் பொறிக்கள்வர் ஒன்றும் செய்ய இயலாது; அவர்களை உறுதியாக வெல்வேன் என்பது கருத்து.

கேடு - வினைகளான் உயிர்க்களவாம் துன்பங்கள். கேடு தருவதனைக் 'கேடு' என்றார். கடமை - ஆன்மா அறிந்து இயற்றவேண்டிய கடமைகள். துன்பங்கள் தவிர்வன, கடமைகள் செய்வன, ஆகவே, செய்வனவும் தவிர்வனவும் இவை இவை என்று குரு உணர்த்தினன்; யான் கேட்டேன்; உவந்தேன் ஆதலால் ஐம்புலவேடரை வெல்வேன் என்றார் என்க, உவந்து என்ற செய்தெனெச்சம் காரணப் பொருட்டு.

வளைந்தது - சுற்றியதை: வினையாலணையும் பெயர். கடவேன் அலேன் - கடக்க இயலாதவன் அல்லேன் என்ற இருமறைகள் கடப்பதன் துணிபை உணர்த்திற்று.

அப்பரடிகள் நாமார்க்கே யாம் என்றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சேவடி யிணையே குறுகினோம் ஆதலின், யாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம் என்றதுபோல, தவஞ்செய்த கொள்கையன் ஆதலின் கடவேனல்லேன் என்றது காண்க. ஆடல் விடை வெற்றியோடு கூடிய இடபம். அண்ணல் - பெருமையிற் சிறந்தோன்.

இம்மந்திரம் தவஞ்செய்த கொள்கையன் என்ற குறிப்பால் துறவுணர்த்தி நின்றமை காண்க. (46)

**உழவன் உழவுழ வானம் வழங்க**
**உழவன் உழவினிற் பூத்த குவளை**
**உழவன் உழத்தியர் கண்ணொக்கும் என்றிட்**
**டுழவன் அதனை யுழவொழிந் தானே. 1619**

இம் - எனின், காமத்தால் கடமையைத் துறத்தலும் நேரும்; அங்ஙனம் துறத்தலாகாது; காமத்தைத் துறத்தல் வேண்டும் எனல் நுதலிற்று.

இ - ள் : உழவன் பலமுறை உழ. அதற்கு உதவியாக மழைபெய்ய, உழவிற் குவளை பூத்தது; உழவன், உழத்தியர் கண்ணை ஒக்கும் என்று மேல் உழுதலைக் கைவிட்டான் என்றவாறு.

முற்றத்துறந்து தவஞ்செய்பவர்க்கும் வாசனுமலம் வந்து தாக்கும்; தாக்குதலால் தவம் நழுவுதல் கூடும் என்பது கருத்து.

உழவன் என்றது துறந்து தவத்தைச் செய்யும் பரிபாகியை. உழ உழ என்ற அடுக்க தவத்தை மேலும்மேலும் இடைவிடாது செய்ய என்பதை வலி யுறுத்தி நின்றது.

வானம் - அகண்டாகாரமாய் வியாபகமாய் யாவும் தன்னுள் அடங்க இடங்கொடுத்து நிற்பதாய ஆகாயம் என்னும பூதம்போல்வதான பரசிவம். இடவாகுபெயராக மழையை யுணர்த்திற்று. சிவத்திற்குக் கருணையை உணர்த்திற்று. வானம் வழங்க - பரசிவன் கருணையைக் கைம்மாறு வேண்டாதே - வழங்க என்க.

உழவில் நெல் விளையவேண்டியிருக்கக் களையாகிய குவளை வளர்ந்தது என்க. குவளை என்றது துறந்தும் நீங்காது தொடரும் மன்மத பாணமாகிய புலனிச்சை. உழவன் விடயசுகத்தை விரும்பி, இக்குவளை நம்முடன் பழகிய உழத்தியின் கண்ணையல்லவா ஒத்தியிருக்கிறது என்று எண்ணினன்: தவம் தொலைந்தது என்பதாம்.

விசுவாமித்திரன் தவம் சீர்குலைந்ததும், காசியபர் தவம் கெட்டதும் இதனுல் என்பதை அவ்வப் புராணம் கொண்டு தெளிக.

இம்மந்திரம் துறவு ஒழிதற்கு வாயில் வாசனாமலமாக வந்து தாக்குதலை உணர்த்துதலின் இவ்வதிகாரத்திற்கு இயைபுடைத்தாயிற்று.

**மேல்துறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவன்**
**நாள்துறந் தார்க்கவன் நண்ப னவாவிலி**
**கார்துறந் தாக்கவன் கண்ணுத லாய்நிற்கும்**
**பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே. 1620**

இம் - எனின், துறந்தார்க்கே பதவி எய்தல் எளிது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முற்கூறியவாறு வாசனையும் தாக்காத வண்ணம் துறந்த, அண்ணலும் விளங்குகின்ற ஒளியானவனும் பற்றுளளம் இயல்பாகவே இல்லாதவனும் ஆன இறைவன, எமனுக்கு உதவியாயிருக்குங் காலத்தை வென்றவர்க்கு அவன் நண்பன் ஆவன்; கருமை நிறமான ஆணவ இருளையும் அதன் விளைவாகிய அறியாமையையும் துறந்தவர்களுக்கு அவன் நெற்றியிற்

கண்ணுடைய ஞானமூர்த்தியாவன்; போகத்திற்குரிய இடமாகக் கிடைத்த பூமியில் பற்றுவிட்ட பேர்க்குத் திருவடி கிடைக்கச்செய்வன் என்றவாறு.

வாசனையையும், காலத்தையும், அறியாமையையும். புனமாதிகளையும் துறந்தோர்க்கே சிவபதம் சேர்தல் ஆகும் என்பது கருத்து.

ஒளியாகவே இறைவன் விளங்குதலின் 'விளங்கு ஒளி' என்றார். ஆதலின், பண்பாகுபெயரன்று. விளக்கொளி எனப்பாடங்கொண்டு ஆக்கமும் கேடுமில்லாத பெருஞ்சோதி எனலுமாம்.

காலதத்துவம், உயிர்களுக்கு வினைப்போகங்களை வரையறை செய்வதாய், போகக்கழிவின்கண் கூற்று உடலிலிருந்து உயிரைப் பிரிப்பதற்கு உறுதுணையாய் இருத்தலின் அதனைக் 'கூற்றுவன் நாள்' என்றார். இறைவன் காலகாலன ஆதலின் தன்னைப்போலவே காலத்தைவென்ற கணக்கறிவார்கட்கு அவன் நண்பனாகின்றான். உணர்ச்சிதான் நட்பாங்கிழமை தரும் ஆதலால்,

அவா - பொருள்கள் மேற்சென்றும் பற்றுள்ளம். அது வினைவயத்தானுண்டாவது. இறைவன் வினையினீங்கி விளங்கிய அறிவன; ஆகையால், அவன் இயல்பாகவே அவாவிலியாவன் என்பதை உணர்த்தியவாறும்.

கார் - கருமை. நிறத்தின் பெயர் அது போன்ற அறியாமையையும். அதன் காரணமாகிய மலத்தையும் ஆகுபெயரான் உணர்த்திற்று. அறியாமையினின்று

நீங்குதலாவது இவை இவை அறியாமையின் விளைவா மென்று சைவத்திறத்தானும், ஆசிரிய வசனத்தானும் அறிந்து அவற்றைச் சாராது ஒழுகுதலாம். நுதற் கண் - ஞானம். அது அறியாமையாகிய இருளை ஓட்டும் ஒளிக்கண்.

பார் – பூமி. இது வினைப்போகங்களை உண்டு கழிப்பதற்குரிய தானமாய் உதவப்பெற்றது. அதனைத் துறத்தலாவது என் வீடு, என் ஊர் எனற பற்றினைத் துறத்தல். பதம் – சிவபதம்: அதாவது திருவடி. பதஞ் செய்யலாம் – திருவடியைப் பெறலாம்.

இம்மந்திரம் துறந்தார் எய்தும் பயனை உணர்த்து தலின் துறவுக்குரியதாதல் காண்க. (48)

**நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது**
**போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது**
**ஆக மிரண்டும் படம்விரித் தாட்டொழிந்**
**தேகப் படஞ்செய் துடம்பிட மாமே.** *1621*

இம் - எனின், உயிர் தன்சேட்டை யொழித்து அடங்கியிருத்தலே துறவு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பாம்பு ஒன்று; அதற்குப்படம் ஐந்து; அது நுகரும் போகம் நான்கு; அது புற்றிற்குள்ளே பொருந்தி நிறைந்துள்ளது; அதற்குரிய இரண்டு உடலிலும், படம் விரித்து ஆடுதலை ஒழிந்து ஒரே படமாகச் செய்துகொண்டு உடம்பிடமாகக்கிடக்கும் என்றவாறு.

உயிர் இந்திரியங்களின் வாயிலாகப் போகங்களை நுகர்ந்து, மனமாகிற புற்றில் நிறைந்திருக்கும் தூலம் சூக்குமம் ஆகிய உடம்பு இரண்டிலும் வியாபரித்து. போகங்களை நுகர்ந்து அலைதலை நீங்கி, ஒன்றிய நிலையில் உடம்பை இடமாகக்கொள்ளும் இதுவே துறவு என்பது கருத்து.

விடயசுகங்களில் செல்லுகின்ற மனத்தை ஒரு வழிப் படுத்திச் சிவத்திடம் செலுத்துவதே துறவு என்பதாம்.

நாகம் என்றது உயிரை. படம் என்றது கண், காது முதலிய பொறிகள் ஐந்தையும். பொறிகளைக் கருவியாகக்கொண்டு விஷயங்களைக் கண்டுங்கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியும் அகக்கருவிகள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆதலின், பொருள் களைச் சென்று பற்றுதலானும் புத்தி பண்ணுதலானும் சிந்தித்தலானும் அடைவேன என அகங்கரித்து எழுதலானும் விளையும் நுகர்ச்சி நான்காயின. போகம் நான்கு – அறம் பொருள் இன்பம் வீடு என்பாரும் உளர். அறம் செயலும், பொருள் போகவாயிலுமாய், நேரே போக மாகாமையானும், வீடு கருவி கரணங் களால் அனுபவிக்க முடியாததாகலானும் அங்ஙனம் கூறுதல் ஏலாமை காண்க.

உட்புற்றில் என்பதைப் புற்றினுள் என மாறுக. உயிர் தன் இடம் முழுதும் மணியின்கண் ஒளியும் பாலின்கட்சுவையும் போல எங்குமாய் நிற்குமாதலின் "பொருந்தி நிறைந்தது" என்றார்.

ஆகும் இரண்டும் - தூல உடம்பும், சூக்கும உடம்புமாகிய இரண்டிலும் என ஏழாவது விரிக்க.

படம்விரித்து - ஆன்மா தன் சேட்டைகளைப் பரப்பி; என்றது அறிந்தும் நுகர்ந்தும் வியாபரித்தலை.

ஏகப் படம் செய்து - பலபொருள்களைச் சென்று பற்றி அலைந்த நிலைமாறி, ஒன்றுகச் சூக்குமதேகத்துள் உயிருக்கு உயிராக இருக்கும் சிவத்தை நாடுதலாகிய ஒரு படத்தை மட்டும் பெற்று என்க.

சூக்குமதேகத்தும் தனித்து நில்லாது இப்பரு வுடம்பினுட்பட்டுக் கிடக்தும் ஆதலின் 'உடம்பு இடமாமே' என்றார் என்க.

இம்மந்திரம் புறவிடயங்களைத் துறந்து சிவத் தையே பற்றிநிற்றல் உணர்த்துதலின் அதிகாரத்திற்கு இயைபுடைத்தால் காண்க. (19)

**அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்**
**இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்**
**சிவன்றான் பலபல சீவனு மாகும்**
**நயன்றான் வரும்வழி நாமறி யோமே. 1622**

இம் - எனின், துறந்தோர்க்குத் துணையான சிவன் திருவடி நமக்கு எளிதாந்தன்மை எம்மால் அறியப்படாத ஒன்று என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; துறந்தார்க்கு வழிமுதல்வனும், அம்மையப்பனும் ஆய சிவன் இவனவன் என்று சொல்ல யார்க்கும் வெளிப்பட்டுநின்று உணரப்படும் எளியனும் அல்லன்; சிவன் திருவடியாகிய திருவருள் அவ்வவ் வான்

மாக்களின் பரிபாகத்திற்கேற்ப அவ்வாற்றுடன் கலந்து நிற்பதால் பலபல சீலங்களாம்; அவன் தரும் நன்மை நம்மை எந்து அடையுடவகையை நாம் அறியோம் என்றவாறு.

சிவனருள் எம்மைச் சேரும்வகை எம்மால் அறியப்படாத ஒன்று என்பது கருத்து.

அகன்றார் - இருவகைப் பற்றினின்றும் நீங்கியவர் துறந்தார். வழிமுதல் - பரம்பரைமுதல் வழி முயாக; அவர்கள் அனுபவிக்கும் முதற்பொருள் ஆனான் என் பதாம். ஆதிபபிரான் - ஆதிபாகிய அம்மைக்குத் தலை வன்; அம்மையப்பன், முதற்றலைவன் எனலுமாம்.

இவன் தான் என நின்று எளியனும் அல்லன் தேவர் முதலியோர் இவன்தான் சிவன் எனச் சுட்டி உரைக்க. வெளிப்பட்டு நின்று எளியன் ஆனானும் அலலன். அமரரும்; 'இது அவன் திருவுரு இவனவன் எனவே அறியார்' என்ற மணிவாசகமும் தெளிக, சுட்டுணர்வான் அறியப்படுவானும் அல்லன் என்பது கருதது.

நயன் - நன்மை. நயனின்று; 'நன்மை பயக்கும்' என் புழிப்போலக்கொள்க. அது இறைவன் கைமாறு வேண்டாத கருணையால் உதவ நமக்குக் கிடைப்பது. அதுவரும் வழியைப் பெததம முத்தி ஆகிய இருநிலையி லும் நாம் அறிய முடியாது என்பதாம். பெத்தநிலையில் பசுபோதமுனைப்பால் அறிய முடியாது. முத்தி நிலையில் அனுபம் முதிர்ந்து அவனருளாய் இருப்பதால் அறிய முடியாது. நம் அறிவு அனுபவ எல்லைகளைக் கடந்தது சிவனருள் என்பது.

இம்மந்திரம் துறந்தார் நெறி முதல் திருவருள்புரியும் வகையை நாம் அறியவொண்ணாதென்றலின் அதிகார இயைபு விளங்குதல் காண்க. (50)

**தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்**
**ஆம்பற் குழலியின் அஞ்சுழிப் பட்டது**
**வேட்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்**
**கூட்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே.** **1623**

இம் - எனின், உலகம் உவர்த்தவாறு இங்ஙனம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உடம்பின்கண் உள்ள ஒன்பது தொளை களும் வழிதிறந்தன. மூலாதாரத்திற் சுழிப்பட்டுக் கிடப்பதாகிய குண்டலினியோடு, வேய்பாகிய நடுநாடியின் வழியே மேலேறிச்சென்று உடற்கலத்தைச் செலுத்து கின்ற மீகாமன், இவ்வுடலாகிய கோயிலின் கூரையி லுள்ள கூட்பில் ஏறியிருந்து மலர்வதைக் கண்டேன் என்றவாறு.

இந்த உடலில் நவத்துவாரங்களும் திறந்தன; மூலாதாரக்குண்டலினியோடு சென்று கூரை உச்சியில் மீகாமன் மலர்ந்திருப்பதைக் கண்டேன் என்பதாம். இதன் கருத்து குண்டலினிசக்தியோடு ஆன்மாவாகிய நான் உச்சிவரை சென்று ஆயிரம் இதழ்த்தாமரையில் பரசிவம் விளங்குவதைக் கண்டேன் என்பதாம்.

தூம்பு - குழாய், ஒன்பது வாய்தல் - உட்கொள்ளும் வாயும், வெளிவிடும் வாயும் கண், காது, மூக்கு, நீத் துளையும் ஆகிய ஒன்பதுமாம். தூம்பு திறந்தன என்ப தால் தேகாபிமானமும் மானமும் உள்ளவரை அவை மறைத்து வைக்கப்பெற்றிருந்தன; இன்று அவற்றைத்

துறந்தேன்; அதனால் அவை திறந்தன என்று அறி வித்தவாறு.

ஆம்பற்குழலி - ஆம்பல்தண்டினைப்போன்ற உருவுடையவள். மூலாதாரத்துக் குண்டலினி சுருண்டு கிடக்கும் பாம்பு போலவும், ஆம்பற்றண்டு போலவும் இருக்கும் என்று யோகசூத்திரம் சொல்லுகிறது.

அகம் - உள்; என்றது மூலாதாரத்துள். சுழிப்பட்டது - சுருண்டு கிடந்தது. அகம் சுழிப்பட்டதாகிய ஆம்பற்குழலி எனக் கூட்டுக.

வேம்பு - நடுநாடி. பிரவிருத்திநிலையில் இடைகலை பிங்கலை வழியாக மாறி மாறி இயங்கிக்கொண்டிருந்த பிராணன் பயிற்சிவசத்தினாலோ, திருவருட்பெருக்கினாலோ மடை மாறி ஓடி, பின் நடுநாடியாகிய சுழுமுனை வழியே குண்டலினி சத்தியோடு முறையே சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை இந்த இடங்களை எட்டுமானால் படிப்படியாக உலக இன்பங்கள் கசந்துபோம்; கடவுள் இன்பம் தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும்; ஆதலான் சுழுமுனை வேம்பெனப்பட்டது.

மீகாமன் - கப்பலைச் செலுத்துவோன். மேலிடத்து இச்சையே வடிவாக இருக்கும் இறைவன். கோயிலின் கூரை - உடலாகிய கூரை. கூரையில் கூம்பு - உச்சி; பிரமரந்திரம். அங்குள்ள ஆயிரம் இதழ்த் தாமரையில் (சகஸ்ராரத்தில்) மலர்கின்றவாற்றை நோக்கினன் என்றார். மூலாதாரத்திலுள்ள குண்டலினியோடு (நான்) பிராணன் ஆறு ஆதாரங்களிலும் முறையே சென்று முடிவில்

உச்சியிலுள்ள சகஸ்ராரத்தில் மீகாமனாகிய பரசிவம் கோடிசூரிய ஒளியுடன் மலர்வதைக் கண்டேனென்பது கருத்து.

ஆம்பற்குழலியின் கஞ்சுளிப்பட்டது எனப்பாடங் கொண்டு, ஆம்பற்பூச் சூடிய கூந்தலையுடைய திருவருளம்மை சட்டைபோல அவ்வுடம்பினைக் காப்பள் என்றுரைப்பாரும் உளர். அவை ஏற்றுமேற் கொள்க.

ஒன்பது வாய்தலும் தூம்பு திறந்தன என்பதால் துறவு குறிப்பிக்கப் பெறுதல் காண்க. **(51)**

## 5. தவம்

தவமாவது, மனம் பொறிவழிப் போகாமைப் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்குதலும், வெயினிலை நிற்றலும், நீர்நிலை நிற்றலும் முதலாயின. இதனை 'நீர்பலகால்மூழ்கி நிலத்தசைஇத் தோலுடைஇச், சோர்சடை தாழச் சுடர் ஓம்பி – ஊரடையார், கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல். வானத்து உய்க்கும் வழி' என்னும் வெண்பாவானும் உணர்க. இவை ஏனையோர் கூறும் தவமென ஒழிக.

ஈண்டுத் தவம் என்றது சிவபுண்ணியங்களாகிற சரியை கிரியா யோகங்களை. இவையே ஞானவாயிலாக மோட்சத்தைக் கொடுப்பன. திருமூலதேவநாயனாரும் மன ஒடுக்கமே தவமென்றும், தவமும் திருவருட் சார்புடையார்க்கே பயன்தரும் என்றும். உண்மைத் தவமுடையாரை ஒருவராலும் பேதிக்க ஒண்ணாது என்றும், சிவனை எளிதின் எய்தும் உபாயமாம் என்றும் உரைப்பர்,

இங்ஙனம் ஒன்பது மந்திரங்களான் உணர்த்திய எடுத்துக் கொண்டார்.

உண்மைத் துறவுடையார்களுக்கே தவசித்தி கிட்டுமாதலின அதிகார முறைவைப்பின் காரணமும் தோன்றுதல் காண்க.

**ஒடுங்கி நிலைபெற்ற வுத்தமர் உள்ளம்**
**நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை**
**இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை**
**படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே** 1624

இம் - எனின், துறந்து தவஞ்செய்வார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கண்டகண்ட பொருள்களிற் சென்று பற்றிச் சிதருது திருவடிக்கண்ணே ஒடுங்கி அங்கேயே அசையாது நிலைபெற்ற உத்தமர்கள் மனம் எதற்கும் நடுங்குவதில்லை; அவர்கள் இருக்கின்ற அவ்விடத்து நமனும இல்லை; துன்பமும இல்லை; இரவு பகல் என்ற வேறுபாடும் இலலை; திருவடிப்பேற்றினையன்றி விளையும் பயன வேறொன்றுமில்லை என்றவாறு.

உலகப்பற்றை விட்டு, திருவடிக்கண்ணே ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர்க்கு நடுக்கம், நமன் பயம், துன்பம், இராப்பகல எதுவும இல்லையாம் எனபது கருத்து.

மனம் பொறிகளின் வழியே சென்று. புலன்களைப் பற்றுது நிரதிசயானந்தமயமான திருவடிக்கண் நிலை பெறுதலே ஒடுங்குதலும் நிலைபெறுதலுமாம் என்க.

பின்னிரண்டடிகளில் " இடும்பைகள் இல்லை இராப் பகல் இல்லை, கடும்பசி இல்லை கற்றுணர்ந்தோர்க்கே " என்ற பாடமும் உண்டு.

இதுஒடுங்கி நிலைபெறுதலே தவம் எனவும், பற்று விட்டோர்க்கே எனபதால்சென்ற அதிகார இயைபும் விளங்க நிற்றல் காண்க. (52)

**எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமுஞ்**
**செம்மா தவத்தின் செயலின் பெருமையும்**
**அம்மான் திருவருட் பெற்றவர்க் கல்லால்**
**இம்மா தவத்தின் இயல்பறி யாரே. 1625**

இம் - னின், திருவருட் சார்புடையார் செய்யும் தவமே சித்திக்கும் எனல் நுதலிற்று.

இ - ள் : எம்முடைய அரிய உயிர் உடலோடு இயைதலாகிய பிறப்பும், அவ்வுடலுடன் உயிர் வினைப் போகங்களைத் துய்த்தற்கிடனாகிய பெரிய நிலத்தின் தோற்றமும், செம்மையான பெரிய தவத்தின் பெருமையும், சிவனருள் சேர்ந்தவர்க்கல்லால் ஏனையோர் இப்பெரிய தவத்தின் இயல்பினைச் சிறிதும் உணரார் என்றவாறு.

திருவருள் பெற்றோர்க்கே தவத்தின் பெருமையும் பயனும் தெரியும் என்பது கருத்து.

ஆர் உயிர் என்றது நரர்பயில் தேயந்தன்னில் நான்மறை பயிலும் நாட்டில் தோன்றிய அருமையினை யுடைய உயிர் என்றதாம். ஆருயிர்த்தோற்றமும். இருநிலத்தோற்றமும் என இயைக்க. எம் ஆருயிருடன் இருநிலத்தோற்றமும் என்பதும் பாடம்.

காமியப்பயனைக் கருதாது சிவஞானம் ஒன்றையே எண்ணி இயற்றப்படுவதாகிய தவம் செம் மா தவம். தவத்தின் செயலின் பெருமையும் என்பது தவத்தின் பெருமையும் அதைச் செய்தற்கண்ணுள்ள முயற்சி யின் பெருமையும் என இரண்டும் கருதநின்றன.

அம்மான் - தலைவன். அம் மகான் என்பதன் சிதைவு என்பாரும் உளர். மான் என்னும் பெயர் விகுதிபெற்றுச் சுட்டப்படும் பெருமைவாய்ந்தவன் என்னும் பொருளில் வந்த தமிழ்ப்பெயர்ச்சொல் அம்மான் என்பது.

பெற்றவரல்லால், பெற்றவர்க்கல்லாது என்பன வும் பாடம். இதில்வரும் 'தவத்தின் பெருமையும்' 'தவத்தின் இயல்பறி யாரே' என்ற தொடரும் தவம் என்னும் அதிகார இயைபை விளக்குதல் காண்க. (53)

**பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்**
**சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்**
**மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்**
**பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றுரே.** 1626

இம் - எனின், இருமைச் செல்வமும் எளிமையில் எய்துவார் தவஞ்செய்வாரே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பலவகையான் பிச்சையெடுத்து உட லோம்பும் மனிதர்கள் தாம் பிறந்ததன் நோக்கத் தையே அறியமாட்டார்கள்; சிவனடியை மறவாத பெரிய தவத்தைச் செய்பவர்கள் இருமையினும் வேண்டிய பல சிறப்புக்களோடு செல்வத்தையும்

பெறுவார்கள் : மேலும் பிறப்பினை நீக்கும் பெருமையும் யும் பெற்றவர் ஆவார்கள் என்றவாறு.

தவஞ்செய்வார் இம்மையில் புகழும் பொருளும் பெறுவர்; மறுமையில் சிவன் திருவடி சேர்வர் என்பது கருத்து.

பிச்சை கொடுப்பவன் மனங் கனிதற்கேற்ற கோலங்களில் பலபல வகையான் மேற்கொள்ளப் படுமாதலின் 'பல பிச்சை செய் மாந்தர்' என்றருளி னர். பிறப்பு – பிறவி எடுத்ததன் நோக்கம். கடவுள் நமக்கு இந்தச் சரீரத்தைக் கொடுத்தது, இறைவன் வணங்கி முத்தி இன்பம் பெறுதற்காகவே என நூல்கள் கூறியும், சிலர் அஃது அறியாராய் உடலை ஓம்புதலுக்கு வேண்டிய உழைப்பையும் புரியாது பிச்சை யேற்று வாளா பொழுது கழிப்பர் ஆதலின் 'பல பிச்சை செய் மாந்தர் பிறப்பு அறியார்' என்றார்.

மறப்பிலர் ஆகிய மாதவஞ்செய்வார்; இறைவன் திருவடி சம்பந்தத்தை என்றும் எக்கணமும் மறவாத வர்களாய்ப் பெரிய தவம் செய்வார்கள் என்பது. மறந்து செய்வதும் தவமாயினும் அது இடையீடு படுதலின் அத்துணைப் பெருமையும் பயனும் உடைத் தன்று என்பதாம். மறப்பிலராகியே மாதவம் செய்வார் எனவும் பாடம்.

பிறப்பினை நீக்கும் பெருமையாவது பிறப்பிற்கு ஏதுவாகிய ஆகாமியசஞ்சிதவினைகள் கழியப்பெறுதல். தவஞ்செய்யின் ஆகாமிய வினை ஏறுது. இறைவன் திருவருளால் எடுத்த தேகத்தின் புசிப்பிற்கு உரிய பிராரத்த வினை நீங்க ஏனைய வினைகள் தீமுன்னர்

பஞ்சுப்பொதிபோல, திருவருள்முன்னர் இல்லையாம். வினை நீங்கவே பிரவாகாநாதியாய்வரும் பிறவி அறும். அதுவே பிறப்பினை நீக்கும் பெருமை என்க.

முன்னர், சிறப்பொடுவேண்டிய செல்வமும் பெறுவர் என எதிர்கால வாய்பாட்டு வினையால் குறித்தவர். பெருமை பெற்றாரே என்று இறந்தகாலவாய்பாட்டால் கூறியது வீடு பெறுதல் உறுதி என்ற துணிவு நோக்கி என்க.

பக்கள் உள்ளம் செல்வத்தின்கண் எல்லையில்லாத பேராசைபூண்டது ஆகலின் அவை அனைத்தையும் பெறலாம்; 'வேண்டும் உன் அறிவின் எல்லைபோல' என்பார் 'வேண்டிய செல்வம் பெறுவர்' என்றார்.

இது மாதவஞ்செய்வார் சிறப்பொடு செல்வம் பெறுவர்; பிறப்பினை நீக்கும் பெருமை பெற்றார் என்றலின் இவ்வதிகாரப்பொருட்கு இயைபுடைத்தாதல் காண்க. (54)

**இருந்து வருந்தி எழிற்றவஞ் செய்யும்**
**பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே**
**இருந்திந் திரனே யெவரே வரினுந்**
**திருந்துந்தஞ் சிந்தை சிவனவன் பாலே.** 1627

இ-னின், தவத்திற்கிடையூறு எதுவரினும் தவத்தோர் சிந்தை தளரார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஓரிடத்திருந்து பொறிபுலன்களை அடக்கி வருந்தி எழுச்சிக்கும் அழகுக்குமுரியதாகிய தவத்தைச்

செய்யும் பெருந்தன்மையாளரைப் பேதிப்பதற்காக என்றே சூழ்ச்சிசெய்திருந்து இந்திரனே அன்றி வேறு எவரே வரினும், தம்முடைய மனம சிவத்தினிடத்தே பிரியாது தங்கித்திருந்தும் என்றவாறு.

தவத்தைக் கெடுத்தற்கு இந்திரன் முதலாக யார் வரினும் தவத்தோர்மனம் சிவன்பாலே உறையும். தம் வாசனாமலமாகிய குற்றமும்நீங்கித் திருந்தும் என்பது கருத்து.

கண்ட கண்ட இடங்களில் சுற்றாது ஓரிடத்து இருத்தல் மிக அருஞ்செயலாதலைக்குறித்து 'இருந்து' என்ற சொல். காட்டிலும், மலைக்குகையிலும். நதியின் ஓரத்திலும் இருந்து எனலுமாம்.

விருப்பப்படியே இளமைதொட்டு எல்லா இன்பங்களையும் எல்லா இந்திரியங்களாலும் துய்த்துவருகின்ற ஒருவன் திடீரென்று அவற்றைத் துய்க்காதவாறு கட்டுப்படுததுதல் என்பது மிகத் துன்பந் தருவது ஒன்றாகலின் 'வருந்தி' என்றார்.

விரதந்தனில் இளைத்த மேனி நல்லபிராமம் என்பவாகலின் தவத்தால் மேனியழகும். முகப்பொலிவும், உயிர்க்கவர்ச்சியும், அரிய காரியங்களைச் செய்வதில் எழுச்சியும் விளையுமாதலின், 'எழில் தவம்' என்றார்.

தவஞ்செய்பவர்கள் எத்தகைய சிறந்த திரண்ட பொருள்வரவிற்காக மனமகிழ்ச்சியும். இழப்பின்கண் துன்பமுமெய்தாது, நீர்ததும்பாத நிறைகுடம்போல்வராதலின் அவர்களைப் 'பெருந்தன்மையாளர்' என்றார்,

பேதிக்க - மனமாறுபடுத்த. சிவபூசைசெய்த திரிபுராரிகள்மனத்தைத் திருமால் புத்தாவதாரங்கொண்டு சென்று பேதித்ததுபோலத் தவத்தைக்கெடுக்கான்க.

பௌத்த சமணமதங்களிலும் உலகில் யாரேனும் செயற்கரிய தவம் செய்யின் இந்திரன், அவர்கள் தவத்தைக்கெடுப்பன் என்ற வரலாறு உண்மை காண்க. நகுடன் தவமும், விசுவாமித்திரன் தவமும் கெட்டது இந்திரனால் என்க. அங்ஙனம் சிவபுண்ணிய சீலர்களாகிய தவத்தோரைப் பேதிக்க அவனாலும் முடியாது; வேறு எவராலும் முடியாது என்பதாம்.

அணையிடப் பெருகும் ஆறுபோல, இடையூறு மிக அவர்கள் சிந்தை சிவன்பால் திருந்தும்; சிக்கெனப் பற்றி நிற்கும் என்பதாம்.

இந்திரன் முதலிய எவராலும் தவத்தோன் தவத்தைக் கெடுத்தலியலாது என்றலின் அதிகார இயைபு காண்க. (55)

**கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான்**
**பரந்த சடையன் பசும்பொன் நிறத்தன்**
**அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்**
**விரைந்து தொழப்படும் வெண்மதி யானே.** 1628

இ-ள் - எனின், தவத்தோர்க்குச் சிவன் வெளிப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பரிபாகமுற்ற ஆன்மாக்களால் விரைந்து தொழப்படும் வெள்ளிய மதியை அணிந்த பெருமான், எல்லாவுயிர்களிடத்தும் விறகில் தீப்போல மறைந்தும்

சிலரிடத்துத் தயிரில் நெய்போல வெளிப்பட்டும் உள்ளவன்; கட்பொறிக்கும் தோன்ருதவன்; பரந்த சடையுடையவன்; பசும்பொன் போன்ற நிறம் உடையவன்; அரிய தவத்தை உடையவர்க்கல்லால் அணுகற்கும் முடியாதவன் என்றவாறு.

சிவன் தவத்தினர்க்கு அல்லால் அறியப்படாத சிறப்பியல்புடையவன் என்பது கருத்து.

எல்லாவுயிர்களிடத்தும் ஒன்ருயிருந்து அவற்றை இயக்கியும் அவற்ருல் அறியப்படாஞதலின் " கரந்துட " என்றும், பரிபாகமுற்ற ஆன்மாக்களிடம் மணியின் ஒளியும், விளக்கின் ஒளியும் போல வெளிப்பட்டுத் தோன்றுவன் ஆதலின் " கரந்திலன் " என்றும் கூறினர்.

கண், மாயேயமான பொருள்களேயே காணுகின்ற இயல்புடையது. இயல்பாக அறியும் அறிவற்ற கருவி. உயிர் மனத்தின் வழியாகக் கண்ணைக் காரியப்படுத்த பொருள்களைச் சென்று பற்றி அறியும் தன்மையது ஆதலின் ஞானசொரூபியாகிய சிவன் அறியப்படான் என்பது.

பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனியாதலின் " பசும்பொன்னிறத்தன் " என்ருர். பசும்பொன் - மாற்றுயர்ந்த பசுமையான பொன்.

எளிதில் இயற்றுதற்கரிய தவம் என்பார் " அருந்தவம் " என்ருர். அணுகலும் ஆகான் என்றது அணுக முடியாதபோது அடைவது ஒருக்காலும் முடியாது என்ற அருமை தோன்ற நின்றது.

விரைந்து - காலம் தாமதியாமல், இன்று அன்று என்று காலங்கடத்தாது. வெண்மதியான் என்றது குற்றமே செயினும் குணமெனக்கொள்ளும் பெருமையன் என்பதை விளக்கியது, குருதார கமனமும் பெரியோர் சாபமுடைய சந்திரனையே சிரமீதுவைத்துக் காத்தலின் ஏனையோரையும் காப்பன் என்பதாம்.

அருந்தவரால் அனுகற்குரியவன் என்பது அதிகாரப் பொருள் விளக்கிநின்றது. (56)

**பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை**
**முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை**
**தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படும்**
**மன்னெய்த வைத்த மனமது தானே.** 1629

இ-ள்: பின் பரிபாக விசேடத்தால் சிவானந்தப் பேற்றை எய்தற்குரியதாகவைத்த இன்பமான மனிதப் பிறவியைத் தன்கருணையால் முன்னரே எய்தவைத்த முதல்வனை நிலைபெற அடையும் வண்ணம் செய்த மனத்தில் எம் இறைவன், அம்மனம் தன்னை எய்துங் காலத்தில் தானே வெளிப்பட்டருளுவன் என்றவாறு.

இம் - எனின், தவத்தோர்க்கு முதல்வன் தானே வெளிப்படுமியல்பினை உணர்த்துதல் நுதலிறது.

முதல்வனை நிலைபெறச்செய்த மனத்தில் அவன் தானே வெளிப்படுவன் என்பது கருத்து,

இன்பப்பிறப்பு - இன்பம் எய்துதற்குரிய பிறப்பு, அது புண்ணியம் பாவம், நரகம் சொர்க்கம். பந்தம் வீடு இவற்றை உணரத்தக்க மனிதப்பிறவி. இப்

பிறவி, புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி, பல் விருகமாகிப் பறவையாய், பாம்பாகி, கல்லாய், மனிதராய், பேயாய்க் கணங்களாய்ப் பின் பரிபாகமுற்றி எய்துதற்குரியதாகலின் 'பின் எய்த வைத்ததோர் பிறப்பு' எனப்பட்டது.

எத்தனை பிறவியை இவ்வான்மா எடுத்துழலும் என்று தோன்றிய கருணையால் முன்னரே தெய்வம் என்பதோர் சிந்தையுண்டான மனிதப்பிறவியை எய்த வைத்தான் என்பார் 'முன் எய்தவைத்த முதல்வனை' என்றார்.

மன் எய்தவைத்த மனம் - நிலைபெறப் பொருந்த வைத்த மனம். மறந்து நினையாமல் தைலதாரை போல இடையறாது நினைந்தேயிருக்கும் மனம். நினைப்பவர் மனம் கோயிலாக்கொண்டவன் ஆதலின் அத்தகைய மனத்தில் எம் இறை தானே வெளிப்படும் என்றார்.

தன் எய்தும் காலம் - மலபரிபாகமும், இருவினை ஒப்பும் பெற்று, தன்னைச் சரண் என்றடையுங்காலம். தானே வெளிப்படும் என்றது இறைவனது அநாதி நித்தியமான சுதந்திரத்தை உணர்த்தி நின்றது.

சிலர் பதிப்பில் இம்மந்திரம் விலக்கப்பெற்று, சில உரை நூல்களில் மிகைப்பாடலாகக் காணப்பெறும். 'பள்ளமுது நீர்' என்னும் மந்திரம் சேர்க்கப்பெற்றுள்ளது, யாம் மிகைப்பாடல் அனைத்தையும் தொகுத்து ஒன்பதாந் தந்திரத்திறுதியில் உரையெழுதி வெளிப்படுப்பேம்.

'மன் எய்த வைத்த மனம்' என்ற குறிப்பால் த்வம் வெளிப்படுதல் காண்க. (57)

**அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்**
**பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே**
**அமைத்ததோர் ஞானமும் ஆத்தமும் நோக்கி**
**இமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே.** *1630*

இ-ம் - எனின், தவத்தார்க்கு என்றும் அழிவில்லை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மந்திரிகளும், யானைக்கூட்டங்களும், மன்னர்களும் ஒருவரோடொருவர் பகைகொண்டு எழும் போரிலே இறந்தொழிந்தனர். தவச்செல்வ முடையார், நடுநிலையாக அமைக்கப்பெற்ற அறிவை யும், அதனால் அடையத்தக்க பொருளிடத்தில் தோன்றும் பற்றையும் நோக்கி விழித்தேயிருந்து தாம் அழிவெய்தார் ஆயினர் என்றவாறு.

உலகறிய வாழ்ந்த அரசும் அழிய, தவமுடையார் விழிப்பாய் அறிவையும் ஆப்தத்தையும் நோக்கியழியா திருந்தார் என்பது கருத்து.

நடுவே அமைத்ததோர் ஞானம் - நடுநாடியாகிய சுழுமுனையில் நிறுத்தப்பெற்றதாகிய தியானத்தால் விளைந்த சிவஞானம். ஆத்தம் - அதனால் பிறந்த, இதுதான் அடையத்தக்கது விருப்பமானது என்ற எண்ணம்.

இமைத்து - கண்கொட்டி, சிமிழ்த்து, கண்கள் இமைத்தலும் உறக்கமும் தவமிலார்செயல். இமையா

ாலும், உறங்காாலும் விழித்தகண் குருடாய் விளங்குதல் தவத்தோர் இயல்பு.

இங்ஙனம் தவத்தாரியல்பு உணர்த்துதலின் இம் மந்திரம் இவ்வதிகாரத்திற்கு ஏற்றதாதல் காண்க. (58)

**சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்**
**மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்**
**பார்த்தவப் பார்வை பசுமரத் தாணிபோல்**
**ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே. 1631**

இ-ள் - எனின், அகப்பார்வையே பிறவியை அகற்றுவது என்றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சாத்திரங்களை ஓதிக்கொண்டே இருக்கும் சதுரப்பாட்டினை ஒழித்து, நீங்கள் ஒரு மாத்திரைக் காலமாவது புறத்தே செல்லும் மனத்தைத் தடுத்து அகமுகப்பார்வையாக உள்ளே செலுத்துங்கள்; அங்ஙனம் நீங்கள் பார்த்த அப்பார்வை பசுமரத்திறைந்த ஆணியைப்போலப் பதிய அதனால், உங்களைக்கட்டிய பிறவியானது உங்களைவிட்டு நீங்கி ஓடுமே என்றவாறு.

மனத்தை உள்ளே செலுத்தின் உங்கள் பிறவி அறும் என்பது கருத்து.

சாத்திரம் – செயல்முறையாகிய கிரியைகளையும், வாதப்பிரதிவாதமாகிய அகங்காரத்தையும் விளக்கும் பாசஞானமாதலின், அவற்றைப் படிப்பதால் மனம் அடங்குவதில்லை; இக்கரைக்கு அக்கரை பச்சை என்ற பரபரப்பையே விளைவிக்கும் ஆதலால் அதனைப் படித்தலை ஒழியுங்கள் என்றதாம்.

உள்ளே நோக்குதலாவது, புறம்பே விடய சுகங்களில் செல்லும் அறிவை, எழுதிய விளக்குப்போல நெஞ்சகத்து நின்று எரியும் நீலமணி மிடற்றனை நினைத்துப் பற்றச்செய்தல்

பசுமரத்தாணி போல் பதிய அதனால் எனச் சில சொல் வருவிக்க. பிறவிக்கு ஏதுவாகிய வினைகள் ஏருமையின் பிறவி தானே ஓடும் என்றார்.

இம்மந்திரம் அகமுகப்பார்வையாகிய தவத்தால் விளையும் பயனுணர்த்தியவாற்றால் அதிகார இயைபு தோன்ற நின்றது. ( 59 )

**தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டில்**
**தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்**
**தவம்வேண்டா மச்சகசன் மார்க்கத் தோர்க்குத்**
**தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே. 1632**

இம் - எனின், ஞானம்பெறத் தவம் வேண்டும் அது பெற்ற பின் வேறு எதுவும் வேண்டாம் எனல் நுதலிற்று.

இ - ள் : சிவஞானத்தைப் பெறவேண்டின் தவம் வேண்டும்; அந்த ஞானத்தின் வாயிலாகச் சமாதி சித்தித்தால் தவம் வேண்டாம்; யோகிகளாகிற சக மார்க்கத்தார்க்குத் தவம் வேண்டாம்; யாம் தவம் வேண்டாம் எனக் கூறும் உரையின் உண்மையை அறியார் உலகர் என்றவாறு.

சிவஞானம் சித்திக்குமளவே தவம் வேண்டப் படுவது; அதற்குமேல் சமாதி கைகூடிய சகமார்க்கத்

தார்க்குத் தவமே வேண்டாம்; யாம் கூறும் இதன் கருத்தை உலகவர் உணரார் என்பது கருத்து.

தலைப்படல் — கூடுதலாற்சிறத்தல். சகசன்மார்க்கத் தோர்க்கு — தோழமை நெறியினராகிய யோகிகட்கும், சன்மார்க்கராகிய ஞானிகட்கும் என்பதாம். இம்மந் திரம் யோகியர் ஞானியர்நிலை உணர்த்துதலின் அதி கார இயைபுடைத்தாதல் காண்க. (60)

## 6, தவநிந்தை

தவத்தை நிந்தித்தல்; அஃதாவது சிவசமாதி கைகூடிவிட்டால், அதற்குக் கருவியாகிய தவங்கள் ஒன்றும் வேண்டாம் என்பதாம். ஏறியபின் ஏணி வேண்டாதவாறு போலவும், ஆற்றைக் கடந்தபின் கலம் தேவையில்லாதது போலவும், உயிருக்கு உயிராகச் சிவம் விளங்குதலை அறியின் தவம் வேண்டாம் என்றவாறு. அங்ஙனமே மனம் ஒருப் படாத வேடத் தவத்தாலும் பயனில்லை என்பதை யும் உணர்த்துகிறது. இங்ஙனமன்றித் தவமே வேண்டாம் என நிந்தனை செய்தது அன்றும் என்று துணிக.

முன்னர்த் தவத்தை ஒன்பது மந்திரங்களால் உணர்த்தி மாணவனுக்குப் பயிற்றுவித்த சித்த மூர்த்திகளாகிய திருமூலதேவர் பயன் தெளிந்த பின் தவமும், தவம் போல்வதும் வேண்டாம் என விலக்குதல் இன்றியமையாதது ஆதலின் அதனைப் பன்னிரண்டு மந்திரங்களான் உணர்த்துகின்றார். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

**ஓதலும் வேண்டாம் உயிர்க்குயி ருள்ளுற்றுற்**
**காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்**
**சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினல்**
**போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. 1633**

இ - எனின், பயனாகிய பரிபாகம் உற்றார்க்கு ஓதுதலும், அன்பு செய்தலும், ஒன்றியிருத்தலும் முதலாய தவங்கள் வேண்டாம் எனல் நுதலிற்று.

இ - ள்; உயிருக்கு உயிராக உள்ள சிபரமேசுரன் உயிருள் விளங்குவதைக் காணின், வேதம் முதலியன ஓதுதலும் வேண்டாம்; உண்மையான இவ்வுடலைச் சிவன் கோயிலாகக் கொள்ளின் அன்பு செய்தலும் வேண்டாம்; ஞேயமாயமூர்த்தியிருக்கையாகிய சமாதி சித்திக்குமானல், தற்போதம் இழத்தலாகிய சாதல் வேண்டாம்; மனம் போனவழியிலே பொறிகளைப் புலன்களில் செலுத்தாதார்க்கு மன ஒடுக்கத்திற்காகக் காடு குகைமுதலிய இடங்கட்குப் போதல்வேண்டாம் என்றவாறு.

உயிருக்கு உயிராக இருந்து இயக்கும் பரசிவம் உயிருள் விளங்கித் தோன்றுமாயின், இறை வெளிப் பாட்டிற்காக ஓதப்பெறும் வேதம் முதலியன ஓதுதல் வேண்டாம். அங்ஙனமே சமாதி கூடினல் சாதலும் ஊனுடம்பு ஆலயமாயின் பக்தியும், புலனொடுக் கத்தின் பின்பு காட்டிற்குப் போதலும் வேண்டாம் என்பது கருத்து.

ஓதல் - வேதம் ஆகமம், மந்திரம் முதலானவற்றை ஓதுதல். மனம் இறைவனிடமே சென்றுபற்ற வேதாக

மாதி தோத்திரங்களையும் சாத்திரங்களையும் ஓதுதல் மரபாதலின் அவை வேண்டாம், சிவத்துவவிளக்கம் உயிருள் சித்திக்குமாயின் என்பது.

உயிர்க்குயிர் - உணர்ந்தன்மைத்தாகிய உயிர்க்கு உணர்வை விளக்கம் செய்ய இறைவன் உயிரையும் இயக்கும் உயிராக விளங்குவன். அத்தகைய விளக்கத்தைப்பெறின் என்பார் உயிர்க்குயிர் உள்ளுற்றால் என்றருளினர்.

காதல் - இதனைப்பெற்றாலன்றிப் பொருந்தினாலன்றி உயிர் வாழமுடியாது என்னும் இன்றியமையாத ஆசை, " காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை ' என்னும் தமிழ்மறையும் கண்டு இணைத்து எண்ணுதற்கு உரியது.

மெய்க்காயம் - மெய் என்னும் பெயருடைய உடல். 'ஊனுடம்பு ஆலயம்' என்பார் ஆகலின், உடலை இடமாக இறைவன் கொள்ளின் அன்புசெய்ய வேண்டாம் என்றதாம். அன்பு செய்தலின் பயன் ' உள்ளம் உமக்கே இடமாக வைத்தேன் ' என்பது போலச் சிவன் எழுந்தருளியிருக்கும் கோயிலாக உடலை ஆக்குதல். ஐயன் எய்தப்பெறின் அதற்குச் சாதனமான அன்பு செய்தல் வேண்டுவதில்லை என்றதாம். சாத்தியத்தின் பின் சாதனம் எதற்கு என்பது. இடம் கண்டால் - இடமாகச் செய்யின் என ஆன்மாவின் வினையாக்கலுமாம் அங்ஙனம் செய்தற்கும் ஆன்மாவுக்குச் சுதந்திரம் இன்றாதலின் இறைவன் இடமாகச்செய்யின் என இறைவன் வினையாக்கிப் பொருள் கூறப்பட்டது.

சமாதி - மூலாதாரத்துள்ள குண்டலினியோடு பிராணனும் மேலே சென்று புருவமத்தியில் ஒளி விட்டு எரியும் சோதியுடன் கலந்து, அதுவே தானாய் இருக்கும் அசைவற்ற நிலை.

'கற்பனை யற்றுக் கனல்வழியே சென்று
சிற்பனை யெல்லாம் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்திண் சமாதியே'

'... ... அருத்தி யொடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே'

என்பன போன்ற திருமந்திரங்களால் முன் விளக்கப் பட்டமை காண்க.

கைகூடுதல் - சித்தியாதல். சமாதி சிவத்தோடு அழுந்திருக்கும் நிலையாதலின், அந்நிலை ஒருநாள் இருநாள் பயிற்சியின் ஆகாது. பலநாள் நழுவி நழுவி ஏறி ஏறிச் சென்று நிலைபெறுத்தி எய்த வேண்டியது ஒன்றாகலின் 'கைகூடினால்' எனச் செயின் என்னும் வாய்பாட்டால் கூறினார். சாதல் - தன்னறிவு அழிதல்.

புலன் - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும். பொருள்களைப் பற்றுவதால் விளையும் இன்பம். மனத்தைப் புலன்வழியே போகச் செய்யாதவர் சிவத்தையே பற்றியிருக்கச் செய்யும் சிவயோகிகளாதலின் அவர்களைப் புலன்கள் மயக்கா. ஆகவே, அவர்கள் புலனடக்கம் பழகுதற்காகக் குகைக்கோ காட்டிற்கோ தனி இடம் நாடிச் செலலவேண்டா என்பது.

இங்ஙனம் இம்மந்திரம் தவத்தால் சாதிக்கக் கூடிய புலனடக்கமும், சமாதியும் 'உள்ளம் உமக்கே

இடமாக வைத்தேன்' என்றாற்போல, தேகத்தைச் சிவமயமாக்கலும். இறைவன் உயிருக்கு உயிராக விளங்குதலை அறிதலும் ஆகிய பயன்களைப் பெற்ற பிறகு போதலும், சாதலும், காதலும், ஓதலும் ஆகிய சாதனங்களாகிய தவம் வேண்டியதில்லை என நிந்தனை செய்தலின் இவ்வதிகார இயைபு விளக்கி நிற்கின்றது. ( 61 )

**கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்**
**சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினால்**
**சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலால்**
**சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. 1634**

இம் - எனின், சாத்தியம் நிறைவெய்தியபின்பு சாதனம் தேவையில்லை எனல் நுதலிற்று.

இ - ள்: உண்மையை உணர்த்தும் நூல்களின் கருத்துக்களை அறிந்து அடங்கினால் அவற்றை உரக்கக் கத்திக் கற்கவேண்டிய இன்றியமையாமை இல்லை; அங்ஙனம் அறிந்து அடங்கி மனவொருமை நிலைத்து இருக்கப்பெறின் மன ஒருமைப்பாட்டிற்கு உதவியாகச் சத்தம் போடவேண்டாம்; மாயேயமும், காமியமுமாகிய பொருள்களோடு தொடர்பற்று நின்றால் வேறு எந்தத் துப்புரவுகளும் வேண்டாம்; சென்று பற்றுதலும், சிந்தித்தலுமாதியாய செயலற்றிருப்பின ஒன்றைச் சிந்திப்பதாகிய சிந்தை வேண்டாவாம் என்றவாறு.

உண்மையையுணர்ந்து அடங்கற்குக் கத்துதலும். சமாதி நிலைக்கச் சத்தமும், தொடர்பறுக்க அவ்வப்போது தூய்மையும், செயலற்றிருக்கச் சிந்தனையும்

சாதனம் ஆவன. சாத்தியங்கள் நிறைவேறியபின் சாத னங்களாகிய தவம் வேண்டாம் என்பது கருத்து. இதனாலே அதிகார இயைபும் அறியநிற்றல் காண்க.

கருத்து அறிந்தாறுதல் – இறைவன் நூல்களாகிய வேதாகமங்களை உணர்ந்து முனைப்பற்று அடங்குதல். கற்றேம் அறிந்தோம் என்று முனைப்பு நிகழுமாயின் அதுவும் அறியாமையாய் ஆணவத்தின் செயலாம் ஆதலின் இன்றியமையாததாயிற்று. 'செறிவு அறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து, ஆற்றின் அடங்கப் பெறின்'' என்ற வள்ளுவர் வாய்மொழியும் காண்க. கத்தவும் வேண்டாம் என்றது வேதாகமங்களைப் பிறர் கேட்க ஓதுதலாகிய வீண்குரலால் பயனில்லை என்பது.

துடக்கு – மலமாயா கன்மங்களோடும் அவற்றின் காரியமாகிய அறியாமை மோகம் தனு கரண புவன போகங்கள் சுகதுக்கம் ஆகிய இவற்றோடும் உளவாய சம்பந்தம், இவை ஆன்மாவைச் சார்ந்து அசுத்தப் படுத்துவன ஆதலால் சார்பறின் தூய்மை தானே அமையும் என்பதாம்.

சிந்தனையின் விளைவு செயல், செயலறவே சிந்தனை வேண்டாம் என்றதாம். ( 62 )

**விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்**<br>
**விளைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார்**<br>
**விளைவறி வார்பண்டை மெய்யறஞ் செய்வார்**<br>
**விளைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே. 1635**

இம் – எனின், பயனுணர்வாரே உலகின் மிக்கார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தவத்தான் வரும் நிலைத்தபயனை உணர்பவர்களே உண்மையான தவத்தைச் செய்பவர்களும் பழமையான உண்மைகளை உரைப்பவர்களும், பழமையான சிவபுண்ணியம் செய்பவர்களும். விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் மிக்கார்களும் ஆவார் என்றவாறு.

பயன் உணர்ந்து தவமியற்றுக; அதனால் உண்மைத் தவமும் பதி புண்ணியமும் யாவருக்கும் மேலாந்தரமும் விளையும் என்று உணர்த்துதல் கருத்து.

மெய்த்தவம் - காமியப்பயனைக் கருதாத திருவருள் எய்துதல் ஒன்றையே பயனாகக் கொண்ட தவம். மெய்யுரை - சிவன் புகழ். " கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் " என்புழி மெய்ப்பொருளுக்குத் தொல்லோர்கண்ட உரை ஈண்டு மெய்யுரை மெய்யறம் இவற்றிற்கும் கொள்க. மெய்யறம் - பதிபுண்ணியம். விளைவு - உடம்பு எடுத்ததன் பயன் என்பாருமுளர்.

இதனால் காமியப்பயன் கருதிச் செய்யப்படும் தவங்கள் நிந்திக்கப்பெறுதலின் அதிகார இயைபு விளங்குதல் காண்க.
(63)

**கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்**
**தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி**
**வாடித் தவஞ்செய்வ தேதவம் இவைகளைந்**
**தூடிற் பலவுல கோரேத் தவரே.** 1636

இ - ள் : சிவதரிசனம் பெறுதலே தவத்தின் பயன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: திருவருளோடு கூடிச் சிவாரம் பொருளைத் தியானித்தலாகிய தவத்தைச் செய்து, ஒலிக்கின்ற பரநாத வடிவாகிய கழலையணிந்த திருவடியைக் காணப் பெற்றேன்; நெடுநாள் அங்ஙனே யிலிருந்து தேடித்தேடிச் சிவகதி காணப்பெற்றேன்; இங்ஙனம் வருந்திச் செய்வதே தவம். திருவருளோடு கூடாமலும், சிவகதியை விரும்பாமலும் இவற்றை நீக்கி வேறொன்றை விரும்பி மாறுபட்டுத் தவஞ் செய்யும் பல உலகத்தவர் எத்தவமுடையார்? அறிகின்றிலேம் என்றவாறு.

சிவகதி நாடித் திருவருள் துணையாகச் செய்வதே தவம்; இவ்வுலக இன்பத்தை நாடிச் செய்யும் தவம் எத்தவமோ? என நிந்தித்தவாறு. இதனால் அதிகார இயையும் விளங்குதல் காண்க.

குரை சழல் - ஒலிக்கின்ற கழலை அணிந்த திருவடி என அன்மொழித்தொகை. இறைவன் கழல் பரநாத வடிவினதாதலின் அதன் ஒலியும் அதுவாய் என்றும் ஒலிப்பதாயிற்று என்க. ஏனைய வெளி. (64)

**மனத்துறை மாகடல் ஏழுங் கைநீந்தித்**
**தவத்திடை யாளர்தஞ் சார்வத்து வந்தார்**
**பவத்திடை யாளர் அவர்பணி கேட்கின்**
**முகத்திடை நந்தியை முந்தலு மாமே.** 1637

இ - எனின், தவத்தராய்ப் புறப்பொருளைச் சார்ந்தார் பிறவிக்குரியர்; அவரைச்சாரின் சிவகதி இல்லை எனல் நுதலிற்று.

இ - ள் : மனத்தின்கண் உறைகின்ற பெரிய கடல் ஏழையும் நீந்தித் தவத்திடைப் பட்டவர்களும் தம்மைச் சார்ந்துள்ள பொருள்களின் மேல் பற்றுள்ளம் பூண்டார் ஆயின் பிறப்பிடைப் பட்டவர்களாவார்; அத்தகைய போலித் தவத்தர் பணியை ஒருவர் கேட்கின் அவர் சிவபெருமான திருமுன் போதலும் ஆமோ? ஆகாது என்றவாறு.

ஆசைக்கடலை அறுத்துத் தவத்திடைப்பட்டும் சார்பின்கண் பற்றறுதார் பிறவிக்கடலிற் பட்டு வருந்துபவர்கள்; அவர்கள் பணிமொழியைக் கேட்கின் சிவன் திருமுன்பு செல்லுதலுமாகாது என்பது கருத்து.

மனம் - அனுபவிடிவினைதாய், காணப்பட்ட பிரபஞ்ச மனைத்தையும் கருத்துவகையான் அடக்கி நிற்கும் அகக்கருவி அதுவே எல்லா வகையான ஆசைகட்கும் உறைவிடம். ஆசை, ஏழுவகையான பிறவிகட்கும வித்து. ஆசையை வெல்லுதல் எழு பிறப்பாகிய கடலைக் கடத்தலாம். ஆதலால், இதனை உணர்த்தவே 'மனத்துறை மகாடல் ஏழும் கைநீந்தி' என்றார்.

எழுகடலையும் புணைகொண்டு நீந்துதலே மிக அரிய செயல் என்பார் 'கைநீந்தி' என்றார். மனத்துறை மாகடல் - மனத்தின்கண் உள்ள பெரிய கடல போன்ற அவா. ஈண்டு அதன் காரியமான எழுவகைத தோற்றத்துப் பிறப்புக்களை உணர்த்தின. அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பீனும் வித்தாகலின.

தவத்திடையாளர் - தவத்தை முடிவுபோகச் செய்ய மாட்டாது இடைப்பட்டோர். அரைக்கிணறு தாண்டியவர் போன்ருர் இவர் என்க. பிறவிக்கடலை நீந்தித் தவத்திடைப்பட்டோர் என்க. தவத்தின்கண் இடையீடுபடுதலுடையார் எனலுமாம். இடைதல் - கெடுதல்.

தம் சார் வத்து உவந்தார் - தம்மைச் சார்ந்த பொருளிடத்து மகிழ்ந்தார்: என்றது சார்புகெட ஒழுகாது, சார்பின்கண் பற்றருதார் என்றவாறும். சார் வத்து என ஒரு சொல்லாக்கொண்டு அத்துச்சாரியை யாக்கிச் சார்பில் எனலுமாம். இதனுல் பொருள் மாற்ற மின்மை காண்க.

நீந்தி இடையாளர் (ஆய்) சார்வத்து உவந்தார் பவத்திடையாளர் என முடிக்க.

பவத்திடையாளர் - பிறவிக்கண் அகப்பட்டோர். அவர் எஞ்ஞான்றும் அடியாரும் ஆகார், ஆசானும் ஆகார். அவர் பணியைக் கேட்டலாகாது. அங்ஙனம் கேட்கின் சிவபெருமான் முகத்திலும் விழிக்க இயலாது என்பதாம்.

நந்தியை முகத்திடை முந்தலும் ஆமோ எனக் கூட்டிச் சிவபெருமானை அவர் முகத்தில் எதிர்ப்படுத லும் ஆமே; ஆகாது எனச் சொற்பொருள் கொள்க இது முகத்தில் விழிக்க முடியுமா என்ற வழக்கை அடி பொற்றி எழுந்தது.

புத்தி தத்துவத்தின்கண் தங்கிக் கிடக்கின்ற கடல் போலும் எல்லையில்லாத எழுவகைப் பிறப்பிற்கும்

காரணமான ஐஞ்சு வினைகளைச் சிவகுருவின் வழித் திருவைந்தெழுத்தைக் கணிக்குமுறையில் நீந்தி நற்றவம் செய்யும் நல்லாருடன் இணங்கி, அவர் வழி நிற்பார்க்குப் பிறப்பில்லை; அதனால் அவர் பிறப்பினை எய்தார்; அந்நல்லார் பணியினைக் கேட்டு ஒழுகின் சிவபெருமானை நேரே கண்டு அவர் திருவடியைச் சார்தலுமாகும் என்று உரைப்பர் சிலர்.

இவ்வதிகாரம் தவநிந்தை. போலித் தவத்தை நிந்திக்கும் இயல்பினது. உண்மைத்தவத்தின் உயர்வைத் தவம் என்ற முன்னதிகாரத்தால் உணர்த்தி. போலித் தவத்தின் பொருந்தாமையைக் கூறும் பகுதியாகிய இதில் இங்ஙனம் பொருள் உரைத்தல் சிறிதும் இயையாமைமட்டுமன்றி மயங்கக் கூறலுமாம். அன்றியும், இங்ஙனம் பொருள் கொள்ளற்கு உரிய சொல்லமைப்பும் இல்லாமை தெளிக. அதிகார இயைபும் இதனால் அறிக.

இவ்வுரை கொண்டார் பவத்திடையாகார் என்ற பாடங்கொண்டிருப்பர் போலும்: ஆயின் மூலத்து அப்பாடம் இல்லாமை கருதற்கு உரியது. (65)

**மனத்திடை நின்ற மதிவாள் உருவி**
**இனத்திடை நீக்கி இரண்டற வீர்த்துப்**
**புனத்திடை அஞ்சும் போகாமல் மறித்தால்**
**தவத்திடை யாரொளி தன்னொளி யாமே. 1638**

இம் - எனின், நிந்திக்கத்தக்க தவத்திற்செல்லாது உண்மைத் தவத்தில் நின்றால் உள்ளொளி அனைத்தும் சிவஒளியாம் எனல் நுதலிற்று.

இ - ள் : ஞானமாகிய உறையுள் செறிக்கப்பட்ட ஞானவாளை உருவிப் பசுக்கூட்டத்தினின்று பிரித்துப் பதியோடு கூட்டி, பதி பசு என்ற வேறுபாடற ஈர்த்து. பசுவிற்குரிய ஐந்து கன்றுகளையும் புனைத்தில் புகாமல் அடக்கினால், தனைத்திடை யறியப்படும் ஆருதாரங்களில் விளங்கும் ஒளிகளையும் தன் ஞெளியே யாகக் காணலாம் என்றவாறு.

ஞானவாளைக்கொண்டு பேதஞானத்தை வெட்டி, பஞ்சேந்திரியங்களாகிய கன்றுகள் உலகியலிற் சென்று பற்றுதவண்ணம் தடுத்தால் ஆருதார யோகமாகிய தனை சித்திக்கும்; அவைகளில் எங்கும் சிவவொளியையே தரிசிக்கலாம் என்பது கருத்து.

பதியை வாளாக உருவகித்து, மனத்தை உறை யாக உருவகிக்கும் வண்ணம் 'உருவி' என்னும் வினைச் சொல்லை உதவியமையின் இது ஏகதேச உருவகம்.

இனம் - கூட்டம். சகலான்மாக்களாகிய பரிபாகம் பெருத பசுக்களின தொகுதி. ஞானவாளை உருவி, அக்கூட்டத்தினின்று பிரித்தானென்பார் ' இனத்திடை நீக்கி ' என்ருர்.

இரண்டு - பசுவும் பதியுமாகிய இரண்டு சிவோகம் பாவனையில் அவன் தான் என்ற வேறுபாடு அற்று அவனே தானேயாகிய நெறியில் நிற்றல் ஞானம் பெற்றதனாலாய பயன் என்பார் ' இறண்டற ஈர்த்து ' என்ருர். ஈர்த்தல் - அறுத்தல். உலகில் அறுத்தால் எப்பொருளும் இரண்டாதல் இயல்பு. ஞானவாளால் ஈர்க்க இரண்டற்று ஒன்ருகும் என்ற உண்மை உணர வைத்தமை காண்க.

அஞ்சு - பொறிகளாகிய கன்றுகள் அஞ்சும். புனம் - போக நுகர்ச்சிக்காக உதவப்பெற்ற உலகம். புனத்திடைப் புகுந்து போகங்களையே விரும்புதல் பொறிகளின் இயல்பு. அவற்றை அங்ஙனம் போகாதவாறு மறித்தலே தவம் என்றதாம்.

ஆறு ஒளி - மூலாதார முதலான ஆறிடங்களிலும் அறியப்பெறும் ஒளிகள். தன் என்றது சிவத்தை.

**மனத்தில் இருந்த மதிவாள் உருவி**
**இனத்தினை நீக்கி இரண்டற ஈர்த்து**
**நினைத்த இடத்தே நிலைபெறு மாகில்**
**அனைத்துயிர்க் கெல்லாம் அதிபதி யாமே.**

எனப் பாடங்கொள்வாரும் உளர்.

"புனத்திடை அஞ்சும் போகாமல்" எனத் தூடணை விளையாதெண்ணும் தவத்தைக் காத்தலும், தன்னொளியாமே எனப்பயனும் உணர்த்தியமையின் இம்மந்திரம் அதிகாரத்திற்கு இயைய நிற்றல் காண்க. (66)

**ஒத்து மிகவு நின்றானை யுரைப்பது**
**பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ**
**முத்தி கொடுக்கும் முனிவ னெனும்பதஞ்**
**சத்தான செய்வது தான்தவந் தானே.** **1639**

இம் - எனின், தவத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முனிவன் என்னும் பதவியை நிலைபெறுத்துவதான தவம், தன்னுள் மிகப்பொருந்தி நின்ற இறைவனை உரைப்பதாகிய அன்பினைக் கொடுக்கும்; அடியார் பலரும் பணிந்து தொழ முத்தியைக் கொடுக்கும் என்றவாறு.

தவம் பத்தியையும் முத்தியையும் கொடுக்கும் என்பது கருத்து.

பதம் சத்தான செய்வதாகிய தவந்தானே மிகவும் ஒத்துநின்றுனை யுரைப்பதாகிய பத்தியைக் கொடுக்கும்; அடியார் பணிந்து தொழ முத்தியைக் கொடுக்கும் எனக்கூட்டிப் பொருள் காண்க.

தவத்தில் முதிர்ந்தோர்க்கே முனிவன் என்னும் பதம் நிலைபெறுமாதலின் "அது முனிவன் என்னும் பதம் சத்தானசெய்வது தவந்தானே" என விசேடிக்கப் பட்டது. சத்தான செய்தல் - நிலைபெறச் செய்தல், பொருளுடையதாகச் செய்தலுமாம். முனிவன். மனன சீலன். வெறுத்தவன் எனலுமாம். பெயர் மாத்திரை யாய் முனிவனுகாது உண்மையில் முனிவன் என்னும் பெயருக்கு ஏற்ப நிலைபெற்ற தன்மையுடையவர்களின் தவம் என்க.

உயிர்களின் பரிபாகநிலைக்கு ஏற்பக் கலந்தும், கரந்தும், உடனும் விளங்குகின்றனுதலின் 'மிகவும் ஒத்து நின்றுனை" என்றார். அவனிடம் இடையறாப் பேரன்பு கொண்டார், "நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே" என்று அவன் நாமத்தையே உரைப் பர். உரையோ அன்பாகிய காரணத்தின் காரியமாத லின் கலந்து நின்றுனை உரைப்பதாகிய பத்தி என்றார்.

அடியார் - இறையடி என்றும் மறவாத பேரன்பர். அவர்கள் மற்றொரு அடியாரைக் காணின் அரனைக் கண்டாற்போலவே வீழ்ந்து வணங்குவார் ஆதலின் "அடியார் பணிந்து தொழ முத்தி கொடுக்கும்' என்றார்.

; சத்தான செய்வது தவம் என்றதற்கு நன்மையைப் புரிவதான தவம் எனலுமாம்.

இங்ஙனமன்றித் திருவைந்தெழுத்தைப் பொருள் உணர்ந்து ஓதுவதும், புத்தியை முருகுவிக்கும் மெய்யடியார்களைப் பணிந்து தொழுவதும் செய்யும் பெற்றியர்க்கு முத்தியைக் கொடுக்தும் முனிவனுகிய சிவன் வெளிப்பட்டு அருளுவன்; மேலும், திருவடி என்னும் சிவப்பேற்றினைத் தருவன்; இதுவே நற்றவத்தின் பயனாக என உரைப்பாரும் உளர். இந்த உரையின் வண்ணம் முனிவன் - சிவன். பதம் - திருவடி. சத்தான செய்வதுதான் தவம் - நற்றவம் என்ற பொருள்கள் பெறப்படுகின்றன, ஆயினும், முனிவன் எனும் பதம் எனவும், செய்வது உரைப்பது முதலான வினைப்பெயரும் கொடுக்கும் என்ற வினைமுற்றும் ஒரு பொருளுக்கு மூடிபாய் வாராமையும் எண்ணத்தக்கது.

நற்றவத்தின் இயல்கூறுவார்போலத் தீத்தவத்தை சிந்தித்தவாறு. அதிகார இயைபும் காண்க. (67)

**இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி**
**மலர்தொட்டுக் கொண்டேன் வரும்புனல் காணேன்**
**தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்ததென் உள்ளந்**
**தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே. 1640**

இ - எனின், உண்மைத்தவத்தை உணரும் முறை இதுவெனல் நுதலிற்று.

இ - ள் ; இலைகளைத் தொட்டும், பூப்பறித்தும் இவை எம்மையாளும் இறைவற்கு ஆம் என்று எண்ணி மலர்களைத் தொட்டுக்கொண்டேயிருந்தேன,

அானுல் என் கண்களில் ஆனந்தநீர் ரெக்காணேன்; அடியேன் மனம், தலை சிறந்த சைவநூல்களை உணர்ந்து பணிந்தது; அதனுல் தலையால் திருவடியைத் தொட்டுக் கொண்டு தாடலையானேன்; இதுவே தவம் என யான் கண்டமுறை என்றவாறு.

புறப்பூசை மாத்திரத்தால் மன ஈடுபாடு ஏற்பட விலலை. உண்மை நூலறிவால் உள்ளப்பதிவு நிகழ்ந்தது. அதனுல் திருவடி சம்பந்தம் பெற்றேன் என்ருர் என்பது கருத்து.

தலைதொட்ட நூல் - தலைசிறந்த நூல்களாய சிவாகமங்கள், திருமுறைகள் என்பாரும் உளர். திருமுறைகள் திருமந்திரத்திற்குக் காலத்தால் பிற்பட்டவாகலின் அவ்வுரை சாலாமை அறிக.

உள்ளம் தாழ்தலாகிய பணிவே உண்மைத் தவத்தின் இயல்பு என்பதை உணர்த்திப் போலித்தவத்தை நிந்தனை தோன்ற வைத்தமையின் அதிகார இயைபு அறிக. (68)

**படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்**
**இடரடை யாவண்ணம் ஈசன் அருளும்**
**இடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கில்**
**உடரடை செய்வ தொருமனத் தாமே.** **1641**

இ- எனின், துன்பத்தையும் இன்பமாக்கொள்ளும் தவத்தர் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரந்த சடையையுடைய அரிய தவத்தைச்செய்த அன்பர்க்குத் துன்பம் சிறிதும் பொருந்தா

வண்ணம் ஈசன் காப்பன்; அது எய்துமாயினும் அத் துன்பத்தையும இன்பமாக அடையச் செய்தவர்களின உண்மையான தவத்தை ஆராயின் உடலை வாரா வண்ணம் அடைத்தலைச் செய்வது அவர்களது ஒருமைப் பட்ட தன்மையாலாம என்றவாறு

உண்மைத் தவமுடையார்க்கு என்றும் இடரடை யாது; வினைச்சேடத்தால் அடையுமாயினும் அதனை இன்பமாகக்கொள்ளும் பெருமை பெற்றவர்கள் உண்மைத்தவ ஒருமைப்பட்டிருப்பதால் பிறவி வாராமல் தடுக்கும் என்பது கருத்து.

மாதவம் - பொறியடக்கம் முதலியன. படர் சடை - அவர்கள் நெடுநாள் இடம் பெயராமல் செய்யும் தவத்தால் தானே வளர்ந்தான பரந்த சடை என்க. இவை இரண்டும் மெய்த்தவர் இலக்கணம். முன்னது அகத்தவம், பின்னது புறத்தடையாளம் என்க. தவ ஒழுக்கத்தோடு இறைவனிடம் என்றும் நீங்காத அன்பும் வேண்டும் என்பார் “ படர்சடை மாதவம்பற்றிய பத்தர் ” என்றார்.

இடர் - வினைவயத்தான் வரு மூவகைத் துன்பங் களும். இவர்கள் செய்யும தவச்சிறப்பான் வினை இவர் களை வந்து சாராவண்ணம் ஈசன் தன் பெருங்கருணை யால் காப்பன் என்பார் “ ஈசன் அருளும் ” என்றார்.

இடர் - துன்பத்தை. அடைசெய்தவர் - ( இன்ப மாக ) அடையச்செய்த தவத்தார் என்க. துன்பத்தை யும் இன்பமாகக் கொள்ளும நிலை இறைவன்பால் ஒன்றிய ஒருமைப்பட்ட தன்மையால் விளைவது. அங்ஙனம் பிரியாதே நிற்பார்க்குப் பிறவியே இல்லை

என்பதாம். துன்பத்தை யின்பமாக் கோடலும் திருவடிக்கண் பற்றும் 'மாசில் வீணையும் மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிளவேனிலும், மூசு வண்டறை பொய்கையும் போன்றதே, ஈசன் எந்தை இணையடி நீழலே" என்று அப்பர் சுவாமிகள் நீற்றறை அனுபவம் கூறுதலால் காண்க.

மெய்த்தவம் நோக்கில் ஒருமனப்பட்ட தன்மையால் பிறவியில்லை என்றலின் பொய்த்தவத்தை இகழ்ந்தவாறு. இதனால் அதிகார இயைபு காண்க. (69)

**ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்**
**ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்**
**நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்**
**சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே.** 1642

இ - எனின், வேடநெறி நில்லாதார் வேடம் பூண்டதாற் பயனில்லை எனல் நுதலிற்று.

இ - ள் : சைவ நூல்களை ஓதியுணராதவர்களாய் அவற்றில் கூறியவண்ணம் நோற்றுத் தவஞ்செய்யாதவர்கள் சோற்றுக்கு வேடந்தாங்கி நின்று வருந்துவது, ஆற்றிலே கிடக்கின்ற முதலைக்குப் பயந்து ஓடிச் சென்று காட்டிலே கிடக்கின்ற ஈன்ற அணிமையையுடைய கரடியின் கண்ணிற்பட்டதை யொக்கும் என்றவாறு.

மெய்த்தவங்கொள்ளாது போலித்தவம் பூண்டு சோற்றுக்குச் சுழல்பவர்கள் நிலை முதலைக்குப் பயந்து கரடி கண்ணிற்பட்டது போலாம் என்பது கருத்து.

நோற்றல் - விரதங்களான் உண்டி சுருக்குதலும், அதனல் பொறி புலன்வழிப் போகாது நிறுத்துதலும், மன ஒருமைப்பாடும் முதலாயின. " உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை, அற்றே தவத்திற்கு உரு " என்ற குறளையும் காண்க.

நூல் - யோக நெறிகளை உணர்த்துவனவாகிய சைவ நூல்கள். சிவாகம ஞானமும், புலனடக்கமும் இல்லாதார் வேடம் சோற்றுக்குச் சுற்றும் வேடம் என்றவாரும். இதனுல் அதிகார இயைபும் உணர்க.

முதலைக்கு அஞ்சிக் கரடிவாயில் விழுந்ததுபோல என்பது ஒரு பழமொழி. இதன் நலத்தை ஓர்க. (70)

**பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்**
**குழக்கன்று துள்ளியக் கோணியைப் புல்காக்**
**குழக்கன்று கொட்டிலில் கட்டவல் லார்க்குள்**
**இழுக்காது நெஞ்சத் திடமொன்று மாமே.** 1643

இ-ம் - எனின், மனவுறுதி விளையும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இளங்கன்ருகிய பிராணவாயு துள்ளி உடம்பினைப் பொருந்தாவண்ணம் அதனைக் கொட்டிலாகிய புருவமத்தியில் நிலைபெறுத்த வல்லார்க்கு, தவம் முதிரும் உபாயங்களும். தவத்தின் பயனை நுகரும் முறையும், மன உறுதியும் தவருமல் பொருந்தும் என்றவாறு.

பிராணுயாமம் செய்து சுழுமுனையில் நிறுத்தப் பழகினுல் தவமுதிர்ச்சியும், பயன் நுகர்ச்சியும், மன உறுதியும் உளவாம் என்பது கருத்து.

திருமூலதேவ நாயனுர் தாம் பூண்ட இடையனுடலிற்கு ஏற்ப யாண்டும் கன்றும் பசுவுமாகவே உருவகித்து வருதல்போல ஈண்டும பிராணனைக் கன்ருகவும், உடலைக் கோணியாகவும், சுழு முனையைக் கொட்டிலாகவும் உருவகித்தமை காண்க.

குழக்கன்று துள்ளி அக்கேணியைப் புக்கா எனவும் ஒருபிரதியில் பாடம் காணப்படுகிறது. அச்சிட்ட பிரதிகளில் பெரும்பாலனவற்றுள் கோணியை என்றிருத்தலால் அப்பாடமே கொள்ளப்பட்டதாயினும், கன்று துள்ளிக் கேணியில் விழாதபடிக் கொட்டிலிற் கட்ட வல்லார்க்கு மனவுறுதி விளையும் என்றிருப்பதே சிறந்த பாடம் எனக் கருதலாம்.

கோணியைப் புல்கால் எனவும், நெஞ்சத்திட ஒன்றுமாமே எனவும் பாடங்கொண்டு, கன்று என்பது நெஞ்சை உணர்த்தியதாகவும், கோணி என்பது உடம்பை உணர்த்தியதாகவும், கொட்டிலில் கட்டுதல் மனத்தினை அடக்குதலாகவும், நெஞ்சத்திட வொன்றும் ஆம் என்பது மனத்திடம் உண்டாம் என்பதாகவும் உரை காண்பர். இப்பொருளில் நெஞ்சத்திடமொன்று என்ற பாடமே சிறத்தல் காண்க. நெஞ்சத்து இட எனப் பிரித்து ஈசனை நெஞ்சத்துள் இருத்த என உரைப்பர் பழைய குறிப்புரைகாரர் விசுவநாத பிள்ளை அவர்கள். பலதரப்பட்ட பாடங்களிலும், உரை மாற்றங்களிலும் சிறந்தன ஈண்டுக் கொள்ளப்பெற்றன.

கன்று கட்ட வல்லார்க்கு நெஞ்சத்திடம் இழுக்காதாம்; ஒன்றுமாம் என்றலின் அதிகார இயைபு மறைமுகத்தால் தோன்றவைத்தமை ஓர்க. (71)

**சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்**
**சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோர் உறவுண்டால்**
**சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்**
**சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே. 1644**

இ-ம் - எனின், தவப்பயன் சித்தம் சிவமாதலே எனல் நுதலிற்று.

இ-ள்; மனம் என்றும் எப்பொழுதும் சிவமாகவே விளங்குமாயின் அவர்கட்குச் செய்யத்தக்க தவம் வேறு வேண்டுவதின்றாம்; அங்ஙனம் சித்தம் சிவமாகிப் பேரானந்தம் பொருந்திய மெய்யடியார்களின் உறவும் உண்டாம்; அவர்கட்குச் சித்தியும் முத்தியும் தாமே சித்திக்கும்; ஆகையால் சித்தம் சிவமாதலே செய்தவப்பேறும் என்றவாறு.

சித்தம் சிவமாதலே தவம்; அதனால் சிவனடியார் உறவும், சித்தியும், முத்தியும் உண்டாம; ஆகையால், சித்தம் சிவமாகப் பெற்றோர்க்குத் தவம் வேறு செய்ய வேண்டாம் என்பது கருத்து.

சித்தம் சிவமாக்கிச் செய்வனவே தவம் ஆக்கும் செயல் விளக்கியவாறு. சித்தம் சென்று பற்றியதன் வண்ணமாய் விளங்குவது, சிவத்தைப் பற்றியபோது சிவமாகவே விளங்கும். அங்கில பரிபாகமின்மையானும், வினைவாதனையானும், அருட்பதிவின்மையானும் ஒரோருகால் உலகியலைப்பற்றி அவமாகவும் கூடும். அங்ஙனம் அவமாகாது சிவததைப்பற்றிச் சிவமாகவே விளங்கின் அதுவே தவமாதலால் வேறு தவம் வேண்டாமெனப் பெற்றது.

சிவானந்தம் சேர்ந்தோர் – என்றும் பெருமகிழ்வில் பிரியாத நிறைமனச்செல்வர்களாகிய சிவனடியார்கள். உறவு – அவர்களோடு விளைந்த நட்பு. இதுவே 'அன்பரொடு மரீஇ' என்பதால் அறிவிக்கப் பெற்றது.

உண்மைத் தவத்தின் பயன் உணர்த்துதல் வாயிலாகப் பொய்த்தவத்தின் நிந்தை உணர்த்தப் பெறுவதால் அதிகார இயைபு உணர்க.

இங்ஙனம் பன்னிரண்டு மந்திரங்களாலும் உயிருக்கு உயிரான இறைவனை உள்ளுதலும், புலன்வழி போகாது ஆடம்பரமும் ஆரவாரமுமின்றி, பாசப்பற்று அற்று, தூய்மையுடன் சிவமந்திரம் பற்றி அடியைச் சேர்ந்து அனவரதமும் அமைதியுடனும் ஆனந்தத்துடனும் இருத்தலே மெய்த்தவம்; இதற்கு மாறான நிலை பொய்த்தவம் என்று அறிவித்து, அதனை நிந்தித்தவாறு காண்க.

## 7. அருளுடைமையின் ஞானம் வருதல்

மெய்த்தவத்தினர்க்குத் திருவருள் வாய்த்தல் எளிதாகலின், அதனால் பூவின்கண் மணம்போல உயிரினிடமாக ஞானம் வெளிப்படும் என்பது. தானே வெளிப்படும் ஞானத்தை ஞானம் வருதல் என வேறு எங்கிருந்தோ உட்புகுதல் போலக் கூறியது, சூரியனுக்கு ஒளிவந்தது எனல் போல்வதோர் வழக்கு. இதனை ஆசிரியர் பத்து மந்திரங்களான் உணர்த்துகின்றார்.

போலித் தவத்தை நிந்தித்துத் தள்ளி, உண்மைத் தவத்தின் உறைத்து நின்றார்க்குத் திருவருள் வாய்ப்பும் அதனால் மணியின்கண் ஒளி போல ஞானம் வெளிப்படுதலும் நிகழுமாதலின் அதிகார இயைபும் காண்க.

**பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்**
**பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்**
**பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு**
**பிரானருள் ளிற்பெருந் தெய்வமு மாமே.** 1645

இம் - எனின், சிவனருள் கிடைத்தால் எல்லாம் கிடைக்கும் எனல் நுதலிற்று.

இ – ள் ; சிவபெருமான் திருவருள் உண்டாயின் நல்ல செல்வம் உண்டாம்; நல்ல ஞானம் உண்டாம்; பெருந்தன்மையும் உண்டாம்: பெரிய தெய்வமு மாவர் என்றவாறு.

சிவபெருமான் அருளுண்டாயின் நற்செல்வமும், நன்ஞானமும், பெருந்தன்மையும், தெய்வத்தன்மை யும் உண்டாம் என்பது கருத்து.

நற்செல்வம் - ஆக்கமும் கேடும் அற்றநிலையான செல்வம். நல் ஞானம் – சிவஞானம்; எஞ்ஞான்றும் விளங்கும் நிலையான அறிவு. பெருந்தன்மை - உள்ள படி உணரும் பேரறிவும், என்றும் மாறாத இன்பமும் முதலாய குணங்கள். பெருந்தெய்வம் - சிவம். சிவமாம் பெருவாழ்வும் பெறுவர் என்பதாம். (73)

**தமிழ்மண் டலம் ஐந்தும் தாவிய ஞானம்**
**உமிழ்வது போல உலகந் திரிவார்**
**அவிழு மனமும் எம் ஆதி யறிவும்**
**தமிழ்மண் டலம் ஐந்துந் தத்துவ மாமே.** 1646

[ இப்பாடலுக்கு உரை விளங்கவில்லை ]

**புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்**
**நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்**
**எண்ணி இரண்டையும் வேறுத் தப்புறத்**
**தண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வீரே.** 1647

இ-ம் - எனின், இருவினையொப்புப் பெற்றுச் சிவ கதியை அறிக எனல் நுதலிற்று.

இ - ள் : இவ்வுகத்தில் புண்ணியம் என்றும் பாவம் என்றும் இரண்டும் வினைகள் உள்ளன; இவற்றின் பயனான சுவர்க்க நரகங்களும் இன்பத்துன்பங்களும் எய்துகின்றபோதுதான் அறிவர் சில அறிஞர்கள். நீங்கள் வந்தபோதறியாமல் வருமுன்னரே அவற்றின் இயல்புகளையும் அவை வந்து ஊட்டும் முறைமையினையும் ஆராய்ந்து அவற்றின் மூலகாரணமான கன்மத்தையும் அறுத்து, அவைகட்கு அப்பால் விளங்கும் சிவனிருப்பிடத்தை அறிந்துகொள்ளுங்கள் எ - று.

இருவினை ஒப்பும் மலபரிபாகமும் உற்றார்க்கே சிவகதி தெரியும் என்பது கருத்து.

பூமி - கன்மங்களை நுகர்தற்கும், மேல் வினைகளை ஆக்குதற்கும் இடமாதலின புண்ணிய பாவங்கள் பூமியின்கண் உள்ளன என்றார்.

சிவஞானிகள் : விலங்குகள்போலக் கிடைத்தன உண்டும், கிடைக்காதபோது வருந்தாதும் உணர்வின்றியும் பசுத்தறிவின்றியும் திரியாது, துன்ப இன்பங்கள் வந்தடைந்தபோது இவை புண்ணியப் பயன், இவை பாவப்பயன் எனப் பசுத்தறிவராதலின் 'நண்ணும்பொழுது அறிவார் சில ஞானிகள்' என்று அருளினர்.

வினை இயல்பையும், அது பயன்தரு மாற்றையும் ஆராய்ந்து, வினைவிளை மூலமாகிய கன்ம மூலத்தை வேரோடறுத்தால் சிவன் இருக்குமிடமாகிய வெண் கயிலை தோன்றும். இதனை ஆய்ந்து அனுபவத்தால் அறியுங்கள் எனப் பரிபாகிகட்கு உணர்த்தியவாறு.

அண்ணல் இருப்பிடத்தை அறிதலே அருள்வழி ஞானம் பெறுதலாம் எனகிறமையின் அதிகாரப் பொருளமைதி இம்மந்திரத்தான் அறிக. (75)

**முன்னின் றருளு முடிகின்ற காலத்து**
**நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்**
**பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்**
**முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே. 1648**

இம் - எனின், இறைவன் செய்யும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; வினைப்போகங்களனைத்தும் முடிவுபெறுகின்ற பரிபாககாலத்தே வெளிப்பட்டு நின்று அருள் செய்வன்; வினைப்போகங்களை நுகர்கின்ற இடைப் பட்டகாலத்தே, இவ்வுலகிலேயே நன்றாக நிலைபெற்று நின்று உயிர்க்குயிராகக் கலந்து நின்றருளுவன்; உயிர்

உடம்பை நீத்து வினைப்போகங்களைக் கழித்துப் பிரிகின்ற பிற்காலத்தே பின்னின்று பிறவியைப் போக்கியருளுவான்; எனது தியானப்பொருளாய் அநாதியேயிருந்து அடியேற்கு வீட்டுலகை அளிக்கிற முதல்வன் என்றவாறு.

தியானப்பொருளாய சிவம் நுகர்ச்சி அனைத்தும் முடிகின்ற காலத்து முன்னின்றும், இடைக்காலத்து என்னுள் கலந்திருந்தும், பின்பு பிறவியை அறுத்தும் அருளுவன் என்பது கருத்து.

முன் நின்று எனக்கு ஒரு முத்தி தந்தான். தியானப் பொருளாய் நின்று எனக்கு வீடுபேறு அருளிய சிவன். முன்னுதல் - எண்ணுதல். ஒரு முத்தி - ஒப்பற்ற முத்தி.

முடிகின்ற காலம் - அவன் அருளுடைமையால் வினைகள் அனைத்தும் கழிந்து உயிர் பரிபாகம் பெறுகின்ற காலம். முன் நின்று - கண்ணுதலும் கண்டக் கறையும் மானும் மழுவுந் தாங்கி வெளிப்பட்டு நின்றும், குருவாக எழுந்தருளியும். உள் நின்றும பரிபாகத்திற்கு ஏற்ப அருள் செய்வன் என்பதாம்.

நடு - வினைப்போகங்களை நுகர்கின்ற இடைப்பட்ட காலம். அப்போது காணப்படுகின்ற இவ்வுலகிலே எல்லாப் பொருள்களோடும நன்றாகக் கலந்திருந்தும். எல்லா உயிர்களிடத்தும் உயிர்க்கு உயிராய்க் கலந்திருந்தும் அருள்வன் என்பதை 'நடு உலகில் நல் நின்று உயிராய் நிற்கும்' என்பதால் உணர்த்தினர்.

பின் – வினை நுகர்ந்து கழிந்தபின்னர். அதாவது சுத்தான்மாவாகச் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் பெற்றபின். நின்று – என்றும் பிரியாது நின்று அருள்வன், பிறவியையும் நீக்குவன் என்பது.

முன் என்பதற்குத் தவம் முற்றியபின் எனவும் நன்னின்றுலகில் என்பதற்கு நன்மை நிறைந்த இந்த உலகில் எனவும் நடு உயிராய் நிற்கும் என்பதற்கு நடுவாய் நிற்கும் எனவும், பின் நின்று என்பதற்குப் பின்னி நின்று எனவும் உரைப்பர்.

இம்மந்திரம் இறைவன் அருளும்முறை அறிவித்தலின் ஆதிகார இயைபுடைத்தாதல் காண்க. (76)

**சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்**
**சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்**
**சிவனரு ளால்வினை சேரகி லாமை**
**சிவனருள் கூடின் அச் சிவலோக மாமே. 1649**

இம் – எனின்; இருளின் இயல்பினை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்; சிவனருளாலே சிலர் தேவரும் ஆவர்: சிலர் தெய்வத்தோடு ஒப்பாவர்; வினைகள் பொருந்தா: சிவலோகம் சேர்வது உறுதியாம் என்றவாறு.

தேவர் - சொர்க்கம் முதலான உலகங்களில் வசிக்கின்ற பசுபுண்ணியப் பயனை நுகரும் ஒளியோடு கூடிய உடலுடையார். உடல் மெய்யாகிய இருபத்து நான்கு தத்துவங்களிலும் தங்கிப் புடைத்தலாதிய முத்தொழில்களைப்புரியும் ஆருயிர் என்பாரும் உளர்.

தெய்வத்தோடு ஒப்பர் என்பது "வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்றாற்போல மானிடர் ஆயினும் தெய்வத்தன்மைகள் அமையப்பெற்ற வராய்த் தேவர்களோடு ஒத்து விளங்குவர் என்பதாம், இதற்கு உணர்த்துமெய்பெற்றுத் தேவர்களை இயக்கும் தெய்வங்களாகி அயன் அரி அரன் இந்திரன் ஆவர் என் பாரும் உளர்

வினை: உயிர்கள் புரிந்த நற்செயல் தீச்செயல்களின் விளைவாக உயிர்களைச் சார்ந்து தனு கரண புவன போகங்களை இறைவன் உதவற்கு உபாயமான புண் ணிய பாவங்கள், அவை ஆகாமியமும் சஞ்சிதமும் பிராரத்தமும் என முத்திறப்படும். அவை அருளால் உயிரைச் சாரா என்பதாம்.

சிவலோகம் ஆம் என்பதற்குச் சிவலோகத்தில் ஆவர் என ஏழாவது விரிக்க.

இம்மந்திரம் சிவனருளாலே தேவராதல் முதலிய சித்திக்கும் என்றமையின் அதிகார இயைபு விளங்குதல் காண்க.

**புண்ணியன் எந்தை புனிதன் இணையடி**
**நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது**
**மண்ணவ ராவதும் வானவ ராவதும்**
**அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே.** 1650

இம் - எனின், அருளாலேயே ஞானமும் பிறவும் ஆகின்றன எனல் நுதலிற்று

இ - ள் : புண்ணியனும், எம் தந்தையும், புனி தனுமான சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளை

யும் அடியேன் நண்ண, அதனால் விளக்கொளிபோல ஞானமானது விளைந்தது; அம்மட்டோ! உயிர்கள் மண்ணிற்பிறந்து மண்ணவராவதும், விண்ணிற் பிறந்து விண்ணவராவதும் எம அண்ணலாகிய சிவனருளைச் சீவர்கள் பெற்றபோதேயாம் என்றவாறு.

சிவனருளாகிய திருவடியைச் சார ஞானவொளி நணுகிற்று: எம் தகுதிக்கேற்ற பிறப்புக்களும் விளைந்தன என்பது கருத்து.

புண்ணியன் – அநாதியே புண்ணியமே வடிவானவன். 'புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே' முதலானவற்றையும் இங்கு நோக்குக. அம்மையப்பராக விளங்குபவன் என்பாரும் உளர்.

எந்தை – எம் தந்தை என்பதன் மரூஉ. அறிவு கொளுத்தி ஆக்கம் உதவலால் தந்தையாவான் என்பதாம். புனிதன் – இயல்பாகவே தூய்மையானவன்.

அடி அருள்வடிவினவாதலின் அவற்றை இணையடி என்றது. திருவடிச்சார்பு ஆன்மாக்கட்கு விளைய ஞானம் தோன்றும் என்பதாம்.

ஞானம் விளக்குபோல, தன்னையும் தலைவனையும் தடைகளையும் விளக்கி, நிலைத்த ஆனந்தத்தைத் தருதலின் இங்ஙனம் கூறினார். மண்ணவராதல் – கன்ம பூமியில் கன்மத்திற் கீடாகப் பிறந்து பரிபாக முறுதல், வானவராதல் – போகபூமியிற் பிறந்து போகம் நுகர்ந்து விளங்குதல்.

இம்மந்திரம், ஞானம் விளைந்தது என்றதால் அதிகாரப் பொருளை அறிவித்தவாறு காண்க. (78)

**காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட**
**மாயத்தே ரேறி மயங்கு மவையுணர்**
**நேயத்தே ரேறி நிமலன் அருள்பெற்றால்**
**ஆயத்தே ரேறி யவனிவன் ஆமே. 1651**

இம் – எனின், நிமலன் அருள்பெற்றால் சீவன் சிவனும் எனல் நுதலிற்று.

இ – ள்: உடலாகிற தேரில் ஏறி மனமாகிற பாகன் இயக்க, மாயத்தால் விளையும் அழகில் ஊர்ந்து இவ்வுலகில் மயங்குகின்ற உயிர்கள், உணர்வாகிற அன்புத் தேரில் ஏறிக்கொண்டு ஆதியே தூயனாகிய சிவ பெருமானது அருளைப்பெற்றால் சிவனடியார் கூட்ட மாகிய தேரில் ஏறிச் சீவன் சிவனும் என்றவாறு.

உடலில் புகுந்து உலகினைச் சுற்றும் உயிர்கள் உணர்வோடு கூடிய அன்பைப் பொருந்தி அருள் பெற்றால், அடியார் கூட்டத்தைச் சார்ந்து அவனே தானும் அனுபவநிலை எய்தும் என்பது கருத்து.

காயம் – உடல் உயிராகிய தலைவன் ஊர்தற்கு இடமாதலின் உடல் தேர் என உருவகிக்கப்பெற்றது மனப்பாகன் – மனமாகிற சாரதி, காயத்தேரை ஓட்டு புவன் மனம் என்னும் பாகன், கைகூட்ட - சேர்த்து வைக்க. அதாவது தேரை வினைக்கு ஈடாகிய துன்ப இன்பங்களில் புகுத்த என்பதாம்.

மாயத்து ஏர் ஏறி - மாயையாலுண்டாகும் எழுச்சியும் அழகுமாகிய இவற்றால் பித்தேறி, மயங்கும், அவை – செய்வன தவிர்வனவும், பற்றுவனவும் விடுவனவும் அறியாது மயங்குகின்ற உயிர்கள். அவை என்றார் உயிர்கள் பலவாதலின்.

உணர் நேயத்தேர் ஏறி - உணர்வாகிற அன்புத் தேரில் ஏறி. உணர்வு - சிவஞானமாகிற பதிஞானம். இதனைத்தேர் என உருவகித்தார் சிவலோகம் சேர்ப்பித்தலின், நேயம் என்பது நியமம் என்பதன் திரிபு என்பாரும் உளர்.

நிமலன் - அநாதியே மலமற்ற பரசிவன், ஆயம் - கூட்டம். ஈண்டு அடியார் கூட்டம். ஆயம் - சமாதி யாகிய நிட்டை எனலுமாம். சிவயோகம் புரியும் அடியார்கூட்டத்துப் பொருந்தி என்பார். அதனையும் தேராக உருவகித்து " ஆயத்தேர் ஏறி, என்றார்.

அவன் - சீவன், இவனுதல் - சிவனுதல். ஆகவே சீவன் சிவனும் என்பது.

இங்ஙனம் அருள் பெற்றால் அவன் இவனும் என்கின்றமையால் இம்மந்திரத்திற்கும் அதிகாரத் திற்கும் உள்ள பொருளியைபு காண்க. (79)

**அவ்வுல கத்தே பிறக்கில் உடலொடும்**
**அவ்வுல கத்தே யருந்தவர் நாடுவர்**
**அவ்வுல கத்தே யரனடி கூடுவர்**
**அவ்வுல கத்தே யருள்பெறு வாரே.** 1652

இ - ளின், ஞானவுலகிற்பிறந்தால் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறிய ஞானவுலகில் தோன்றின், உடலோடும் ஞானவுலகில் செய்தற்கரிய தவமுடை யார் இவரை நாடுவர்; அம்மட்டோ! அரன் திருவடி கூடுவர்; அவனருளையும் பெறுவர் என்றவாறு.

ஞான வுலகில் உடலோடு தோன்றின் தவ முடையாரான் விரும்பப்படுவர்; அரனடியை அடைவர்; அருளையும் பெறுவர்; என்பது கருத்து.

அவ்வுலகம் என்ற சுட்டு அதிகார இயைபு கொண்டு ஞானவுலகு எனப்பட்டது. உடலொடு உயிர் கூடியிருக்குவரை உயிர் உணர்தலைப் புரிகின்றமையின் உடலொடும் பிறக்கின் என்றார்.

அருந்தவர் - பிறர் புரிதற்கரிய தவமுடையார்

இம்மந்திரம் அவ்வுலகத்தே அருள் பெறுவாரே என்றமையின் அதிகார இயைபு விளங்க நின்றது. (80)

**கதிர்கண்ட காந்தங் கனலின் வடிவாம்**
**மதிகண்ட காந்தம் மணிநீர் வடிவாம்**
**சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவாம்**
**எரிகொண்ட ஈசன் எழிலின் வடிவாமே.** 1653

இம் - எனின், ஈசன்வடிவு அழகின் பிழம்பு என அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சூரியனைக் கண்ட சூரியகாந்தக்கல் நெருப்பின் வடிவாம்: சந்திரனைக் கண்ட சந்திரகாந்தக் கல் முத்துப்போலும் வெள்ளிய நீரின் வடிவாம்; அதனோடு மோதும் கருவியாகிய முக்கியைக் கொண்ட சக்கி என்னும் தீத்தருகல் எரியின் வடிவாம்; அனல்வடிவான சிவன் மேகத்தின் வடிவமாம் என்றவாறு.

கற்கள் சார்ந்ததன் வண்ணமாக அவற்றையே தர. இறைவன் உரு தீவண்ணனாகியும் பொறி புலன்

களைப் பிரியாதே கவரும் எழிலியின் வடிவம் என்பது உணர்த்தியவாறு.

கதிர் - வெங்கதிராய சூரியன். காந்தம் - சூரிய காந்தம். சூரியனைக்கண்ட சூரியகாந்தக்கல் தானும் தீயாகித் தீயையுமிழுவதாம் என்பது.

மதி - நிறை மதியாகிய சந்திரன். மதிகண்ட காந்தமாவது சந்திரகாந்தக்கல்.

பணிநீர் - தெளிவால் முத்துப்போலும் வெள்ளிய நீர். முத்தைக் கரைத்துக் தெளியவைத்தாற் போலும் நீர் எனலுமாம்.

சதி - மோதுதல், சதிகொண்டசாக்கி - சிக்கியால் மோதுதல் கொண்ட சக்கியென்னுங்கல் என்க, உலக வழக்கில் சிகி முகி என்னுங்கல் சக்கிமுக்கியென வழங்கலின் அதனையொட்டி அதனை முதனீட்டிச் சாக்கியென்றார். சிகி முகி - தீயை முகத்தில் உடையது. சிகி முகிக்கல் ஒன்றோடொன்று மோதின் எரிதோன்றுமாதலின எரியின் வடிவாம் என்றார்.

எரிகொண்ட ஈசன் - தீயைத் திருமேனியாகக் கொண்ட இறைவன். காந்தக்கற்கள் போலாது தான் எரிமேனியனாக இருந்தும், கண்ணையும் கருத்தையும் கவருதலின் மேகத்தின் வடிவானவன் என்றார். எழிலி - மேகம். எழில் வடிவாம் எனப் பாடங்கொண்டு அழகே வடிவாம் எனலுமாம்.

மேகம் வரையாது வழங்கும் அருளைக் குறிப்பித்தது. இதனால் இம்மந்திரம் அதிகாரத்தொடர்பினைக் குறித்தல் காண்க. (81)

**நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்**
**தேடுவன் தேடிச் சிவபெரு மான்என்று**
**கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல்ல**
**வீடு மளவும் விடுகின் றிலேனே.** 1654

இம் - எனின், அருளைப்பற்றி அரனடிசெல்லும் உறுதியை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாடுதலாகிய சிந்தித்தலும், உறவாகிய முழுநேசமும் கலந்து எம் குருநாதனுகிய சிவத்தைத் தேடுவேன் ; தேடிச் சிவபெருமான் என்று கூவிச் சென்று ஓடிச்சேருவேன் ; அங்ஙனம் கூடி ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடிக்கே செல்ல அடியேனை விடுமளவும் யான் அவரை விடுகின்றிலேன் என்றவாறு.

தியானத்தாலும், ஞானத்தாலும், அன்பாலும் தேடிச் சிவனடியைச் சேருவேன் ; அங்ஙனம் சேருமளவும் அவரை விடேன் என்பது கருத்து.

நாடுதல் - தேடுதல் : முதனிலைத்தொழிற் பெயர் : ஈண்டு ஆகுபெயராகச் சிந்தனையை உணர்த்திற்று. உறவு - முதிர்ந்த அன்பு.

இம்மந்திரம் திருவடியைச் சேருமளவும் விடுகின் றிலேன் என்றமையால் ஞானம்வந்தமை உணர்த்துதலின் அதிகார இயைபுண்மை அறிக. (82)

## 8. அவவேடம்

அஃதாவது பயன்படாத வேடம் என்பதாம். தவத்தோர் வேடம்பூண்டும் சிவனடியைக் காணுதலாகிய பயன்தராத வேடம் என்க. இதனை ஆறு

மந்திரங்களான் உணர்த்தத்தொடங்கி முதற்கண் அவவேடம் உலகை மருட்டற்கே என்பதை உணர்த்துகின்ருர். அருளைப்பெற்று ஞானம் வரப் பெருதார்வேடம் அவமேயாதலின் அதிகார முறை யையும் இனிது காண்க.

**ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்**
**வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்**
**ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்**
**தேடியுங் காணீர் சிவனவன் தாள்களே:** 1655

இம் - எனின், அவவேடம் தாங்கி அவனியை வெருட்டும் பேதையர்க்கு அறிவித்தல் நுதலிற்று

இ - ள்: ஆடம்பரங்களைத் தாங்கிச் சோறுண்டு வாழ்தலையே பயனுகத் தவவேடங்களைத் தரித்து உலகை வெருட்டும் பேதைகளே! நீங்கள் இவற்றை விட்டு, இறைவனை நோக்கி அன்பு மேலீட்டால் ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும் தலங்கள்தோறும் தேடியும் சிவன் திருவடிகளைக் காணீர் என்றவாறு.

பேதைகளே! ஆடம்பரமாக வேடம் தாங்காது. உண்மை யன்பு கொண்டு றைவனடியைத் தரிசியுங்கள் என்பதாம்.

ஆடம்பரம் – பிறர் இவர் சிறந்த அடியார் என்று மதிப்பதற்காகச் செய்யும் தோலுடையும் சடை முடியும் முதலான வேடங்கள், அடிசில் – சோறு அடிசில் உண்பான் பயன் - வயிறு வளர்த்தல் ஒன்றையே பயனுகக்கருதி. வேடங்கள் - முற்கூறிய பத்து அடையாளங்களையும் தாங்கும் சிவனடியார் வேடம்.

வெருட்டிடும் - இவன் மெய்யடியானென்று உலகவரை நம்பச்செய்து மயக்குகின்ற. பேதைகாள் - உலகை ஏமாற்றுவதாக எண்ணித் தாம் ஏமாந்து போதலின் அவர்களை அறிவிலிகாள் என்றார்.

ஆடுதல் முதலியன இறைவன்மீது வைத்த எல்லையில்லா அன்பால் விளையும் மெய்ப்பாடுகள். சிவனவன் - சிவன் ஈண்டு வாளாநின்றது.

இம்மந்திரம் பொய்வேடத்தாற்பயனில்லை; மெய்ம்மையாம் அன்பைச் செய்யுங்கள் என அறிவித்தலின் அவவேடத்ததாயிற்று. (83)

**ஞானமில் லார்வேடம் பூண்டிந் த நாட்டிடை**
**ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்**
**மான நலங்கெடும் அப்புவி யாதலால்**
**ஈனவர் வேடங் கழிப்பித்தல் இன்பமே.** *1656*

இம் - எனின், போலித் தவத்தோரின் அவவேடத்தை அகற்றல் இன்றியமையாததென உணர்த்தல் நுதலிற்று.

இ - ள் : சிவஞானம் பெறுதார் தவவேடத்தை மட்டும் பூண்டு இந்நாட்டில் இழிவான காரியங்களைச் செய்து, பிச்சையெடுத்து உண்டு உயிரோடு இருப்பினும் அந்தப்பூமி பெரிய நன்மைகள் அழியும் ஆதலால் இழிசனர்களாகிய அவர்கள் வேடத்தை அகற்றுதல் இன்பமாம் என்றவாறு.

அவவேடத்தர் வாழும் பூமி வளங்குன்றும் ஆதலால் அவர்களை அகற்றுதல் இன்றியமையாததாகும் என்பது கருத்து.

ஈனம் - கூடாவொழுக்கமும் கொலேயுங்களவும் முதலான இழிசெயல்கள், அப்புவி மான நலங்கெடும் என்க. அவர்கள் வேடத்தைக் கழித்து உலகவரில் ஒருவராக்கினல் அவர்களால் வரும் தீங்கு குறையும் என்க. (84)

**இன்பமுந் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள**
**நன்செயல் புஞ்செய லாலந்த நாட்டிற்காம்**
**என்ப இறைநாடி நாடோறும் நாட்டினின்**
**மன்பதை செப்பஞ் செயின்வையம் வாழுமே. 1657**

இம் - எனின், அவவேடமுடையாரை அகற்று தல் அரசன் கடமை எனல் நுதலிற்று.

இ - ள்: இன்பமும் துன்பமும், நாட்டு மக்களிடத்துள்ளன. புண்ணிய பாவங்களால் அவர்கள் வாழ்கின்ற நாட்டிற்கு அவையாம் என்று முதியோர் சொல்வர். ஆதலால் அரசன் இதனை நன்கு ஆராய்ந்து நாடோறும் நாட்டில் வாழும் மக்களைச் செப்பஞ் செய்யின் உலகம் வாழும் என்றவாறு.

இன்பத் துன்பங்கள் மக்களிடை உள்ளன. அவை புண்ணிய பாவங்களால் உண்டாவன; ஆதலால், அரசன் அதனை ஆராய்ந்து அறிந்து திருத்துதல் வேண்டும் என்பதாம். (85)

**இழிகுலத் தோர்வேடம் பூண்பர்மே லெய்த**
**வழிகுலத் தோர்வேடம் பூண்பர்தே வாகப்**
**பழிகுலத் தாகிய பாழ்சண்ட ராளுர்**
**கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே. 1658**

இம - எனின், வேடம் பூணலின் பயனுணர்த்து தல் நுதலிற்று.

இ - ள் : தாழ்ந்த குலத்து உதித்தோர்கள் தாம் மேல்நிலை எய்துவதற்காக வேடங்களைப் பூண்பர். பரம்பரையாக வந்த உயர்குலத்தோர்கள் தாம் தெய்வமாவதற்காக வேடங்களைப் பூண்பர். பழிக்கப்பெறும் குலத்திலுதித்த பாழான சண்டாளர் வேடம் பூணின் அவர்கள் கழிக்கத்தக்க குலத்தோர்களாவர்; ஆதலால் நீக்கத்தக்கவர்களே என்றவாறு.

தாழ்ந்தோர் வேடம் பூணல் தாம் உயர. உயர்ந்தோர் வேடம் பூணல் தாம் தெய்வமாக. பாழ்குலத்தோர் வேடம் பூணின் பழி முதலிய விளைதலின் அவர்கள் நீக்கத்தக்கார் என்பது கருத்து.

'குலத்தளவே ஆகுமாம் குணம்' என்பவாகலின் தாழ்ந்த குலத்தோர் தவவேடம் பூண்டு வேடத்திற்கு இயைய ஒழுகுவாராயின், உயர்ந்தோராக மதிக்கப் பெறுவர் என்பார் இங்ஙனம் கூறினார். அங்ஙனமே உயர்ந்த குலத்தோர் வேடம் பூணின் தெய்வமாகவே போற்றப்படுவர் என்பதாம். வழி குலத்தோர் - வழி வழியாகத் தவஞ் செபம் பூசைசெய்யும் மரபில் வந்தோர்.

பழி குலம் - செய்யும் தீமைகளால் உலகம் பழிக்கும் குலம். பாழ் சண்டர் - தம் வாழ்நாளைப் பாழ் செய்து கொள்ளும் சண்டாளர். இவர்கள் சாதியில் சண்டாளரும், கன்மத்தால் சண்டாளருமென இரு வகையார். அவர்களுள் சாதியால் இழிந்த சண்டாளர்கள் வேடம் பூண்டு உயர்வர் என்றமையின் ஈண்டுக் கூறப்பட்டவர்கள் உயர்குடியிற்பிறந்தும் ஒழுக்கந் தவறிய கன்ம சண்டாளர்களையே என்க. பாசண்ட

ரானூர் எனப் பாடங்கொள்ளின் சமய உண்மை அறியாத பாசண்டிகள் ஆனூர் என்க.

இம்மந்திரம் வேடம் பூணற்குரியாரையும் பயனை யும் உணர்த்தி, பூணத்தகார் பூணலாகாது என்றலின் இவ்வதிகாரத்திற்கு இயைபுடைத்தாயிற்று. (86)

**பொய்த்தவஞ் செய்வார் புகுவர் நரகத்துப்**
**பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகார்**
**பொய்த்தவம் மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ்**
**சத்திய ஞானத்தால் தங்குந் தவங்களே. 1659**

இம் - எனின், பொய்த்தவப் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பொய்யான தவவேடத்தைப் பூண்டவர், செய்யும் பாவங்களான் நரகத்துப்புகுவர். அங்ஙனம் பொய்த்தவத்தைத் செய்தவர் ஒரு போதும் புண்ணிய ராகார். பொய்த்தவமானது மெய்த்தவம் போல்வ தாய், உலக போகத்துட் சில இவர்கட்குப் போக்கிய மாம் அவ்வளவே. உண்மை ஞானத்தாலே தவம் சித்திக்கும் என்றவாறு.

பொய்த்தவம் செய்வார் புண்ணியராகார்; நரகம் புகுவர். அவர்கள் பொய்த்தவம் பூண்பது தவத்தில் மறைந்திருந்து உலகபோகங்களிற் சிலவற்றை நுகர் வர் அவ்வளவே பயனுவது; உண்மைஞானம் பெற்ற வேடத்தாலேயே தவம் தங்கும் என்பது கருத்து. இதனுல் அதிகார இயைபும் காண்க.

புண்ணியராகாரேல் என்ற பாடமும் உண்டு. இதற்குப் பொய்வேடத்தர் புண்ணியச்செயல் புரியாத

வர்களாயின் அவர்கள் செய்யும் பொய்த்தவம் மெய்த் தவம் போல்வதாய் உலகபோகத்திற் சில நுகர்ச்சித ஆம் என்க. (87)

**பொய்வேடம் பூண்பர் பொசித்தல் பயனாக**
**மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர்**
**பொய்வேடம் மெய்வேடம் போலவே பூணினும்**
**உய்வேட மாகும் உணர்ந்தறிந் தோர்க்கே. 1660**

இ - னின், பொய்வேடமும் நல்லுணர்வுடன் பூணப்படுமாயின் மெய்வேடமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உண்டல் ஒன்றையே பயனாகக் கருதிப் பொய்யாகத் தவவேடம் பூண்பர்; உண்மையாகத் தவவேடம் பூண்பவர்கள், கையில் பிச்சை ஏற்றுண்டு உயிர் தாங்குவர், பொய் வேடத்தை மெய் வேடமே போலப் பூணினும், வேடத்தின் உயர்வை யும், உண்மையும் உணர்ந்து அறிகின்றவர்களுக்கு அதுவே அவர்கள் கடைத்தேறும வேடமாம் என்றவாறு.

தவத்தின் பயன் ஞானம் என்பதை உணர்ந்து திருவடிஞானம பெறுவதற்கு என்ற எண்ணத்துடன் பூணின் பொய்வேடமும மெய்வேடமாகும் என்பது கருத்து.

மக்கள் தவவேடத்திற்கு மதிப்பும் அன்பும் அளிப்பதால் வேடத்தைக கண்டவுடன் நிரமப உணவை அளிப்பர். அவர்கள் விலாப்புடைக்கத் தின்று திரிவர். ஆதலின் பொசித்தல் பயனாகப் பொய்வேடம் பூண்பர் என்றார்.

உண்மை வேடம்பூண்டு உயர்தவத்து நிற்போர் தவம் இடையறுமைப்பொருட்டு உயிர் உடலில் தங்கியிருக்கும் அளவிற்கே உணவுண்பர், அதனையும் கைப்பிச்சையாக ஏற்பர் என்பார் 'மிகுபிச்சை கைக்கொள்வர்' என்றார்.

உணர்தலாவது இதுதான் உயர்நெறியென்று தெளிதல்.

இம் மந்திரம் உய்வேடம் பொய்வேடம் இவற்றின் இயல்பும் பயனும் உணர்த்துதலின் அதிகார இயைபு காண்க.

இங்ஙனம், இவ்வாறு மந்திரங்களானும். அன்பால் ஆடிப் பாடி. அழுது அரற்றுதலும், உண்மை ஞானமும், உணர்ந்தறிலுமே உண்மைத்தவ ஒழுக்கம்; ஏனைய ஆடம்பரமான, தவமறைந்து அல்லவை செய்து உலக போகங்களைத் துய்ப்பதற்கான பொய் வேடங்களாம்; பொய்வேடமுடையரால் புவனி வளம் குன்றுதலின் அவர்களை அகற்றவேண்டியது அரசன் கடமை என்பது அறிவிக்கப்பெற்றமை காண்க. (88)

## 9. தவவேடம்

அஃதாவது, உண்மைத் தவத்திற்கு இயைவதான வேடங்கள். அவை விபூதியும், உருத்திராக்கமும், திருவைந்தெழுத்தும், குண்டலமும், ஆறு கட்டியும் முதலாய பத்து, இவைகளை முறையே உணர்த்துகின்றது இந்த அதிகாரம், முன்னர், வேடம்பூணத் தகாதார் வேடம்பூண்டு பயனின்

மையை அவவேடத்தால் உணர்த்திய ஆசிரியர், சாதனங்களை இவ்வதிகாரத்தில் நான்கு மந்திரங் களால் உணர்த்துகின்றார். அதிகார, இயைபும் இதனால் காண்க.

**தவமிக் கவரே தலையான வேடர்**
**அவமிக் கவரே யதிகொலை வேடர்**
**அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்**
**தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே. 1661**

இம் - எனின், சிவவேடங்கள் தவமிக்கோர்க்கே தாங்கத்தகுவன என்பதுணர்த்துல் நுதலிற்று.

இ - ள் : தவத்தில் சிறந்தவர்களே முதன்மை யான வேடம் பூண்டவர்கள், அங்ஙனமன்றி அவ மாகிய வேடத்தைப் பூண்டவர்கள் சிறந்த கொலை காரர்கள், அத்தகைய கீழ்மை மிக்கவர்கள் வேடத் திற்குப் பொருந்தார், அவ்வேடம் தவத்தில் சிறந்தார்க் கன்றித் தாங்கமுடியாது என்றவாறு.

அவமிக்கவர் கொலைகாரர்களாதலின், தவம் மிக்கவரே வேடம் தாங்கற்கு உரியார் என்பது கருத்து. எனைய வெளிப்படை. (89)

**பூதி யணிவது சாதன மாதியிற்**
**காதணி தாமிர குண்டலங் கண்டிகை**
**ஓதி யவர்க்கும் உருத்திர சாதனந்**
**தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. 1662**

**யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி**
**தோகைக்குப் பாசத்துச் சுற்றுஞ் சடையதொன்**
**றாகத்து நீறணி யங்கக் கபாலஞ்**
**சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. 1663**

இ-ள் - எனின், தவவேடம் இவை என உணர்த்துதல் நுதலின.

இ-ள் : முதற்சாதனம் திருநீறு பூசுவதாம். காதில் அணியும் அணியோ செம்பினாலியன்ற குண்டல மாம். கழுத்தணி கண்டிகையாம். வேதாகமங்களை ஓதியவர்களுக்கு உரியன சிவ சின்னங்களாம். குற்ற மற்ற சிவயோகிகளுக்குரிய சாதனங்களை ஆராயின், உட்கட்டாகிய கோவணமும், பொக்கணமும் ஆம். மயிலிறகு போன்ற சட்டையும் சடையைச்சுற்றும் கயிறு ஒன்றுமாம். மேனியில் நீறணிவதும், கைகளில் கபாலமும் மாத்திரைக் கோலாகிய பிரம்புமாம் எ-று.

தவத்தோர்க்குத் திருநீறு அணிவது முதலியன சாதனங்களாம்; யோகியர்க்கு விபூதியும், தாமிர குண்டலமும், கண்டிகையும், கோவணமும், பொக் கணமும், 'குப்பாயமும்' சடைச்சுற்றும், கையில் கபாலமும், மாத்திரைக் கோலாகிய பிரம்பும் சாதனங் களாம் என்பது கருத்து.

ஆதியில் சாதனமாவது பூதி அணிவது எனக் கூட்டுக. தாமிரம் - செம்பு, கண்டிகை - உருத்திராக்க மாலை. உருத்திர சாதனம் - சிவ சாதனங்கள். உட் கட்டு - அரையில் கட்டப்படுவதாகிய கோவணம். கஞ்சுளி - பொக்கணம்; கவளி எனலுமாம். தோகை குப்பாசம் - மயில் இறகு போன்ற சட்டை குப்பாசம் குப்பாயம் என்பதன் போலி. ஆகத்து அணி நீறு. அங்கக் கபாலம் - மண்டையோடு; ஹஸ்தம் என்பதன் வடமொழித்திரிபு கத்தம, ஸ்ரீஹஸ்தம் - சீகத்தம், - திருக்

கரம். மந்திர உருவேற்றிய கைப்பிரம்பு. மாத்திரை திண்பிரம்பு என்க. (90. 91)

**காதணி குண்டலங் கண்டிகை நாதமும்**
**ஊதுநற் சங்கும் உயர்கட் டி கப்பரை**
**ஏதமில் பாதுகம் யோகாந்த மாதனம்**
**ஏதமில் யோகபட் டந்தண்டம் ஈரைந்தே.** 1664

இம் - எனின், தவவேடத்தார்க்கு உரிய பத்து அடையாளங்களையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; காதுகளில அணியத்தக்க குண்டலமும் உருத்திராக்க கண்டிகையும், நாதவொலியாகிய ஐந் தெழுத்தும், ஊதப்படுகின்ற நல்ல சங்கமும், உயர்ந்த ஆறுகட்டியும், கப்பரையும், குற்றமில்லாத பாதக் குறடும் யோகநிலைக்கழகான ஆசனங்களும், குற்றமில் லாத யோகபட்டிகையும், யோக தண்டமும் ஆகிய பத்துமாம் என்றவாறு.

இப்பத்தும் தவத்தினர் அடையாளமாம் என்பது கருத்து,

உயர்கட்டி ஆறுகட்டி. காமம் குரோதம் மோகம் மதம் மாறிசரியம் எனற அறையும் கட்டியவர்கள் என்றுரைக்க அடையாளமாகக் காதில் ஆறு குகுண்டுகளைக் கோத்து அணியப்பெறும் ஒருவகைக் காதணி. கப்பரை - உணவேற்றுண்ணும் கபாலம் யோகாசனங்கள் முன்னர்க் கூறப்பட்டன. யோக பட்டம் யோக மிருக்கும் காலத்தில் முதுகு ஞான்று விழாமல் முழங்காலையும் முதுகையும் சுற்றிக் கட்டப் பெறும் பட்டிகை. தண்டம் - யோகதண்டம். இது

கழுத்துச் சோராதவண்ணம் முகவாய்க்கட்டையிரோ அல்லது இரு கட்கங்களிலுமோ முட்டுக்கொடுக்கும் கவைவடிவான தண்டம். அடையாளங்களை அறிவிப்பதால் இம்மந்திரம் தவவேடத்தினதாதல் காண்க.

இதுவரை நான்கு மந்திரங்களாலும் சிவயோகியர் களுக்குரிய சாதனங்களும், அவை அவவேடத் தாருக்கு ஆகாமையும், தவவேடத்தார்க்கே தனிச் சிறப்பாகும் என்பதும் உணர்த்தப்பெற்றன. (92)

## 10 திருநீறு

அஃதாவது திருநீறு அணிய வேண்டியது இன்றியமையாமை எனல் உணர்த்துவது. திருநீறு சைவ சாதனங்களில் ஒன்றெனை முன் அதிகாரத்து ஓதப்பெற்றமையின் அதிகார இயைபுகாண்க.

**நூலுஞ் சிகையும் உணராநின் மூடர்கள்**
**நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்**
**பாலொன்றும் அந்தணர் பார்ப்பார் பரமுயிர்**
**ஓரொன் றிரண்டெனில் ஓங்காரம் ஓதிலே** 1665

இம் - எனின், நூல், சிகை இவற்றின் தத்துவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நூல், சிகை இவை எவற்றை உணர்த் துவன என்ற உண்மையை அறியமாட்டார்கள் நிர் மூடர்களாகிய மக்களிற்சிலர். நூலாவது வேதாந்தம்; நுண்ணிய சிகையாவது ஞானம்; அதன்பால் ஒன்றி ஒழுகும் அந்தணரே பார்ப்பார். இவர்கள் ஓங்காரம்

ஓதில் அது ஒன்றும் இரண்டாய்ப் பரமும் உயிருமாம் என்றவாறு.

நூல் - பூணுநூல். அதனை அணிவதன் அடிப்படைக் கருத்து வேதாந்தத்தை உணர்ந்தவன் என்பதாம். குடுமி தரிப்பது வேதாந்தத்தால் விளையும் நுண்ணிய ஞானத்தை உணர்த்துவதாம். இவற்றையுடைய அந்தணர் உயிராகிய தன்னையும், தலைவனையும் காண்பராதலின் ஓங்காரம் ஓதுவர் என்பது கருத்து.

சிகை - குடுமி, ஓங்காரம் அகாரமாகிய ஒன்றும் உகாரமாகிய ஒன்றும் இயைந்ததொன்றுதலின் அவை பரமும் உயிருமாம் என்பது. இம்மந்திரம் திருநீறு என்னும் அதிகாரத்ததாயினும் திருநீற்றோடு ஒருங்கு வைத்தெண்ணப்படும் நூலும், சிகையும், பிரணவத் தியானமுமாகிய அந்தணரொழுக்கம் உணர்த்திய தாதலின் இங்கு இடம்பெற்றது. (93)

**கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை**
**மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகில்**
**தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி**
**சிங்கார மான திருவடி சேர்வீரே.** *1666*

இ - ள்: இனி, திருநீறு அணிவதன் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவபெருமான் பூசும் திருநீற்றை ஒளி கெடாவண்ணம் பூசி மகிழ்வீராயின், பண்டைய வினைகளும் நும்பாற் றங்கா; சிவகதி நும்மைவந்துசாரும்; ஆனந்தமயான திருவடியை அடையலாம் எ - று.

திருநீறணியின் வினை கெடும்; சிவகதி சேரலாம்; சாயுச்சியம் பெறவாம் என்பது கருத்து.

கங்காளன் – முழு எலும்பைக் கையில் தண்டமாகவும், எலும்புகளை மாலையாகவும் அணிந்த சிவ சிவபெருமான். சர்வசங்கார காலத்து எல்லாம் தன்னுள் ஒடுங்க, சிவபெருமான் மகாதாண்டவம் செய்தருளினன். அப்போது அப்போது அவன் மேனியிற் படிந்த சாம்பர் விபூதியாயிற்று ஆதலின் ' கங்காளன் பூசும் திருநீறு ' என்றார்.

உயிர்களைத் தீவினை வந்து பற்றாத வண்ணம் காக்கும் கவசம் போல்வதாகலின் ' கவசத் திருநீறு ' என்றார். மங்காமல் – தம்முடைய திருமேனியின் ஒளி மிக. நீற்றின் வெள்ளொளி கெடாமல் எனலுமாம்.

வினைகள் மூன்றாதலின் ' தங்கா ' எனப்பன்மையாற் கூறினார். தங்கா – உயிரைப்பற்றி நில்லா. சிங்காரம் – மகிழ்ச்சி அல்லது ஆனந்தம். அழகு என்பர் சிலர். திருவடி என்றது ஏகனுதலாகிய சாயுச்சிய முத்தி.

மங்காமற்பூச மகிழ்வரேயாமாகில் எனவும், திருவடிசேர்வரே எனவும் பாடங்கொள்ளின் அதற்கேற்ப் மகிழ்வாராயின் திருவடிசேர்வர் எனப் படர்க்கை யாக உரைக்க.

இம்மந்திரம் திருநீறணிவதன் பயனுணர்த்துதலின் அதிகார இயைபு விளங்குகின்றமை காண்க. (94)

அரசுட னுலத்தி யாகும் அக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி
நிரவயன் நின்மலன் தான்பெற்ற நீதர்
உருவம் பிரமம் உயர்குல மாகுமே 1667

இம் – எனின், திருநீறு அந்தணர்குலம் இவற்றை விளக்குதல் நுதலிற்று.

இ – ள் : அந்த க்ஷாரம் என்னும் விபூதியானது. அரசு; ஆல், அத்தியாகிய வேள்விக்குரிய சமிதைகள் மூன்றும் தம்மோடு விரவிய சிவவேள்விக்கனலில் தம் உருமாறி விளைந்த ஒன்றாய்; உருவில்லாதவனும் பல மற்றவனுமாம சிவபெருமானுடைய திருவடியைப் பெற்ற நீதிமான்கள் உருவம், பிரமத் தியானத்தோடு கூடிய உயர்ந்த குலத்தினதாகும் என்றவாறு.

திருநீறு சிவவேள்விச் சம்பலாகும்; அதனைப் பூசிய திருவடி பெற்ற சீலர்களே பிரமத்தை உணர்ந்த உயர்குலத்தோர் என்பது கருத்து.

அரசு அத்தி ஆல் என்பன சிவவேள்விக்குரிய சமித்துக்கள் (சுள்ளிகள்). அக்காரம் - அந்த க்ஷாரம் என்னும் திருநீறு. காரம் என்பது க்ஷாரம் என்பதன் திரிபு. இது திருநீற்றின் வகையுள் ஒன்று.

இம்மந்திரத்திற்கு. சித்தர்மரபில் காளைக்கன்றோடு கூடிய ஆவின் லத்தியே கனலோடு விரவி உருமாறிக் காரமாகிறது. காரம் – தட்டார் பற்றுசுடன் வைக்கும் கலவைபபொருள். இது அதுபோல உயிரைப் பிரமத்தோடு ஒன்றச்செய்வது என உரைக்கப்படுவதும் உண்டு.

நிரயன் - உறுப்பில்லாதவன் ; எனவே உருவிலி என்றவாரும். நீதர் - நீதியே வடிவானவர். பிரமன் உயர்குலம - பிரமகுலம் ; என்றது பிரமத்தோடு ஒன்றியகுலம் என்றவாறும். அஃதாவது பிரமத்தியானம் செய்து பிரமமேயாய் ஒன்றிய குலம் என்பதாம்.

இது திருநீறு அணிவதால் பிரமகுலமாகலாம் என்றலின் அதிகார இயைபுதோன்றல் காண்க. (95)

## 11. ஞானவேடம்

அஃதாவது ஞானத்திற்கே உரியது வேடம் என்பதை வலியுறுத்தி, ஞானப் பெருதார் பூணும் வேடத்தால் பயனில்லை என்பதை விளக்குவது. தவவேடம் ஞான வேடம் ஆதலே மரபு என்பதை விளக்குதலின் முன்னைய அதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. இதனை எட்டு மந்திரங்களான் உணர்த்தத் தொடங்கி முதற்கண் வேடம் ஞானிகளுக்குச் சிறப்பினைத்தருவது என்பதை வலியுறுத்து கின்றார்.

**ஞானமி லார்வேடம் பூண்டும் நரகத்தர்**
**ஞானமுள் ளார்வேடம் இன்றெனின் நன்முத்தர்**
**ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பால்**
**ஞான முளவேட நண்ணிநிற் பாரே. 1668**

இம் - எனின், சிவனடியார் வேடம் தாங்கிச் சிவனிடத்து அன்புசெய்யின் ஞானம் உளதாம் எனல் நுதலிற்று.

இ - ள் : சிவஞானப்பேறில்லாதார், சிவனடியார் வேடந்தாங்கினும் நரகத்தாராவர், சிவஞானப்பேறு

உடையார் சிவனடியார்வேடம் தாங்காவிடினும் நல் முத்தரேயாவர்; தமக்குச் சிவஞானப்பேறு உண்டாக வேண்டும் என்ற விருப்புடையோர் சிவபெருமானிடம் என்றும் நீங்காத ஞானமுள்ள வேடத்தைத் தாங்கி நிற்பாராக என்றவாறு.

இறைவனிடம் என்றும் நீங்காத ஞானமுடையராகி வேடத்தைத்தாங்கின் சிவஞானம் உண்டாம்; அதனால் நன்முத்தராவர் என்பது கருத்து.

இன்றெனினும் என உம்மை விரிக்க; வேடம் பூணின் அது என்றும் இறைவனையே நினைப்பிக்குமாதலின் வேடம்பூணல் இன்றியமையாததாகும். வேடம் பூணல் இன்னதற்கென்ற ஞானமில்லாதார். குழந்தை அரசவேடம் பூண்டாற்போன்றும். பித்தன் அமைச்ச வேடம் பூண்டாற்போன்றும். பூணின் இவரும் பய னெய்தார் என்றவாறு. வாரவேடம் நினைப்பித்தீர், என்ற சேரமன்னன் கூற்றுகவரும் சேக்கிழார் திரு வாக்கும் இக்கருத்தை நன்கு விளக்குதல் காண்க. திருமூலரும் 'வேடநெறி நில்லார் வேடம்பூண்டு என் பயன்' என்பர்.

ஞானத்தார் ஞானத்தால் சிவனையே நாடுவராதலின் அவர்கட்கு அவனை நினைப்பிக்கும் வேடங்களைப் பூணல் வேண்டுவதின்றும். ஆதலின் "வேடம் இன்றெனின் நன்முத்தர் என்றார்."

நக்கன் - சிவன், நக்னன் – நிருவாணி; இதன் தமிழாக்கம் நக்கன். வேடம் நண்ணி நக்கன்பால் நிற்பார் எனக் கூட்டுக. இம்மந்திரம் ஞானவேடத்தின் படனும், ஞானவேடம் பூண்பார் ஞானம் எய்துதற்

குரிய உபாயமும் உணர்த்துதலின் இவ்வதிகாரத்தது ஆயிற்று. (96)

**புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை**
**நன்ஞானத் தோர்வேடம் பூணர் அருள்நண்ணித்**
**துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்**
**பின்ஞானத் தோரொன்றும் பேசகில் லாரே.** 1669

இம் - எனின், புன்ஞானத்தோர் - நன்ஞானத்தோர் வேறுபாடும், நன்ஞானத்தோர் துன்ஞானத்தோர்க்கு ஒன்றும் உணர்த்தார் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இழிந்த ஞானமுடையோர் - ஞானிகள் வேடத்தைத் தாங்கியும் அதனால் ஆவதொரு பயனும் இல்லையாம். நல்ல ஞானமுடையார் திருவருள் பெற்று அதனால் வேடம் பூணமாட்டார்கள். தீரிபு உணர்ச்சியுடையயோர் சமயக்குற்றமுடையோர் ஆவர். ஞானி பின்பு அவர்களோடு ஒன்றும் பேசார்கள் என்றவாறு.

துன் ஞானிகள் சமயக்காழ்ப்புடையோர் ஆதலின் அவர்களுக்கு ஞானிகள் ஒன்றும் உரையார்; ஆதலால் புன்ஞானியர் நன்ஞானியர்வேடம் பூண்டும் பயன் இல்லை: நன்ஞானியர் வேடம் தாங்கவேண்டிய இன்றியமையாமையும் இல்லை என்பது கருத்து.

புன்ஞானம் - புன்னெறியதனிற்செல்லும் அறிவு; உலகு உடல் இவற்றைப்பற்றி விளைவதும் அழியுந் தன்மையதுமான அறிவு. இதனைச் சிற்றறிவு என்பாருமுளர். சிற்றறிவு உணர்த்த உணருவதான அறிவு,

அது ஆன்மாவிற்கு இயற்கையாதலின். அது எந்நிலையிலும் புன்ஞானமாவான் செல்லும். ஆகவே, பொது வகையால் அங்ஙனம் கொள்ளாது கருவிகரணங்களைப் பற்றி விளைவதான இழிந்தஞானம் என்க.

கண்டதே காட்சி கொண்டதே கோலமாய் எல்லாம் கண் இன்ப நுகர்ச்சிக்கே என்று உணரும் இழிதகையறிவுடையார், சிவவேடம் தாங்குதலின் லட்சியத்தை உணரார். ஆகலின் அவர்கட்கு வேடம் தருவதொரு பயனுமில்லை என்பார் " புன்ஞானத்தார் வேடம் பூண்டும் பயன் இல்லை " என்றார்.

நன்ஞானம் - திருவடியைப் பற்றியே நிகழ்வதான திருப்பெருகு சிவஞானம். அதனை உடையார் நன் ஞானத்தார். அவர்கள் என்றும். சிந்தை இடையறு அன்பும் நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் உடையராதலின் அவர்கட்கு வேடம் பூண வேண்டுவதின்றாம். வேடம் பூணுதலின் பயனாகிய திருவருட்பேற்றைப் பெற்றமையால் என்பது.

துன்ஞானம்: நம்பனருளாமையால் நெறியல்லா நெறிககண் சென்றும், மாறி உணர்ந்தும் மயங்குவதான அறிவு. அதனை உடையோர் துன்ஞானத்தோர். அவர்கள் பரிபாகமின்மையால் ஒன்றை ஒன்றாகவும், தேர்ந்து தெரியாது பற்றியதையே பற்றிநின்றும் உணர்பவர்கள் ஆதலின் அவாகளுக்கு உண்மை ஞானத்தை உணாத்தின் அது செவிடன் காதில் ஊதிய சங்குபோலப் பயன்படாமை மட்டுமன்றிக் "காணுதாற் காட்டுவான் தான்காணான்" என்ற குறளுக்கு இலக்கியமாய் இழிவும் விளைகும் ஆதலின்

ஞானத்தோர் துன்ஞானத்தோர்க்குப் பின் ஒன்றும் பேசகில்லார் என்றருளினர்.

பின்ஞானத்தோர் என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, பின்னிய ஞானத்தோர் எனப் பொருள் கண்டு அத்துவிதம் உரைப்பதாம் என்பர் சிலர், ஞானத்தோர் பின் ஒன்றும் பேசகில்லாரென் இயைத்து ஞானிகள் அனுபவ முதிர்ந்து 'நானிவளாம் பகுதிப்பொற்பு ஆரறிவார்' என்று இருத்தலின் இன்பத்து முழ்கி உரையவிந்து இருப்பர் எனக் கொள்ளின் ஞானிகள் அனுபவம் கூறியதாம் என்க. சிறந்தது கொள்க.

இம்மந்திரம் ஞானவேடம் தாங்குதலின் பயன் அதிகாரி பேதத்தால் வேறுபடுதலை அறிவித்தலின் அதிகார இயைபு விளங்கநிற்றல் காண்க. (97)

**சிவஞானி கட்கும் சிவயோகி கட்கும்**
**அவமான சாதனம் ஆகாது தேரின்**
**நவமா மவர்க்கது சாதன நான்கும்**
**உவமான மில்பொருள் உள்ளுற லாமே. 1670**

இம் - எனின், சிவஞானியர்க்கும் சிவயோகியர்க்கும் சாதனம் வேண்டுவதில்லை; சாதகர்க்கே வேண்டுவது என்பதை வலியுறுத்தல் நுதலிற்று.

இ - ள்: ஆராயுமிடத்துச் சிவஞானிகளுக்கும் சிவயோகிகளுக்கும் பயனற்றதான சாதனங்கள் ஆகாவாம். புதிதாகச் சாதகஞ்செய்வாருக்கு அச்சாதனங்கள் நான்கினாலும், தன்னேரில்லாத் தலைவன் உயிர்க்குயிராகப் பொருந்துதலைப் பெறலாம் என்றவாறு.

சிவஞானியரும் யோகியரும் பயனுற்ற பெரி யோர்கள் ஆதலின், அவர்கட்குச் சாதனங்களால் பயனில்லை. சாதகர்கள் படிமுறையே பழகுதலால் அவர்கள் முடிவாகச் சிவஞானம பெற்று. சிவத்துவ விளக்கம் பெற அவை நான்கும் இன்றியமையா தனவாம் என்பது கருத்து.

சிவஞானியரும் சிவயோகியரும் முடிந்த பயனுகிய திருவடிப்பேறு ஒன்றுக்கே உரியவர்கள் ஆதலின் அவர்கட்குச் சரியையாதி சாதனங்கள் உண்மையில்லை யினும் உபாயமில்லையினும் வேண்டப்படுவது இன்ரும் என்பார் 'சிவஞானிகட்கும் சிவயோகிகட்கும் அவ மான சாதனம் ஆகாது, என்ருர்.

நவமாம் அவர் - புதியவர், அவரவர் நால்வகை நெறிக்கண்ணும் நின்று சாதிப்போர். வழிச்செல் வோர்க்கே சாதனங்கள் இன்றியமையாதன என்பார் "நவமாம் அவர்க்கு அது சாதனம் நான்கும் உவமான மில் பொருள் உள்ளுறல் ஆமே" என்ருர்.

உவமானம் இல்பொருள் - பரசிவம். தன்னேரில் லான்; தனக்கொப்பார் யாரும் இல்லாதான் என்ற வாறு, நான்கினுலும் பொருளை உள்ளுதல் ஆம் என உருபுகள் விரித்துரைக்க.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றிச் சிவஞானி யர்க்கும் சிவயோகிகட்கும் தீச் செயல்களாகிய சாதனங்கள் பொருந்தான, அவை அவமாம்; அவர்கட்குச் சீலம் நோன்பு செறிவு அறிவு என்ற சாதனங்கள் நான்கு ஆம். இவற்ருல் வழிபடுவோர் உள்ளத்துத் தனக்கு உவமை இல்லாதாளுகிய சிவன் வீற்றிருந்தருள்வன் எனவும் உரைகாண்பர்.

சிவஞானியர்க்குக் கீழ்ப்போன மூன்று சாதனங்களும், சிவயோகியர்களுக்குக் கீழ்ப்போன இரண்டு சாதனங்களும் பொருந்துவதால் பயனில்லை ஆகலானும், ஆற்றொழுக்காகச் செல்லும் பொருள் அமைதியை வேறுபடுத்தி வேண்டுவ வருவித்து உரைத்து இடர்ப்பட வேண்டாமையானும், அந்த உரையை மதித்துக் கொள்க. தேரினவமாம் அவர்க்கு என்ற தொடரை, தேரில் அவமாம் அவர்க்கு எனத் திரித்துப் பிரிந்தமையும், முன்னுள்ளோர் இருவர் அவமாம் அவர்க்கு எனப் பிரித்து மனிதப்பிறப்பாலாம் பயனை அடையாத அவர்க்கு என்றும், பாபம் விளைக்கக் கூடிய என்றும் குறிப்புரைத்ததை அப்படியே கொண்டமையும் ஆகிய இவற்றால் வந்த மயக்கமாம் எனத்தெளிக.

நால்வகைச் சாதனங்களும் சாத்தியமாகிய யோக ஞானங்களைப் பெற்றோர்க்கு வீண் என்றும், சாதகர்க்கு இறையுணர்ச்சியைப் பயக்கும் என்றும் கூறுவதால் இம்மந்திரம் அதிகார இயைபு விளங்க நிற்றல் காண்க. (98

**கத்தித் திரிவர் கழுவடி நாய்போற்**
**கொத்தித் திரிவர் குரக்களி ஞானிகள்**
**ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே**
**செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே** **1671**

இம் - எனின், சிவஞானியர்க்கும், அவஞானியர்க்கும் உள்ள வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : குரக்களி ஞானிகள் கழுமரத்தடியில் இருக்கும் நாய்போலக் கத்தியும், கழுதுபோலக் கொத்தியும் திரிவர். சிவஞானியர் ஐம்பொறிகளும் – உடலும் நுகர்ச்சிக்குத் தக்கனவாக ஒத்திருந்தும் அவற்றால் போகங்களை நுகராது இறந்தார்போலத் திரிவர் எ – று.

போலி ஞானியர் வீண் ஆரவாரமும், பிடுங்கலும் உடையர். சிவஞானியர் தனு கரணங்களைத் தன்வயப் படுத்தியவர்களாதலின், அவற்றால் போகம் நுகர்ந்து பாழ்போகாது செத்தார்போலச் செயலற்றுத் திரிவர் என்பது கருத்து.

குரக்களி ஞானிகள் – வேடஞானிகள். உண்மை வேடம் பூண்டு போலிவேடந்தாங்கி வயிறு வளர்ப்போர். மாந்திரீகர், கூத்தர், வேழம்பர், கருமாயக்காரர் இவர்களைக் குரககளி வித்தைக்காரர் எனல் உலக வழக்கு. இது குறைக்கொள்ளியாகிய இடுகாட்டுச் சுடு விறகைக்கொண்டும், வேகாத பிணத்தின் நிணத்தைக் கொண்டும் செய்யும் மையைக்கொண்டு மயக்கும் வித்தை என்பாரும் உளர். குறைக்கொள்ளி குரக்களி என மரீஇற்று. உலகோடு ஒத்து உள்ளத்தை உபதேச மொழியான் உயர்த்தும் திருமூலதேவர் போலி ஞானியரைக் குரக்களி ஞானியர் என இழிவு தோன்றக் கூறினர். இம்மரபும் வழக்கும் அறியாதார் இடர்ப்பட்டு முட்டியும் மோதியும் உண்மை உணர மாட்டாது குரக்கு + அளி எனப்பிரித்து, குரங்கை ஒத்துத் தாவுகின்ற மனத்தையுடைய ஞானிகள் என்று கூறுவர். அது பொருந்தாமை உணர்க.

கழு - குற்றஞ்செய்தாரை ஏற்றும் கூர்முள் மரம்; கழுவடி நாய் - கழுவில் மனித உடல் போடப்பட்டுள்ள போது அது தனக்கு எட்டாத உயரத்திலிருப்பதால் கழுமரத்தடியைச் சுற்றிச்சுற்றிவந்து எட்டாமையானும் பிரியமாட்டாமையானும். ஊனில் நசையுற்றுக் குரைக்கும் நாய், அதுவிடாமற் கத்துமாதலின் "கழுவடி நாய் போற் கத்தித்திரிவர்" என்றார். கொத்தி என்ற வினைக்கேற்பக் கழுகுபோல் என உவமை வருவித்துரைக்கப் பட்டது. ஆரவாரம் செய்தும், பிடுங்கித் தின்றும் ஊரைச் சுற்றி வந்து வயிறுவளாப்பர் என்பதாம்.

பொறிகள் பழுதாகாமலிருந்தும், உடல் வலிமையுடன் பொறிகளோடு ஒத்திருந்தும், போகப்பொருள்கள் எளிதிற்கிட்டுவனவாக இருக்கும் பொறிவாயிலைந்தையும் அவித்து அவை காரியப்படாமல் வென்று, செத்தார்போலக் காணாக்கண், கேளாச்செவி, மூசரா மூக்கு, சுவையா நா. ப ரு மெய்யாகத் திரிவார்கள் சிவ ஞானியர் என்றவாறும், இஃற்றால் இம்மந்திரத்திற்கும் அதிகாரத்திற்குமுள்ள இயைபு உணர்க (99)

**அடியா ரவரே யடியா ரலாதார்**
**அடியாரு மாகாரவ் வேடமு மாகா**
**அடியார் சிவஞான மானது பெற்றோர்**
**அடியா ரலாதார் அடியார்கள் அன்றே.** *1672*

இ-ம் - எனின், அடியார் அடியாராகாதார் இயல்புகளைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அடியார்களாவார் சிவஞானம் பெற்றோராவர். அவர்களே அடியார்கள் என்னும் சிறப்பிற்கு

உரியவர்கள். அவர்கள் அல்லாதார் அடியார்களல்லர்; அடியார்கள் ஆகும் தகுதியும் இல்லாதவர், அவர்களுக்கு அடியார் வேடமும் ஆகா என்றவாறு.

சிவஞானச் செய்தியுடையோரே சிவனடியார்கள்; அல்லாதார் அல்லாதாரே என்பது கருத்து. ஏனைய வெளி. (100)

**ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாந்**
**தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே**
**ஆனவவ் வேடம் அருள்ஞான சாதனம்**
**ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே.** 1673

இ-ம் - எனின், சுந்தரவேடம் ஞானிகட்கே ஞான சாதனமாம் என்பதை உடன் பாட்டுமுகத்தானும் எதிர்மறையானும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சிவஞானிகளுக்குச் சுந்தரவேடமும் நல்லனவேயாம், தாம் பொருந்திய அவ்வேடங்களும் தன்னைச் சிவத்தோடு சேர்ப்பிக்கும் சாதனமாம். அங்ஙனம் ஆன அவ்வேடம் திருவருளைச் சேர்வதற்கு வாயிலான ஞான சாதனமாம்; சிவஞானம் ஒரு சிறிதும் பெறுதானுக்கு அவ்வேடம் ஆனது ஆம்; ஒரு பயனும் தராது என்றவாறு.

சுந்தரவேடம் சிவஞானியர்க்கே சிவத்தோடு சேர்க்கும் சாதனமாம்; ஏனையோர்க்கு எனைவாம் என்பது கருத்து.

சுந்தரவேடம் - சிவபெருமானும், சிவஞானியரும், சிவகுருநாதனும், ஆறுகட்டி : குண்டலம் இவற்றோடு காதிலணியும் ஒருவகையணி. இதுவட்ட

மாயிருக்கும். இஃதறியாத சுத்த சைவ மரபினருள் சிலரும் சுந்தரர் பெருமான் கொண்டது போன்ற திருமணக் கோலமான அழகிய வடிவம் என்றுரை கண்டு இடர்ப்படுவர். முன்னரும் தவவேடத்துள் 'காதணி குண்டலம்......தண்டமீரைந்தே' எனக் கூறப் பெற்றுளளமை காண்க. ஆறுகட்டி – காமமாதிய ஆறு பகைகளையும் வென்றவர்கள் என்ற குறிப்பை நினைவூட்டு வதான ஆறுமணிகள் கோக்கப் பெற்ற காதுவளையம். குண்டலம் – வட்டமான கம்பியாலான பொருத்துவாய் ஒன்றில் மட்டும் மணியையுடைய காதணி. சுந்தரவேடம் – வட்டமாய், தட்டையான காதணி. இவை சிவனை நினைப் பிக்கும் சாதனங்களானமையின் சிவனடியாரும் இவற்றை அணிந்து சைவரைச் சிவனை மறவாது நினைப்பிப்பர் என்க. மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரனெனத்தொழுதல் மரபாதலால். தற்சிவ யோகம் – தன்னைச் சிவத்தோடு சேர்ப்பிக்கும் சாதனமாம் என்க. ஆன என்பதற்கு அங்ஙனம் சாதனமான என எழுவாய் வருவித்துரைக்க.

ஒன்றும் ஆகாதவனுக்கு ஆனதும் ஆம் – ஞான மாகிய ஒன்றும் பெற்றும் ஆக்கம் பெறுதானுக்கும் ஆனது ஆம். குறித்த பயன் ஒன்றையும் விளைவியாது என்பதாம். ஆனதும் ஆம் என்பது குறிப்பு மொழி.

இம்மந்திரம் வேடத்தின் பயன் உணர்த்துதலான் அதிகார இயைபு அறிக. (101)

**ஞானத்தி னுற்பத நண்ணுஞ் சிவஞானி**
**தானத்தில் வைத்த தனியால யத்தனும்**
**மோனத்த னாதலின் முத்தனுஞ் சித்தனும்**
**ஏனைத் தவசி இவனென லாகுமே.** 1674

இம் - எனின், ஞானியே நடமாடுங்கோயில் முதலிய அனைத்துமாவன் எனல் நுதலிற்று.

இ - ள்; சிவஞானி தாம் பெற்ற ஞானத்தால் சிவபதத்தையடைவன்; இதயத்தானத்தில் இறைவனை எழுந்தருளப் பண்ணினமையால் ஒப்பற்ற ஆலயத்தனுமவன்; ஞானவரம்பாகிய மோனத்தில் இருப்பவனாத லின முத்தனுவன்; மற்றைத் தவசியாகிய இவனைச் சித்தன் எனலாம் என்றவாறு.

சிவஞானி ஞானத்தால் சிவபதம் பெறுவன்; முத்தனுவன்; சித்தனுவன்; இவ்வுடம்பையே இறைவன் எழுந்தருளிய சிவாலயமாகப் பெற்றவன் ஆவன் என்பது கருத்து.

பதம் - சிவபதமாகிய திருவடி. தானம் - இதயத் தானமாகிற பதினுறிதழ்த் தாமரையின் நடுவிலுள்ள சிதாகாசப் பெருவெளி. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம் ஆதலின் இங்ஙனம் கூறினுர்.

மோனம் - வாய்வாளாது, சிந்தையைச் சிவன்பால் வைத்திருத்தல். "மோனம் என்பது ஞான வரம்பு" என்பவாகலின், அவனை முத்தனும் என்றுர். தவசி - தவத்தையுடையவன். தவசி இவன் சித்தனும் எனலாம்

என இயைக்க. இங்ஙனம் ஞானியின் செயலும் பயனும் தெரிவிக்கின்றமையின் அதிகார இயைபு அறிக. (102)

**தானற்ற தன்மையுந் தானவ னாதலும்**
**ஏனைய வச்சிவ மான இயற்கையுந்**
**தானுறு சாதக முத்திரை சாத்தலும்**
**ஏனவும் நந்தி பதமுத்தி பெற்றதே.** 1675

இம் – எனின், சிவபதமாகிய முத்தி பெற்றமைக்குரிய சாதனங்கள் இவையாமெனல் நுதலிற்று.

இ – ள் : தற்போதம் கழன்ற தன்மையும், தான் சிவமேயாகி விளங்குதலும், இயங்குவ நிற்பவான ஏனைய அனைத்தும் அச்சிவமேயாக விளங்குதலைக் காணும் காட்சியும், தான் தன் வடிவிலே சாதகமுத்திரையைத் தாங்கியிருத்தலும், ஏனையவும் நந்தியாகிய சிவனது பதவியாகிய முத்திரையைப் பெற்றால் ஆவனவாம் என்றவாறு.

சிவபோதம் மிகுதலும், சிவமேயாய் விளங்குதலும், சராசரங்கள் அனைத்தையும் சிவமேயாகக் காண்டலும், சாதகமுத்திரை தாங்கியிருத்தலும் எல்லாம் சிவனடி பெற்றதற்கு அடையாளங்களாம் என்பது கருத்து.

கையில் சிறுவிரல் அணிவிரல் நடுவிரல் ஆகிய மூன்றையும் பிரித்து நிமிர்த்திச் சுட்டுவிரலை மட்டும் வளைத்து, பெருவிரல் அடியில் சேர்ப்பது சாதக முத்திரையாகிய சின்முத்திரை, அங்ஙனமே சுட்டுவிரலைப் பெருவிரல் நுனியோடு சேர்ப்பது போதக

முத்திரையாகிய சின்முத்திரை ஆதலின், ஈண்டுத் தாடலைபோல் சிவனடியில் படிந்திருப்பதாகிய சாதக முத்திரை கூறினுர்.

ஏனமும் என்று பாடங்கொண்டு, கபாலமாகிய பிச்சைப் பாத்திரமும் என்பாரும் உளர். கங்கை மிகை யாங்கருத்துடைய சாதகராகிய ஞானிகட்கு ஏனம் மிகை ஆகாதோ என்க.

இங்ஙனம் சிவஞானம் பெற்ருர் தன்மைகளையும் அவர் எய்தும் திருவடிப்பேற்றையும் தெரிவித்தலின் இம்மந்திரம் ஞானவேடத்ததாயிற்று என்க.

எட்டுமந்திரங்களானும் முறையே ஞானம் எய்தா தார் வேடம் பூண்டு பயனில்லை எனறும். ஞானம்பெற வேண்டுவோர் சிவன்பால் அன்பு செய்க என்றும், துன ஞானத்தோர்களுக்கு நன்ஞானத்தோர் ஒன்றும் உரையார் என்றும், சிவஞானிகட்குச் சாதனங்களும் மிகையாம் என்றும், அவஞானியர் ஆரவாரம் செய்வர் சிவஞானியர் சிந்தை ஓய்ந்து செத்தவர்போலாவர் என்றும், சிவஞானம்பெற்ருரே சிவனடியார் ஏனை யோர் வேடதாரிகளான போலிகள் என்றும். ஞானி கட்குச் சுந்தரவேடம் முதலியனவும் வேண்டுவனவாம் சிவ சிந்தனையாகிய சிவயோகத்தைப் பயப்பதால் என்றும், ஞானி முத்தனும் சித்தனும் தவசியாம் என்றும், தற்போதம் கழன்று கசிவனடி சேர்ந்து சிவனே ஆகிக் காண்பன அனைத்தையும் சிவமாகவே கண்டு, சின்முத்திரையத்தனுய் விளங்குதலே சீவன் முத்திபெற்றதா மென்றும் உணர்த்தி மேல் சிவவேடம் உணர்த்திய் எடுத்தனர் திருமூலதேவர் என்க. (103)

## 12. சிவவேடம்

சிவவேடமாவது சிவனது திருவுருவைத் தாங்குதல். முற்கூறியவாறு ஞானவேடத்தில் தலைப்பட்டார் தானவனுதலாகிய சிவத்துவத்தை எய்துவாராதலின் அடுத்துச் சிவவேடந் தெரிவிக்கப் பெறுகின்றது. இதனை நான்கு மந்திரங்களால் உணர்த்திய எடுத்துக்கொண்டார் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**அருளால் அரனுக் கடிமைய தாகிப்**
**பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி**
**இருளான நின்றி யிருஞ்செய லற்றோர்**
**தெருளாம் அடிமைச் சிவவேடத் தோரே. 1676**

இ - எனின், சிவவேடத்தார் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமானுடைய திருவருளாலே சிவபெருமானுக்கு அடிமையாகிச் செம்பொருளாகிய சிவம் விளங்குந்தற்கு இடமாகிய தனது உடலிலே சிவபெருமான் விளங்கித் தோன்றும் இதயாகாசமாகிற பொற்பதியை ஆராய்ந்து அதில் சிவம் பிரகாசித்தலைக் கண்டு. ஆணவமறைப்புச் சிறிதுமின்றி, தாம் வினைவயத்தால் புரியும் நினைப்பும் செயலுமாகிய வினையற்றபேர்களே தெளிந்த அடிமைபூண்ட சிவவேடத்தர் ஆவர் என்றவாறு.

அடியராகித் தம் இதயத்திலே சிவத்தைக்கண்டு, இருளற்றுச் செயலற்று இப்போரே சிவவேடத்தர் என்பது கருத்து.

ஆன்மாக்கள் முத்தி நிலையிலும் பூரண சுதந்திரம் பெற்றவர்களல்லராதலானும், அவனருளாலே அவன்றன் வணங்கலே இயல்பாதலானும் 'அருளால் அரனுக்கு அடிமையதாகி' என்றார். ஆதிலானும் அதுபகுதிப்பொருள் விகுதி.

பொருள் — சிவமாகிய செம்பொருளை. அது விளங்குதற்கு இடம் உடல். உடலில் அதுவிளங்கித் தோன்றும் இடம் இதயவான். இதயவானில் இறைவைக் காணல் சிவவேடத்தாரியல்பு என்பார் 'பொருளாந் தனதுடல் பொற்பதி நாடி' என்றார்.

இருள் — பொருளைப் புலப்படா வண்ணம் மறைக்கும் ஆணவம். இதயத்தில் இறையொளி வெளிப்பட்டவுடன் இருளானது தானே மறையுமாதலின் 'இருளானதின்றி' என்றார்.

ஆணவம் உள்ளவரையிலேதான் ஆன்மாக்கள் முனைத்து நின்று வினைகளைச் செய்யும்; அஃது அறின் ஆன்மா செயலற்று அடங்கியிருக்குமாதலின் அடுத்து 'இருஞ்செயல் அற்றோர்' என்றார்.

ஆணவத்தோடு கூடி ஆன்மா தன்னை வினை முதல் என்று உணரும்வரை அது மருளில் ஆழ்ந்திருக்கும். ஆணவம் நீங்கியவுடன், தான் என்றும் இறைவனுக்கு மீளாவடிமை என்றுணரும். அதுவே தெளிந்தநிலை அதனை உடையவரே சிவவேடத்தார் என்றார் என்க.

இங்ஙனம் சிவவேடத்தார் நிலையுணர்த்தலின் இம்மந்திரம் சிவவேடம் என்னும் இவ்வதிகாரக்கருத்திற்கு இயைய நிற்றல் காண்க. (104)

**உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா**
**உடல்கழன் றால்வேடம் உடனே கழலும்**
**உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்**
**கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே.** 1677

இம் - எனின் புறவேடத்தால் பயனின்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உடலில் பூட்டப்பெற்ற புறவேடங்கள் உள்ளேயுள்ள உயிர்க்குப் பயன்படாவாம். உடல் கழிந்தால் அதில் பூணப்பெற்ற வேடங்களும் கழலும். உடலின்கண் உயிர் தம் போகம் கழியும் அளவும் தங்கும் என்ற உண்மையை ஓர்ந்து உணராதார் கடலிலகப்பட்ட கட்டையைப்போல அலைக்கப்படுவர் என்றவாறு.

புறவேடம்பூணுதலால் பயனில்லை; உடல் கழியப் புறவேடமும் கழியும். ஆகவே உடலின்கண் உயிர் போல உயிர்க்கண் இறைவன் ஒளிர்தலை உணர்ந்து கொள்க. அதுவே சிவவேடம் என்பதாம்,

துவக்கிய - கட்டிய பூண்ட உடல்மாசு கழுவின் உயிர்மாசு போகாததுபோல உடலுக்கு வேடம் பூணின் உயிருக்கு ஆகாது என்பதாம், கழலுதல் வினை முடிவின்கண். ஊழ்த்தமலர் காம்பு கழன்று விழு தல்போல உடல் கழன்று வீழ்தல்.

உடல் உயிர் உண்மை என்று ஓர்ந்து - உடலில் உயிர்போல உயிரில் இறைவன் கலந்துள்ளான் என்ப தைச் சிந்தித்து என்க. இதுவே சிவவேடம்.

கடலிலகப்பட்ட கட்டை தன் வசமற்று அலையால் இங்கும் அங்குமாக அலைக்கப்படுதல் போல. பிறவிக் கடலில் அகப்பட்ட இவனும் வருந்துவன் என்ற வாறும். (105)

**மயலற் றிருளற்று மாமன மற்றுக்**
**கயலுற்ற கண்ணியர் கையிணைக் கற்றுத்**
**தயலற் றவரோடுந் தாமே தாமாகிச்**
**செயலற் றிருப்பர் சிவவேடத் தாரே.** 1678

இம் – எனின், செயல் அற்றுச் சிவமேயாகியிருந் தாரே சிவவேடத்தார் எனல் நுதலிற்று.

இ – ள்: ஆணவ மல காரியமாகிய அறியாமையும் மயக்கமும் இன்றி, முனைத்துநின்றறியும் மனவேகமும் அடங்கி, கயல்மீனைப்போன்ற கண்களையுடைய பெண்களின் கையால் தழுவப்பெறுதலையும் நீங்கி, தயக்கமற்றுச் சிவனோடு சேர்ந்து சிவமேயாகிச் செயலற்றிருந்தாரே சிவவேடத்தார் ஆவர் என்றவாறு.

ஆணவமலச் சேட்டைகள் நீங்கப் பெற்றுச் சிவத்தோடு சேர்ந்து சிவமான பேர்களே சிவவேடத்தார் என்பது கருத்து.

மயலற்று இருளற்று என்றுரேனும். இருளற்று மயலற்று எனஏது குறித்து மாற்றுக. மா மனம்– பெரிய மனம் மனம் அறுதலாவது சென்று பற்றுவது ஒழிந்து திருவடிகண்ணேயே பதிந்து நிற்றலாம். மனமென் நினைப்பறுதல் மட்டுமன்று நினைப்பறின். மனமென் நினைப்பறுதல் இல்லையாம். ஆகவே, நினையவேண்டிய பது ஒன்று இல்லையாம். ஆகவே, நினையவேண்டிய இறைவனை – அவனடியை நினைந்து புறத்துச் சென்று பற்றுதிருத்தலாம்.

பொறி இன்பமே கருதி, மாதர் கையணைப்பில் கதுவப்பெறின் அதனால் வினைகள் மிகுத்து உலகிற் றுயக்குண்ண நேர்தலின் "கண்ணியர் கையிணைக் கற்று" என்றார். கயல் உற்ற கண்ணியர் என்றது அவர் கண் பிறழ்ச்சியாலும் அழகாலும் அழிந்தமை தோன்ற.

தயல் - தயக்கம். சிவத்தோடு ஒன்றத் தயக்க மின்றி என்றவாறும். தயல் - தையல் என்பதன் திரிபாகக் கொண்டு மகளிரினீங்கி என்பாருமுளர். கண்ணியர் கையிணைக்கற்று என்பதாலயே அக் கருத்து விளங்கலின் மீண்டும் கூறவேண்டா என்க. தயல் அற்றவ ரோடும் – தையலாகிய பராசத்தியைத் தன்னுள் கரந்து தானேயாய் நிற்கும் குருநாதனோடு எனக்கொள்ளலுமாம். தாமே தாமாதல் – அத்துவிதக் கலப்பான் களித்து நிற்றல். செயல் - உலக வியாபாரங்கள்.

சும்மா இருக்கை சுகம்; அதுவே சிவவேடம் என் லின் இம்மந்திரம் இவ்வதிகாரத்த தாயிற்று. (106)

**ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்**
**வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே**
**நாடுமின் நந்தியை நம்பெரு மான்தன்னைத்**
**தேடுமின் இப்பொருள் சென்றெய்த லாமே** 1679

இம் - எனின், பிராணயாமமும். இறையன்பும் செய்யின் இறைவனை எய்தலாம் எனல் நுதலிற்று.

இம் - ள் மனிதர்களே! ஓடிக் கொண்டே யிருக்கிற குதிரைக்கு உரியதான சம்மட்டியைப்

பற்றுங்கள்; வேடத்தைமட்டும் தாங்கி நின்று என்ன செய்வீர்கள்; வேண்டாம்; நம் தலைவனாகிய நந்தியை நாடுங்கள்: தேடப்படும் இன்பப் பொருளைச் சென்றடையலாம் என்றவாறு.

முறையே பிராணாயாமமும் அன்பும் செய்யின் இன்பப் பொருளாகிய இறைவனை எய்தலாம் என்பது கருத்து. ஓடுங்குதிரை - வாசி; அதாவது பிராணவாயு. குசை – அதனை அடக்கி ஆளக்கூடிய சவுக்கு; என்றது ஆயாமத்தை. ஆயாமமாவது.

*'ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்*
*ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்*
*ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்*
*மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே'*

என்ற – (568) அள்வின்படி இரண்டு குதிரைகளையும் வீசிப் பிடிக்கும் விரகறிந்து பயிலுதலாம்.

இங்ஙனம் பயிலும்போது, சோம்பர் இடைவிடாது பயிலுதலை விடுவர்; மூடர் மாறிக் கும்பகஞ்செய்து மாலுறுவர். அதனால் பிராணாயாமமுறை வழுவக் கூடும். அங்ஙனம் வழுவாது பயிலுக என்பார் " திண்ணம் பற்றுமின் " என்றார்.

வேடம் – சிவவேடமாகி பூதி கண்டிகை சடைமுடி கபாலம் முதலிய சாதனங்களைத் தாங்கும் வேடம்.

பிராணாயாமமும், வேடமும், ஆகிய செயல் மாத்திரத்தால் பயனின்று; சிவசிந்தனை இருந்தால்தான்

பேரின்பப் பொருளைப் பெறுதலாகிய பயன் சித்திக்கும் என்பார் 'நாடுமின் நந்தியை நம்பெருமான் தன்னை. இவைப்பொருள் எய்தலாம்' என்றார். இதனால் உண்மைச் சிவவேடத்தின் பயன் கூறப்பெற்றது. (1679)

## 13. அபக்குவன்

பக்குவம் - பரிபாகம். அதாவது அறிவின் முதிர்ச்சி. அபக்குவம் - அஃதின்மை இறைவன் திருவருளால் மல மாயைகள் நீங்கப்பெற்று இறையருளை அறிந்து அனுபவிக்கக்கூடிய தகுதியின்றி மாயையில் மயங்கிச் செய்வன தவிர்வன அறியாது தவிப்பவன் அபக்குவன். அவனியல்பு கூறுதலின் இவ்வதிகாரம் இப்பெயர்த்தாயிற்று. முன்னர்ச் சிவ வேடம் உணர்த்தி, அவ்வேடம் அபக்குவர்க்குப் பயன்படாது என்று உணர்த்துதலின் அதிகார முறைமை இனிது விளங்கும்.

**குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்**
**குருட்டினை நீக்காக் குருவினைக் கொளவார்**
**குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்**
**குருடுங் குருடும் குழிவிழு மாறே** 1680

இம் - எனின். பக்குவான்மாவான சிவகுருவின் இன்றியமையாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குருட்டைப் போக்கும் குருவைக் கொளளமாட்டார்கள; குருட்டுத் தன்மையைப் போக்காத குருவைக் கொள்வர்; இத்தகைய சீடனும் குருவும், குருடும் குருடும் கூடிக் குருட்டாட்டம் ஆடிக் குழியில் விழுந்தவாறுவர் என்றவாறு.

அபக்குவனுகிய குருவைக் கொள்ளின் கரையேற முடியாது என்பது கருத்து.

குருடு – அறியாமை. அறியாமையை அறிவினுல் அகற்றும் குருவைக் கொள்ளார் என்பார் 'குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்' என்ருர். அறியாமையைப் போக்குகின்ற அருளனுபவ ஆற்றல் இல்லாத குருவைக் கொள்வர் அறியாத – மலத்தான் மறைப்புண்ட சகலான் மாக்கள் என்பது இரண்டாம் அடியில் உணர்த்தப் பெறுகின்றது.

இத்தகைய சீடன் குரு இவர்களின் சேர்க்கை குருடனும் குருடனும் தாள லயங்களுக்கு ஏலாதபடி குருட்டுத்தனமாகக் கண்டபடி யெல்லாம் நடித்துப் பக்கத்திலுள்ள குழி தெரியாவண்ணம் அதில் விழுந்த தன்மையராவர் என்பதாம்.

குழி என்றது பிறவிக்கு ஏதுவாகிய வினைகளை. நரகக்குழி என்பாரும் உளர். கர்ப்பாசயமாகிய கருக் குழி எனலுமாம்.

அபக்குவனைக் குருவாகக் கொள்பவனும் அபக்கு வன் என்று அறிவித்தலின் இம்மந்திரம் இவ்வதிகாரத் திற்கு இயைபுடைத்தாயிற்று. (108)

**மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி**
**நினைப்பின் அதனின் நிழலையுங் காணார்**
**வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்**
**புறக்கடை இச்சித்துப் போகின்ற வாறே.** 1681

இம் – எனின், வினையான் வரும் பயன்களை விளக் கினும் விடமாட்டாமைக்கு ஏது பக்குவமின்மையே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : உயிர்களின் மனத்தில் விளைந்தது ஓர் வஞ்சனை பொருந்திய கண்ணாடியாம். நினைப்பால் மக்கள் அதன் நிழலையும் அறியமாட்டாதார் ஆவர், வினைப்பயன்கள் நீங்க என்னதான் — எவ்வளவுதான் விளக்கி உபதேசிக்கினும் ஏற்றுக்கொள்ள மாட்டார். சாக்கடைக்கு விரும்பிச் செல்வோராவர் என்றவாறு.

சிவஒளியின் நிழலையும் அறியமாட்டாத அபக்குவர்கள். வினைகள் நீங்க என்ன உபதேசித்தாலும் ஏற்கார் என்பது கருத்து.

மாயக்கண்ணாடி - மாயம் பொருந்திய கண்ணாடி. உண்மையை விளக்காது, தன் ஒளியையும், பொருள் புலப்பாட்டையும் மறைக்கும் இயல்பினது மாயமாக லின் அதனைக் கண்ணாடியாக உருவகித்தார். அது பொறிகள் வாயிலாகப் பொருள்களைச் சென்று பற்றும் மனத்தில்தோன்றும் குணமாதலின் " மனத்தில் எழுந்த தோர் மாயக்கண்ணாடி " என்றார்.

நினைப்பின் - அங்ஙனம் மனத்தில் தோன்றியதாயினும் அது எத்தகைத்து என்று சிந்திக்கின், அக்கண்ணாடி தன் ஒளியையும் காட்டாது என்பார் ' நினைப்பின் அதனின் - நிழலையும் காணார்' என்றார். நிழல் - ஒளி. அதனின் - தூலக்கண்ணாடியில். நிழலையும் காணார் - தன்னை அறிவது கிடக்கட்டும்; தன் நிழலையும் காணார் என்பாரும் உளர். மனம் உயிரின் அந்தக்கரணமாதலானும். மாயம் உயிர்க்குணமாகிய அறியாமை ஆகை யானும். மாயக்கண்ணாடியுள் சித்தாகிய தன்னைக் காணவே முடியாது என்பது உறுதியாகலின் இந்த

உரை ஏற்புடைத்தாகாது என்க. பக்குவான்மாக்களுக்கு ஒரு சொல் கூறினும் அமையும்; அவ்வளவில் பரிபாகம் எய்துவர், அபக்குவர்கள் உபதேசவுரையைச் செவியேற்கவே மாட்டார்கள் திரவநளின்மையின் என்பார் 'வினைப்பயன் போக விளக்கியும் கொள்ளார்' என்றார்.

புறக்கடை – வீட்டுக்குப் புறம்பான ஒதுக்கிடம்; சாக்கடை. வினைகளைக் கழித்து வீட்டினுள் இருக்க வேண்டியவர்கள் புறக்கடையை இச்சித்து அதில் வீழ்வர் என்றவாறு.

இதனால் அபக்குவர் ஆசாரியன் உபதேசத்தைக் கேளாது புறம்போதல் உணர்த்துதலின் இம்மந்திரம் அபக்குவர் நிலை அறிவித்தவாறும்.

மாயக்கண்ணாடியென்றது திரோதாயியை எனக்கொண்டு, அம்மாயையானது முன்புறம் ஒளியாய்ப் பின்புறம் மங்கலாயிருக்கும் கண்ணாடி போன்றது; மலமாயை கன்மங்களோடு கூடிய பந்தகாலத்தில் பின்புறமும், முத்திகாலத்தில் முன்புறமும் காணநிற்றும் என விளக்கந் தருதலுமாம். சிதம்பரத்துச் சிற்சபையில் விளங்கும் இரகசியம எனப்படும் அருவச் சிவத்தின் முன் முன்புறம் கருப்பாயும் பின்புறம் சிவப்பாயுமுள்ள பட்டுத்திரை இடப்பட்டிருக்கும். அது பந்தகாலத்தில் மறைக்கும் திரோதானசத்தியே முத்திகாலத்தில் அருட்சத்தியாக ஆன்மாக்களுக்கு உதவுவது போல நிழலையும் காட்டாத மாயக்கண்ணாடி பின்பு சிவத்தையே காட்டும் திருவருளுமாகலாம் என்பது கருத்து.

வினைப்பயன் போக – வினைகள் உண்டு கழிய. புறக்கடை – வெளி, சிவஞானியர் உண்மையை உபதேசித்தும் அதனை உணராது புறம் செல்வாரைப் புறக்கடை இச்சித்துப்போகின்ற ஆறு ஆம் என்க. ஆ...

புறக்கடைசெல்லும் அபக்குவரினை அறிவித்தலின் அதிகார இயைபு அறிக. (109)

**ஏயெனில் என்னென மாட்டார் பிரசைகள்**
**வாய்முலை பெய்ய மதுரநின் றூறிடுந்**
**தாய்முலை யாவ தறியார் தமருளோர்**
**ஊனிலை செய்யும் உருவிலி தானே.** 1682

இம் – எனின், பக்குவர்களாகிய சிலரிடம் சிவம் விளங்குதல் வாயிலாக அபக்குவரின அறியாமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆன்மாக்கள் 'ஏ' என்று ஒருவரழைப்பின் அவர்கள் 'என்ன' என்று மறுமொழி கேட்கும் அறிவிலர்; வாயின்கண் முலையை வைக்க இனிமையான பால்சுரக்கும். அது தம் தாயின் முலை யென்று உணரவும் மாட்டார். அங்ஙனமாய தம்மவருள் ஓர் உடம்பில் அருவமாகிய சிவம் நிலைபெற்று விளங்கும் என்றவாறு.

அபக்குவர்களாகிய பிரஜைகள் ஒன்றும் அறியார் அவருள்ளும் சிலரிடம் சிவம் கருணையால் பிரகாசிக்கும் என்பது கருத்து.

'ஏய்' என்பது இழிந்தோரை உயர்ந்தோர் விளிக்கின்ற குறிப்புச்சொல். அங்ஙனம் அவர் விளிப்பின் என்ன என்று கேட்பன் எத்தகைய அறிவிலியும்.

அங்ஙனமிருக்க, அபக்குவன் என்னென்று கேட்கும் அறிவு மில்லாதவன என்று அறிவித்தவாறு. ஏய் என்றால் என்ன என்றான்' என்பது ஒருபழமொழி. பிரசைகள் - உயிர்கள்.

தாய் வாயில் முலையைத் துறுத்த அது பால்சுரக்க அதனைச் சுவைத்தும் அப்பால் தாய்முலை தர வந்தது என்று உணரமாட்டார் என்பது, உயிர்கட்குத் தனு கரணங்களைக் கொடுத்து அவை மேய பெருபொழி லாகிய உலகத்தையும் உதவிப் போகத்தில் அழுத்திய போதும் இவ்வின்பம் உலகமாதாவாகிய அருட்சத்தி உதவ வந்தது என்று அறியாரென்பதைக் குறித்து நின்றது. அங்ஙனமாயினும், அவருளும் பரிபாகம் சிறிதுற்ற உடலினிடமாக அருவச் சிவம் அறிவுருவ மாகக்கலந்து மேலும் பரிபாகம் செய்யும்; ஆயினும் அதனை அவர்கள் உணரார் என்று இணைத்து எண்ணுக.

இங்ஙனமன்றி, சிவம் அடியாராகஉள்ளவர் உடலை அழியாமல் நிலைபெறச்செய்யும், எனவும், குடிகள்போல் வாழும் மக்கள் அவர்களை அன்பாக அழைத்து மொழியினும் மனங்கொள்ள மாட்டார்; பாலுண்குழவி வாய் வைக்குங்கால் தாய் முலை சுரப்பது போல - அப்பாலால் இனிமை உண்டாவதுபோல, நடப்பாற்றலாகிய அம்மையை நாடிப் பிறப்பற வேண்டினால் அவ்வுயிரைச் சிவத்துடன் கூட்டுதற்கு அருளுடம்பையும். அவ்வருளுடம்பு வளருதற்குத் தகுந்த ஐந்தெழுத்தையும் அவள் அருளுவள் எனவும் உரைப்பர் சிலர். அதற்குரிய சொல்லமைதி இம்மந்திரத்துள் இல்லாமை கருதுக.

இங்ஙனம் அபக்குவன் இயல்பு உணர்த்துதலின் அதிகார இயல்பு உணர்க. (110)

**வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து**
**நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்**
**தீயென்றிங் குன்னைத் தெளிவன் தெளிந்தபின்**
**பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. 1683**

இம் - எனின், மனம் மொழி மெய்கள் ஒத்து வழிபடுதலே பக்குவனியல்பு என அபக்குவன் நிலை எதிர்மறை முகத்தானும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பெருந்தகையே! வாய் ஏதோ ஒன்றைச் சொல்லவும், மனம் வேறொன்றைச் சிந்திக்கவும், நீவேறொன்றைச் செய்யாதே. திரிகரணங்களும் ஒத்து ஒன்றாகிய பரசிவத்தையே தெளிவாயாயின் உன்னைத் தீவண்ணனாகிய சிவன் என்றே தெளிவன்; தெளிந்தபின் என்னைப் பேய் என்று பிறர் தெளியார் எ - று

மனம் மொழி மெய்கள் ஒத்துச் சிவத்தையே சிந்திப்பின் சிவனாவாய் நீ; அங்ஙனமே உன்னை யானும் தெளிவேன்; தெளிகின்ற என்னைப் பேய் என்று பிறர் தெளியார் என்பது கருத்து.

எல்லாம் இறைவனையே நினைக்க வாழ்த்த வணங்க வேண்டியிருக்க, ஒன்றொன்றும் ஒவ்வொரு செயலைச் செய்தலாகாது என்று அபக்குவர்க்கு அறிவித்தவாறு.

செய்யல் - செய்யாதே; எதிர்மறைவினைமுற்று. தீ வண்ணனாகிய சிவத்தையே தியானிப்பதால் உன்னைத்

தீ என்றே தெளிவன் என்பதாம். தீ தன்னைச் சார்ந்த காரிரும்பையும் தன் வண்ணமாக்குவது போலத் தீ வண்ணச் சிவன் தன்னை இடைவிடாது தியானிப்பாரைத் தன்வண்ணமாக ஆக்குவன் ஆதலின் இங்ஙனம் கூறினார்,

அங்ஙனம் தெளிந்த என்னை அறிவு மயங்கிய பேய் என்று உலகர் தெளியார்; சிவஞானியை உணரும் சிவஞானிஎன்றே தெளிவர் என்பது.

பேயென்று இங்கு உன்னை என்ற பாடங்கொள்ளின் உன்னை அபக்குவன் என்று கருதார்; பக்குவன் என்றே தெளிவர் என்பதாம். இப்பாடமே சிறத்தல் காண்க. அதிகார இயைபும் அறிக. (111)

**பஞ்சத் துரோகத்துப் பாதகர் நம்மை**
**அஞ்சச் சமயத்தோர் வேந்தன் அருந்தண்டம்**
**விஞ்சச்செய் திப்புவி வேறே விடாவிடின்**
**பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே.** 1684

இம் – எனின், அபக்குவரை அரசன் நாடுகடத்தாவிடில் நாடு பஞ்சமாம் எனல் நுதலிற்று.

இ – ள்: பாதகர்கள் தீமைசெய்யும் காலத்து ஓர்கின்ற வேந்தன், பஞ்சமா பாதகங்கள் செய்யும் பாதகர்கள் அஞ்சும்படி மிக்க தண்டனை கொடுத்து நாடு கடத்தாவிடில் நாடு பஞ்சத்தில் அகப்பட்டு பூமி முழுதும் பாழாம் என்றவாறு.

பஞ்மாபாதகர்கள் தீமை செய்யுங்காலத்து அவர்களை அறிந்து ஆராய்ந்து அரசன் கொடுந்தண்டம் விதிக்கவேண்டும். பின்னர் நாடு கடத்தவேண்டும்.

அங்ஙனம் செய்யாவிடின் பஞ்சம் மிகும்; பூமியே பாழாம் என்பது கருத்து.

பஞ்சத் துரோகத் பாதகர் - பஞ்சமா பாதகர் களாகிய துரோகிகள். பஞ்சமாபாதகமாவன பொய், கொலை, களவு, கள், காமம் என்பன. காமம் நீக்கிக் குருநிந்தை கொள்வாரு முளர், திருமூலர் 'கொலையே களவு கள் காமம் பொய் கூறல், மலைவான பாதகமாம் (200) எனல் காண்க.

இங்ஙனம் தவவேடம் கொண்டோர் தவத்தில் மறைந்து நின்று துரோகம் செய்தல் நாட்டுக்கும் மக்களுக்கும் இயற்றும் துரோகமாதலின் இங்ஙனம் கூறினர். இங்ஙனம் கூறினரேனும் பஞ்சமாபாதகத் துரோகிகள் தம்மை என, சொல்லும் விகுதியும் உருபும் பிரித்துக் கூட்டி இயைத்துப் பொருள் கொள்க, தம்மையும் என உம்மை விரித்துப் பாடங்கொண்டு மற்றையோரும் இத்தண்டங் கண்டு அஞ்ச எனலுமாம்.

சமயம்—தீமை புரியுங்காலம். கையும் களவுமாகப் பிடித்தான் என்பதுபோலக் குற்றம் புரியும்பொழுதே கண்டு தண்டித்தல் இன்றியமையாதது என்பதாம் இங்ஙனம் செய்யின் ஏனையோர் தீமை புரியவும் அஞ்சுவர் என்பது.

பஞ்சச் சமயத்தோர் எனப் பாடங்கொண்டு பஞ்ச காலத்தை ஆராய்கின்ற அரசன் என்று உரைப்பாரும் உளர். இப்பாடம் ஏடுபடிப்போரான் நிகழ்ந்த பிழையாதல் வேண்டும் என விலக்குக.

விஞ்சச் செய்து – குற்றத்தினதளவினதாக அன்றி மிகச்செய்து என்க. இப்புவி வேறே விடாவிடின் – இப்பூமிக்கு வேருக விடாவிடின்; நாடு கடத்தா விடின் மரணதண்டனை விதித்துப் பூமியை விட்டே அகற்ருவிடின் எனலுமாம். புவி பஞ்சத்துளாய் முற்றும் பாழாகும் என்க.

இவ்வண்ணம் அபக்குவனை அகற்ற வேண்டும் என்றலின் அதிகார இயைபு உணர்க. (112)

**தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ்**
**சிவத்திடை நின்றது தேவர் அறியார்**
**தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்**
**பவத்திடை நின்றதோர் பாடது வாமே.** 1685

இ – ள் தவத்தோர் நுகரும் கன்மங்கள் அனைத்தும் சிவமே நுகர்வதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: தவத்தில் நிலைபெற்ருேர்கள் நுகருங் கன்மங்கள் அனைத்தும் சிவத்தில்நின்ற அநுபவமாம். இதனைத் தேவரும் அறியார். தவத்தில் நிலைபெருதவர் பிறவித்துன்பத்தில் அகப்பட்டு வருந்துவர் என்றவாறு.

தவத்தவர் நுகரும் கன்மங்கள் சிவானுபவங் களாம். தவம் பயிலாதார் பிறவித்துன்பத்தில் அகப் பட்டு உழல்வர் என்பது கருத்து.

தவத்தோர் கரணங்கள் அனைத்தும் சிவகரணங் களாதலின், அவர்கள் நுகரும் கன்மங்கள் சிவானுபவங்

களாய் வருவினைக்கு வித்தாகாது முத்திக்கு வாயிலாம் என்றவாறு.

பவத்திடை நின்றது பாடு ஆம் - பிறவியில் நிலை பெற்றதாகிய துன்பமாம் என்பது. ஓ நும் அதுவும் அசைநிலைகள். (113)

**கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்**
**தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும்**
**பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்**
**என்றிவை இறைபால் இயற்கை அல்லவே. 1686**

இ-ம் - எனின், சிவாநுபவச் செய்கையுடையார்க்கு இயல்பல்லாதன இவையெனல் நுதலிற்று.

இ-ள் பிறரைக் கோபித்தலும், எதையாவது எண்ணுதலும், வினைகளைச் செய்தலும், தின்னுதலும், சுவைத்தலும், பிறருக்குத் தீமைகள் செய்தலும், குறைவுபடுதலும், விளங்குதலும், தன்பெருமை தான் கூறுதலும் ஆகிய இக்குணங்கள் இறைவன்பால் பதிந்த பக்குவர்க்கு இயல்பல்லாதன என்றவாறு.

சினத்தல் முதலிய ஒன்பது குணங்களும் பசுபோதத்தால் விளையும் செருக்காதலின் அவை பக்குவர்க்கு ஆகா என்பது கருத்து.

கன்றல் – விரும்பிய பொருளைப் பெறுதவழியும், வேறொருவர் கைக்கொண்டார் என்றவழியும், அவை தம் விருப்பிற்கு மாறாய் நடந்தவழியும் விளைவதாகிய சினம். அதனால் பகை விளைந்து இறையுணர்வைத் தடுத்தலின் விலக்கப்பட்டது.

கருதல் — சிவத்தையே கருதவேண்டிய பக்தவன் அதனைவிட்டு, மாலை மாதர் முதலானவற்றை எண்ணுதல், இதுவும் இறையருள் தியானத்திற்கு இடையீடாதல் காண்க.

கருமஞ் செய்தல் - அங்ஙனம் எண்ணி, எண்ணிய பொருள்களை எய்துதற்காக இயற்றப்படும் முயற்சிகள். இவைகளால் ஆகாமியவினை மிகுதலின் விலக்கத்தக்கனவாயின.

தின்றல் — பசிக்கு ஆளாகி, உயிர் உடலிற்றங்குவதற்கான உணவுகளை அளவறிந்துண்ணாமல் கொழுத்துப் பருத்து அறிவு திரிந்து கூடாவொழுக்கம் மேற்கொள்ளும்வரை உண்ணுதல். இதனாலும் அறிவு மாறுபடுதல் காண்க.

சுவைத்தல் — நாவின் சுவைக்கும் அடிமையாகிக் கண்டகண்ட பொருள்களைச் சுவைத்தலும், ஏனைய பொறிகட்கு அடிமைப்பட்டு இதனின் அது நல்லது, அதனின் இது நல்லது எனப் பல பொருள்களைச் சுவைத்தலும், இதனால் மன அமைதி கெடுதலின் விலக்கப்பட்டது.

தீமை செய்தல் - தன்கருத்துக்கு ஒவ்வாதவற்றோடு பகைத்து அழிக்கவும் வருத்தவும் முயறல். இதுவும் கூடாது என்க.

பின்றல் - குறைபடுதல். நிறைந்த பொருளாகிய சிவத்தோடு இடைவிடாது ஒன்றி நிறைவாகவே இருக்கவேண்டிய உயிர் பழி பாவங்களைத் தேடிக் கொண்டு குறைபட வாழ்தல்.

பிறங்கல் - உலகோர் மெச்ச உலகியற்பணிகளைச் செய்து வாழ்தல். இது ஆணவத்திற்கு எருவிட்டது போல இன்னுசெய்யும் ஆதலின் விலக்கத்தக்கதாம். புகழுப ஞானத்திற்குத் தடையாதலை நன்குணர்க.

பெருமை கூறல் - தன்பெருமையைத் தானே கூறுதல். இறைபால் - இறைவனிடம் ஒன்றிய மன முடைய பக்குவர்க்கு எனக.

இங்ஙனம் அபக்குவர் நிலையுணர்த்துதலின் அதிகார இயைபு விளங்க நின்றமை காண்க. (114)

**விடிவ தறியார் வெளிகாண மாட்டார்**
**விடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்**
**கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின்**
**விடியாமை காக்கும் விளக்கது வாமே.** 1687

இம் - எனின், அஞ்ஞான இருளைப் போக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் தமக்கு இருள் அகலும் விடியல் வரப் போவதையும் அறியார்; விடிந்தபின்பு ஞானவெளி தோன்றுவதையும் காணமாட்டார்கள்; விடிந்தபிறகு பரஞான வெளியில் விழித்துப் பார்க்கவும் அறியார்; இங்ஙனம் உலகவர் வருந்துவர். சிலராயினும் கொடிய மனத்தையும் கண் நிமைகளையும் கட்டுங்கள்; உண் முகமாக நோக்குங்கள். அச்செயல் அறியாமையாகிய இருள் உங்களைப் பற்றுமையைக் காக்கும் ஞான விளக்காம் என்றவாறு.

உலகவர் விடியல் வரப்போவதையும், ஞானவெளி தோன்றப் போவதையுங்கூட அறியார். நீங்கள் மனத்தை

யும் கண்ணையும் புறம்போகாது கட்டுங்கள். உங்கட்கு ஞானவாயிலாம் என்பது கருத்து.

விடிவது என்றது இருள் அகல்வதும் ஒளி தோன்றுவதுமாகிய செயல். கூட்டில் உறையும் புழு வெளி உண்டு என்பதை அறியாது, அதனுள்ளே மயங்கிக் கிடப்பதுபோல மலத்தில் கட்டுண்ட உயிர் அறியாமையிலே மயங்கி இருள் அகலும் ஞானம் உண்டாம் என்பதையும் அறியாது கிடக்கும் என்பார் 'விடிவது அறியார் வெளி காணமாட்டார்' என்றார்.

முற்செய்த நல்வினைப் பயனால் - அருள் விளக்கத்தால் விடிவதையும், வெளி காணப்பெறுவதையுங் கூட அறிந்து அனுபவிக்கமாட்டார்கள். அதிருட்டக் குறைவான மகன் ஒருவன் குருடனாக நடித்து, வழியில் கிடந்த புதையலை இழந்ததுபோல இழப்பர் என்பார 'விடியில் வெளியில் விழிக்கவும் மாட்டார்' என்றார்.

மனம் புறத்தே போந்து தீமையே விளைத்தலின் 'கடியது' எனப்பட்டது. உள் - மனம். நிமை - கண்ணிமை. இமை திறந்தால் கண் அழகிற்சென்று பற்றி அழிகின்றமையின் 'கட்டுமின்' என்றது. இமைகளை மூடி மனத்தை அகமார்க்கமாகத் திருப்பின் பரஞானம் காணப்பெறுமாதலின் 'காண்மின்' என்றது. காமின் எனப் பாடங்கொண்டு புறம்போகாது காத்துக்கொள்ளுங்கள் எனலுமாம்.

விடியாமை காக்கும் விளக்கு - விடியாமையாகிய அஞ்ஞானம் நம்மைப் பற்றாது தடுக்கும் ஞானவிளக்காம் எனப் பிணிக்கு மருந்துபோலக் கொள்க.

இங்ஙனம் அபக்குவர்நிலை அறிவித்தலின் அதிகார இயைபு அறிக.

**வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்**
**பெத்த மறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்**
**தத்துவ முன்னித் தலைப்படா தவ்வாறு**
**பித்தான சீடனுக் கீயப் பெறுதானே. 1688**

இம் - எனின், அபக்குவனுக்கு உபதேசிக்கக் கூடாது எனல் நுதலிற்று. 115

இ - ள் : அநாதியே ஆன்மாவோடு வைக்கப் பெற்றதான பாசத்தை மாற்றும் நெறிக்கண் தங்கி, மலக்கட்டு அறும்வண்ணம் முத்தியில் விருப்புடையவனாகி, உலகியலில் நின்று மாறுபட்டு உண்மைப் பொருளைத் தியானித்து மேம்பாடடையாதவண்ணம் பித்துக்கொண்ட சீடனுக்கு உண்மை ஞானங்கள் உபதேசிக்கத் தகா என்றவாறு.

பரிபாகமில்லார்க்கு உண்மைஞானம் உபதேசிக்கத் தக்கதல்ல என்பது கருத்து. பசு வைத்த பாசம் என மாற்றி அநாதியே பசுவினிடம் சேர்ப்பிக்கப் பெற்ற பாசம் என்க. பாசம் ஆணவம் மாயை கன்மங்களாகிற கட்டுக்குள், அவற்றை மாற்றும் நெறிகள் சரியை கிரியை யோகம் ஞானங்களாகிற நால் வகை.

பெத்தமற - பெத்தநிலையற்று முத்திநிலை எய்த. முத்தனாகி - முமுட்சுவாய். பிறழ்வுற்று - பெத்தநிலையிலிருந்து மாறி, தத்துவம் - உண்மைப்பொருள். தலைப்படுதல் - சிறத்தல். தலைப்படாதவாறு என்பது ஓசை

நோக்கி விரித்தல் விகாரம் பெற்றுத் 'தலைப்படாதவ் வாறு' என ஆயிற்று. தலைப்படாது அவ்வாறு எனப் பிரித்தலுமாம்.

பித்தான சீடன் - உய்யுநெறியும் உறுதுணையும் கிடைத்தும், அவற்றைக் கொண்டு கடைத்தேருதவன் பித்தனேயாம் ஆதலின் இங்ஙனம் கூறியதாம்.

ஈயப்பெரு - உண்மை ஞானங்கள் உதவப்பெரு. தான், ஏ : அசைகள். (116)

**மன்னும் மலம் ஐந்தும் மாற்றும் வகையோரான்**
**துன்னிய காமாதி தோயுந் தொழில்நீங்கான்**
**பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்**
**அன்னிய னுவன் அசற்சீட னுமே.** 1689

இ - ள் : அசற்சீடன் இயல்பு அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் நிலைபெற்ற ஐவகை மலத்தையும் அகற்றும் உபாயங்களை ஆராய்ந்தறியான்; பொருந்திய காம முதலானவற்றுள் மூழ்கும் தொழிலிலிருந்தும் பிரியான்: பின்னிக் கிடக்கின்ற பொய்மையுடையவன் : பிறப்பிறப்புகளுக்கும் அஞ்சான்; இவனே அசற்சீடன்- இவன் அன்னியனுவன் என்றவாறு.

ஐவகை மலங்களாலும் கட்டுண்டு, காமாதிகளில் தோய்ந்து பொய்யே பேசி, பிறப்புக்கும் இறப்புக்கும் அஞ்சாதிருப்பவன் அசற்சீடன்; அவன் அன்னியன் என்பது கருத்து.

மலம் ஐந்தாவன: ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. இவை ஆன்மாவின் அறிவை மறைத்துப் போகத்தின்கண் முனைப்பித்துச் செலுத்துவன. அவற்றை உண்மைச் சரியையாதிகளால் நீக்கி உய்யும்முயற்சியில் தலைப்படான் என்பார் 'மாற்றுமவகை ஓரான்' என்றார்.

காமாதி - காமம், குரோதம மோகம், லோபம், மதம், மாற்சரியம் என்ற ஆறு வகையான பகைக் குணங்கள். இவை உள்ளவரை ஞானஒளி விளக்கம் பெறுதாதலானும், இவற்றை ஆன்மா ஆலயவழிபாடு, அடியார் கூட்டம், சாதனங்களைத் தரித்தல் இவற்றால் நீக்கிக்கொள்ள முயற்சிக்க வேண்டுமாதலானும் இவற்றைச் செய்யான் என்பார் 'நோயுந்தொழில் நீங்கான்' என்றார்.

சிலந்தியின் வலைபோலப் பொய் ஒன்றற்கொன்று ஆதரவாய்ப் பின்னிககொண்டு, தன்னகப்பட்டாரை விடுவியாது ஆதலின் 'பின்னிய பொய்' எனப் பட்டது.

பிறப்பும் இறப்பும் மாறிமாறி இடையறுது வருவனவாதலின், அவற்றிற்கு அஞ்சவேண்டியது இன்றியமையாததாகவும் அது செய்யாதான் அசற்சீடன் ஆனுன். அசற்சீடன் உண்மைஞானிகட்குப் புறம்பானவன் ஆதலின் 'அன்னியன் ஆவன்' எனப்பட்டது. இதனுன் அதிகார இயைபும் அறிக.

இங்ஙனம் பத்து மந்தரங்களானும் அபக்குவனுகிய குருவும், அபக்குவனுகிய சீடனும் கூடின் அது குருட்டாட்டமாம் என்பதும், புறம்போவாரும், மலமாயைகளை நீக்கிக்கொள்ள விரும்பாதாரும்,

திரிகரணசுத்தி இல்லாதாரும், சினம் முதலிய தீக்குணம் உள்ளாரும், சரியையாதிகளைப் பற்ற விருப்பில்லாதாரும் அபக்குவர். அவர்களுக்கு உபதேசம் செய்தலாகாது என்பதும் உணர்த்தப் பெற்றமை காண்க.

## 14. பக்குவன்

அஃதாவது, ஆன்மாக்களின் அறிவு தத்தமக்குரிய சோபானமுறையில் தூலமும் சூக்குமமுமாய் நிகழ்வதால் ஆன்மாக்கள் அபக்குவன் என்றும் பக்குவன் என்றும் இருவகைப்படுமாதலின் முன்னதிகாரத்தான் அபக்குவனை உணர்த்தி, இவ்வதிகாரத்தால் மலம் நீங்கித் தன் வியாபகம் முற்றும் விரிய விளங்கும் பக்குவான்மாவின் இயல்பைப் பதினன்கு மந்திரங்களான் உணர்த்திய எடுத்துக் கொண்டார் ஆசிரியர்.

**தொழிலறி வாளர் சுருதிகண் ணகப்**
**பழுதறி யாத பரம குருவை**
**வழியறி வார்நல் வழியறி வாளர்**
**அழிவறி வார்மற்றை யல்லா தவரே. 1690**

இம் — எனின், முத்தி எய்துதற்குரிய வழியறிவார் இவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வீடுபேறடைதற்கு உரிய நல்ல வழியை அறிந்து அதனை ஆளுவார், வேதாகமங்களையே கண்ணகக்கொண்டு குறையொன்றும் பொருந்தாத சீடனை உய்விக்கும் தொழிலறிந்து ஆள்பவராகிய பரமகுருவை

வழிபடுதலை அறிபவர்களேயாவர். அங்ஙனம் வழிபட அறியாதவர் தமக்கு வரும் அழிவை அறிபவரேயாவர் என்றவாறு.

ஆசாரியனை வழிபடுவர்களே நல்வழி அறிந்தவர்; அல்லாதார் அழிவு அறிந்தவர்களே ஆவர் என்பது கருத்து.

நல்வழி அறிவாளர், சுருதிகண்ணாகப் பழுது அறியாத தொழில் அறிவாளர் பரமகுருவை வழியறிவார்; அல்லாத மற்றையார் அழிவு அறிவார் எனக் கூட்டுக.

சுருதி - எழுதாக் கிளவிகளாகிய வேதாகமங்கள். அவற்றைக் கண்களாகக் கொண்டமையால் தம்மாட்டு என்றும் குற்றம் பொருந்தாதவர்களே பரம குரு ஆவர். அவர்களே மாணவனுடைய மல மாயை கன்மங்களைக் கண்ணோக்காலும், பரிசத்தாலும், கிரியைகளாலும் நீக்கும் தொழிலை ஆள்பவர்கள். அவர்களை வழிபடும் முறையை அறிவார்களே தாம் உய்தற்குரிய நல்வழியை அறிந்தவர்கள் என்பதாம். பழுது - காமக் குரோதாதிகளால் விளையும் குற்றம். அவர்களுக்கு வேதாகமமே கண்ணாக இருத்தலின் பழுதே வாராது ஆகையால், அவர்களைப் பழுதறியாத பரமகுரு என்றார்.

வழி அறிவார் - வழிபடுதலை அறிபவர்கள்: ஆசாரியனையும், சிவலிங்கத்தையும், சிவாலயத்தையும், சிவனடியாரையும் சிவனெனவே கருதிவணங்குக என்ற விதிப்படி, குருவைச் சிவனெனக் கும்பிடுதலை அறிந்தவர். குருவே சிவனெனக் கூறினன் நந்தி ஆதலான்.

இம்மந்திரம் மரபறிந்து வழிபடும் பக்குவர் நிலை உணர்த்துதலின் அதிகார இயைபு அறிக. (118)

**பதைத்தொழிந் தேன்பர மாவுனை நாடி**
**அதைத்தொழிந் தேன்இனி யாரொடும் கூடேன்**
**சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர**
**உதைத்துடை யாயுகந் தாண்டரு ளாயே. 1691**

இம் - எனின், உலகியலை வெறுத்துத் திருவடியைப்பெற விரைகின்றமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பரமா! உன்னைத் தேடிப் பதைபதைத்து உலகியற்பற்றை ஒழிந்தேன்; எங்கெங்கோ சென்று யார்யாரோடோ கூடி அலைந்து ஓய்ந்தேன்; ஆதலால் இனியாருடனும் சேரேன்; அடியேனுடைய வினைகளைக் கெடுத்து என் கவலைகளை மாற்றி, உடையவனே! விரும்பி ஆட்கொண்டருள் வாயாக என்றவாறு.

புறப்பற்றும் அகப்பற்றுமாகிய இருவகைப் பற்றுக்களையும் நீக்கி உன்னையே பற்றினேன்; என் வினைகளைக் கெடுத்து, என்னை ஆட்கொண்டருளுக என வேண்டிக்கொண்டவாறும்.

தலையில் தீப்பற்றியவன் பதைப்பதுபோல. மாலையும், மாதரும் போகமுமாக வந்து பற்றும் மாயாகாரியங்களின் மயக்கும் வன்மையைக் கண்டு எங்ஙனம் தீருவேம் எப்போது தீருவேம் எனப் பதைபதைத்து அடைக்கலத்தானமாக உனைநாடி ஓடிவந்தேன் என்பார் 'பரமா உன்னைநாடி பதைத்தொழிந்தேன்' என்றார்.

அதைத்து – அலைந்து. சார்பாகாதாரையும் சார்பு ஆகாதனவற்றையும் சார்பெனக்கொண்டு, அதனால் வருந்தி அலைந்தேன் என்பதாம்.

சிதைத்தல் – வலியை ஒடுக்கி அழித்தல். சிந்தனை-கவலை. உதைத்து – திருவடியால் உதைத்து. திருவடி திருவருள்மயமான பரிசவேதி போல்வதாகலின் அது பட்டவுடன் என்னுடைய வினையும் சிந்தனையும் தேயும் என்பதாம்.

இங்ஙனம் அருளுக்கு விரையும் பக்குவநிலையை உணர்த்துதலின் அதிகார இயைபு அறிக. **(119)**

**பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை**
**விதைக்கின்ற வித்தினை மேல்நின்று நோக்கிச்**
**சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி**
**இசைக்கின்ற அன்பருக் கீயலு மாமே. 1692**

இம் – எனின், பக்குவரியல்பும் அவருக்கே உபதே தேசித்தல் ஆம் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முற்கூறியவண்ணம் பதைக்கின்ற போதே பரம் என்னும் வித்தையை விதைக்கின்ற மூலப் பொருளான சிவத்தைச் சகஸ்ரார தியானத்திலிருந்து கண்டு, சிதறுகின்ற மனத்தைச் செவ்வையாக அப் பரப்பொருளிடமே நிறுத்திப் பொருத்தி வைக்கின்ற அன்பர்கட்கு உபதேசமொழிகளை ஈதல் பொருந்தும் என்றவாறு.

சிவபரம்பொருளின் திருவடிக்கண் பதித்த சிந்தை யுடையார்க்கே அருளுபதேசம் ஆம் என்பது கருத்து.

பிணியால் வருந்துகின்றவர்கட்கு வருந்துங்காலத் திலேதான் மருந்தில் ஈடுபாடும் மிகும். எத்தனை வருத்தம் நேரினும் மருந்தைப் பல்லாற்றானும் தேட முயல்வர். அதுபோலப் பிறப்பும் இறப்பும் துன்பமும் இன்பமுமாகிய சுழலிற்பட்டு அலைகின்றபோது அடி யேன் பரலோகம் என்னும் விதையை விதைக்கின்ற ஆதிகாரணனாகிய அரனைக் காண நேரும் என்பார் மேல் நின்று நோக்கி என்றார். மேல் - சகஸ்ராரமாகிய உச்சியிலே.

சிந்தைக்கின்ற சிந்தை - புலன்களில் சென்று பற்றிச் சிதறிய மனம். செவ்வே நிறுத்தலாவது திருவடி ஒன்றையே பற்றிப் பிரியாது நிற்கப் பழக்குதல்.

ஈயலும் ஆம் - உபதேசித்தலுமாம். உபதேசிக்கத் தக்கார் இத்தகைய பரபரப்புடைய பக்குவரே என்பது உணர்த்துதலின் அதிகார இயைபு அறிக. (120)

**கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக**
**உள்ள பொருளுடல் ஆவி யுடனீக**
**எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று**
**தெள்ளி யறியச் சிவபதந் தானே.** 1693

இம் - எனின், குருவை அடுத்து உடல் பொருள் ஆவி மூன்றனையும் கொடுத்து அவர் உபதேசித்த வழியில் நிற்க என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கொண்டால் நல்ல குருநாதனைக் கொள்க; உடைமையாயுள்ள உடல் பொருள் ஆவி மூன்றினையும் காணிக்கையாகக் கொடுக்க; எவ்வளவு காலமும் இடைவிடாமல் அவருபதேச வழியிலேயே நின்று தெளிந்துணரச் சிவபதம் தானே விளையும் என்றவாறு.

குருவழி நின்றார்க்குச் சிவபதம் எளிதாம் என்பது கருத்து. ஏனைய வெளி. (121)

**சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு**
**ஓதிய நாளே உணர்வது தானென்று**
**நீதியுள் நேர்மை நினைந்தவர்க் கல்லது**
**ஆதியும் ஏதும் அறியகில் லானே,** 1694

இம் - எனின், உபதேசம் பெறுதற்குரிய திதி வார நட்சத்திரங்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சுவாதியும் விசாகமும் ஆகிய இரு நட்சத்திரங்களும், பெரிய தேளும் நண்டும் ஆகிய லக்னங்களும் ஆகச் சொல்லப்பட்ட நாட்கள் குரு முகமாக உபதேசங்களை உணர்வதற்குரியன என்று முறைமையை உணர்ந்தவர்கட்கன்றி, இதற்கு உரிய காரணமும் முதலும் அறிய முடியா என்றவாறு.

இவைகளே உபதேசங்கேட்டற்கு உரிய நாட்கள். இதன் காரணத்தையும் காலத்தையும் கேட்கவேண்டா என்பது கருத்து. தேள் - விருச்சிகம். நண்டு - கடகம்.

இந்த நாட்கள் ஏன் உபதேசம் கேட்டற்குரியன என்றும், எதுமுதல் யார் இங்ஙனம் குறித்தார்கள் என்றும் ஏதுக்களானும் எடுத்த மொழியானும்

மிக்குச் சோதிக்கவேண்டா என்பதாம். ஏனைய வெளி. (122)

**தொழிலார மாமணித் தூய்தான சிந்தை**
**எழிலால் இறைவன் இடங்கொண்ட போதே**
**விழலார் விறலாம் வினையது போகக்**
**கழலார் திருவடி கண்டரு ளாமே.** 1695

இ - எனின், வீணரும் உபாயங்களைக் கடைப் பிடிக்கின் உய்யலாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விழல்போல் வீணாரும் சரியை கிரியை யோகமாகிய தொழில்கள் முறையே முற்றுப் பெற பெரிய முத்தினைப்போலும் தூயதான சிந்தையிலே அழகே வடிவாக இறைவன் எழுந்தருளிய போதே, வலிய வினைகளும் கழல, வீரக்கழலையணிந்த திருவடிகளைத் தரிசித்து அருளை எய்தலாம் என்றவாறு.

விழல்போலப் பயன்படாதவர்களும் சரியையாதிகளில் நிற்பார்களாயின், மனத்தூய்மை பெற்று அம் மனத்தில் இறைவன் எழுந்தருள, வல்வினைகள் கழல, இறைவன் திருவடியைத் தரிசித்து அவன் அருளையும் அடையலாம் என்பது கருத்து.

தொழில் - சிவத்தொழில்களாகிய சரியையாதிகள். ஆர - நிறைய. பயின்று முற்றுப்பெற.

முத்துத் தெளித்தாற்போன்ற தூயதான தெளிந்த மனம், மாமணித் தூய்தான சிந்தை எனப்பட்டது. எழிலால் - அழகுடன்; மூன்றனுருபு உடனிகழ்ச்சியில் வந்தது.

விழல் — ஒருவகைப்புல். விளைந்து பயன்படாமை யோடு நெல்லின் விளைவையும் களையாய் வளர்ந்து கெடுப்பது. அதனைப்போன்ற மக்கள் விழலார் எனப் பட்டனர். மக்களில் பயன்பாடாதாரே பலர். அவர் களும் முயன்று அடியைச் சாரின் அருளையெய்தலா மென்பது. திருவடியின்கண் விருப்பத்தையுடையவர் எனலுமாம், விழல் - விரும்புதல். வணங்குதலுடையவர் எனினுமாம்,

விறலாம் வினை — வலிய வினை. பசு போத முனைப்பால் செய்யப்பட்டுக் கழிவின்கண் நீங்காது வளரும் மேலை வினை. இறைவன் இடங்கொண்டபோதே விளக்குப் புக இருள் பாய்ந்தாங்கு கெட்டன என்பார் 'இடங் கொண்டபோதே வினையது போக' என்றார்.

கழல் - வெற்றிக்காக அணியும் காலணி; வீரக் கழல் எனப்படுவது. இங்ஙனம் அடியார்களின் வினை கெடுத்து ஆட்கொள்ளும் வெற்றியின் சின்னமாக அணியும் அணி.

கண்டு அருள் ஆம் எனப் பிரித்துக் காணுதலால் அருள் உண்டாம் எனப் செய்தெனெச்சத்தைச் செய வெனெச்சமாக்கிக் காரணப்பொருளில் வந்ததாகக் கொள்க, இதுவும் பக்குவர்நிலை கூறலின் அதிகார இயைபு அறிக, (123)

**சாத்திக னும்பர தத்துவந் தானுன்னி**
**ஆத்திக பேத நெறிதோற்ற மாகியே**
**ஆர்த்த பிறவியி னஞ்சி யறநெறி**
**சாத்தவல் லானவன் சற்சீட னாமே. 1696**

இம் - எனின், சற்சீடனியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சத்துவகுண முடையவனுகி, உண்மைப் பொருளைத் தியானித்து, ஆஸ்திக மதத்தின் வகை களுள் ஒன்றைப்பற்றி, பாசத்தால்விளையும் பிறவிக்கு அஞ்சி எடுத்த பிறவியிலேயே முத்தியெய்தும் விருப் புடன் அதற்குரிய சிவதன்மத்தைக் கைக்கொள்ள வல்லவனே சற்சீடனுவான் என்றவாறு.

சாத்துவிகனுய் ஆஸ்திக அடிப்படையில் பற்றுக்கொண்டு, சிவ தன்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவனே சற்சீடன் என்பது கருத்து.

சாத்திகனுய் - சத்துவிகனுய்? என்பதன் திரிபு. சாத்துவகுணம் ஆழ்கடல்போல அலையின்றி அமைதி யாய்ப் பொருள் புலப்பாட்டின்கண் தெளிவுறுத்துவ தாய் இருக்கும் குணம். அதனை உடையவனே சாத்துவிகன். அவன் மேலான உண்மைப்பொருளை யன்றி, வேறு உலகியலின்பப் பொருள் ஒன்றையு சிந்தியான் ஆதலின் 'பரதத்துவம் தான் உன்னி என்ருர்,

ஆத்திகநெறி — முதல்வன் ஒருவன் உண்டென்று உறுதியாகக் கொள்கின்ற மார்க்கம். தோற்றமாதல்ா வது அந்நெறிக்கண் பற்று மிகுதல், மாணிக்கவாசக சுவாமிகள் 'தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி, முனிவிலாததோர் பொருளது கருதலும்' என்றரு ளியது காண்க.

ஆர்த்த பிறவி - மல மாயா கன்மங்களால் கட் டுண்ட பிறப்பு வரும் பிறவிக்கு அஞ்சுதலும், வந்த பிறவியைப் பயன்படுத்தி முத்தி எய்த எண்ணுதலும் பக்குவர் செயலாதலைச் சிந்திக்க.

அறநெறி - சிவதன்மங்களாகிய உண்மைச் சரியையாதிகள்.

**சத்தும் அசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்**
**சித்தை யுருக்கிச் சிவன்ருள் கைகாட்டப்**
**பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்**
**சத்தியின் இச்சை தகுவோன்சற் சீடனே. 1697**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : இவை உண்மைப் பொருள்கள்; இவை பொய்ப்பொருள்கள் என்றும், இவை எங்ஙனம் சத்தும் அசத்துமாயின என்றும் தானே தெளிந்து, மனத்தைக் கசியப்பண்ணி, சிவபெருமானுடைய திருவருள் துணைசெய்ய அன்புநெறிக்கண் நின்று சிவஞானம் மேவரப் பெற்று, இறைவனையும் அடியார்களையும் பணிந்து, ஆனந்தமே வடிவான சிவசத்தியின் இச்சைக்குத்தக தன்னைப் பரிபாகம் செய்வோனே சற்சீடனும் என்றவாறு.

பொய்ப் பொருளாகிய பிரபஞ்சத்தையும் மெய்ப் பொருளாகிய தலைவனையும் தன்னையும் பொதுவும் சிறப்பும் ஆகிய இலக்கணங்களான் உள்ளவாறு உணர்ந்து. உள்ளத்தை உருக்கித் திருவருள் நெறி நின்று, சிவனடியாரையும் சிவதருவையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு, சிவஞானம் பெற்றுச் சிவசத்தியால் விரும்பப்படுபவனே உண்மையான பக்குவனும் என்பது கருத்து.

ஆசிரிய வசனத்தானும் ஆகமத்தானும் தான் கேட்டவற்றை ஆய்ந்தும் தெளியாதபோது உண்மை ஞானம் கைகூடாதாதலின் 'தான் உன்னி' என்றார்'

சிந்தை என்பது எதுகைநோக்கிச் சித்தை என ஆயிற்று. சிவனருள் கைகாட்ட அவன் அருளாலே அவனருள் பற்றுதலை உணர்த்திற்று.

ஞானத்தைச் சோபான முறையில் எய்தலாம்: ஆயினும், அன்புநெறியான் எய்துதல் எளிமை யானதும் இனிமையானதும் ஆதலால் 'பத்தியின் ஞானம்பெற' என்றார்.

இத்தகைய ஆன்மாவிடம் சிவசத்தியின் நிபாதம் தானே அமைதலின் 'ஆனந்தச் சத்தியின் இச்சை தகுவோன்' என்றார். (125)

**அடிவைத் தருளுதி யாசானின் றுன்று**
**வடிவைத்த மாமுடி மாயப் பிறவி**
**அடிவைத்த காய அருட்சத்தி யாலே**
**அடிபெற்ற ஞானத் தாசற்று ளோனே.** 1698

இம் - எனின், திருவடிஞானம் பெற்றோனே சற் சீடன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள: ஆசாரியனே! இக்கணமே தேவரீ ருடைய திருவடியைச் சூட்டியருளும் என்று குரு நாதனுடைய திருவுருவைத் தமது பெரிய முடிக்கண் தியானித்த அளவிலே, தம்முடைய வஞ்சனைநிறைந்த பிறவிகளைக், காயத்தொடங்கிய திருவருள்சத்தியாலே பழகிய ஞானமுடையவனே சற்சீடனாவன்: அவனே குற்றமற்றவன் என்றவாறு.

குருநாதா! திருவடி தீக்கைசெய்யும் என்று அவன் உருவைத் தம் சிரமீது தியானித்த அளவிலே அரு ளாண்மையின் கருணையால் சிவஞானம் கைவரப்பெறு வன்; அவனே குற்றமற்ற சற்சீடன் என்பது கருத்து.

ஆசான் இன்று அடிவைத்து அருளுதி (என்று) வடிவைத் தம் மாமுடி உன்னு, மாயப் பிறவி காய அடிவைத்த அருட்சத்தியாலே அடி பெற்ற ஞானத் தன் ஆசற்றுளோன் என இயைக்க.

சீடனுடைய வேண்டுகோள் 'ஆசான் இன்று அடிவைத்தருளுதி' என்பது. வேண்டுதல்மட்டும் பயனின்று, தியானமும் வேண்டும் என்பார் அடுத்து, வடிவைத் தம் மாமுடி உன்னு என்றார். குருநாதனுடைய திருவுருவைத் தம் முடிமீது அதாவது உச்சியிலும், உச்சிக்கு மேலே துவாதசாந்தத் தானத்திலும் தியானிக்க என்க. உன்னு என்னும் இறந்தகால வினையெச்சத்தை உன்ன எனச் செயவெனெச்சமாக்கிப் பொருள்கொள்க.

மாயப்பிறவி – வினைக்கீடாக மாயையோடு கூடி வருகின்ற பிறவிகள், அது மேன்மேலும் நீரொழுக்குப் போல இடையறு துவாராமல், திருவருட்சத்தி காப்பள் என்பார் 'மாயப்பிறவி காய அடிவைத்த அருட்சத்தியாலே' என்றார்.

அடிபெற்ற – பழகிய. சிவஞானம் கற்றுஞ் சாக்கன்றுதலின் திருவருள் துணையோடு பலநாட்பழகி நிலைபெறவேண்டியதொன்று என்ற உண்மையை உணர்த்தியவாறும்.

ஆசு - ஆன்மாவை அநாதியே பற்றிய குற்றமான ஆணவமும், கன்மமும்; ஆகவே ஆசற்ற அடிபெற்ற ஞானத்தனிலக்கணம் அறிவித்தலின் இம்மந்திரத்தின் அதிகார இயைபு காண்க. (126)

சீராரு ஞானத்தின் இச்சை செலச்செல்ல
வாராத காதல் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோன்
ஆராயும் ஞானத்த னுமடி வைக்கவே 1699

இம் – எனின், திருவடிதீட்சைபுரியப் பக்குவனு தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிறப்புப்பொருந்திய ஞானத்தில் இச்சை மிக, அமையாத காதல் குருநாதன்மீது விளைய, புறப் பொருளைச் சாராத நால்வகை உபாயங்களும் பொருந் திய பக்குவன் குருநாதன் திருவடிதீட்சை புரிய ஆராயப்படுகின்ற ஞானத்தையுடையனுவன் என்றவாறு.

ஆசாரியன் திருவடிதீட்சை புரியச் சிவஞானம் பெறுபவன் பக்குவன் என்பது கருத்து.

சீராரும் ஞானம் – உண்மை ஞானம். அதுவே சிவத்தை உணர உதவுவதாகலின் அது சீராரும் ஞானம் எனப்பட்டது. இச்சை – விருப்பம். செலச் செல – உண்டாக உண்டாக. அடுக்கு இடை விடாமைப் பொருளின் வந்தது.

ஆராத காதல் – போதும் என்றமையாத முறுகிய அன்பு. குருபரன் யாரும் பெறாத பேற்றினை அருளிய வனுதலின் அமையாத காதல் அவன் பால தாயிற்று. ஆகவே அவன் உபதேசித்தவழியே நின்று நால் வகை உபாயங்களும் பயின்றோன் ஞானத்தனும் என்றவாறு.

சாராத சாதகம் – உலகியல் நோக்கோடு சார்ந்த உபாயச்சரியையும், உபாயக்கிரியையும், உபாய

யோகமும், உபாய ஞானமுமின்றி உண்மைச் சரியை யாதிகள் சிவத்தைச் சார்ந்தனவாதலின் அவை (உலகியலைச்) "சாராத சாதகம்" எனப்பட்டன. சாதகம் நான்கும் முற்கூறப்பெற்றன. தன்பால் உற்றோன் – தன்னிடம் பொருந்தியவன்.

ஆராயும் ஞானத்தன் ஆம் – அவற்றின் இயல்பு ஆய்ந்து தெளியும் அறிவையுடையோன் ஆவன் என்பதாம். தெளிதலாவது ஒன்றற்கொன்று இன்றியமையாத சோபானமாயிருத்தலை அறிந்து கடைப்பிடித்தல் என்க.

வாராத காதல் எனப்பிரித்து அபக்குவர்களுக்கு வாராத அன்பு என்பர் சிலர். அவர் உடம்படுமெய் யாதலை அறிந்திலர் என்க.

அடிவைக்க - சீடனுடைய மலமாயா கன்மங்களைப் போக்கத் திருவடி முடிமேற்சூட்ட, இங்ஙனம் பக்குவன் சாதகங்களினின்று சாதிக்கத் திருவடி சூட்டப் பெறுவன்; ஞானவானுவன் என்றமையின் அதிகார இயைபு அறிக. (127)

**உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி**
**இணக்கிற் பராபரத் தெல்லையுள் இட்டுக்**
**குணக்கொடு தெற்குத் தாபச்சி மங்கொண்**
**டுணர்த்துமி னுவுடை யான்தன்னை யுன்னியே. 1700**

இம் - எனின், சிவகுருநாதன் சீடனுக்கு உணர்த்து முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குருநாதன் சத்தியோடுகூடிய பசுபதியைத் தியானித்து, மிகப் பரிபாகமுற்ற சீடர்க்கே உப

தேசிப்பன்; அங்ஙனம் உபதேசித்துப் பராபரப்பொரு ளாகிய சிவத்தின் அருள்வரம்பி லகப்படுத்திப் பொருத் துயாயின் நாற்றிசையிலும் நின்று உணர்த்துவன் என்றவாறு.

சிவகுருநாதன் சிவோகம்பாவனையிலிருந்து தான் எங்குமாயிருந்து சீடனைச் சிவத்தோடு இணைக்குவன்; உபதேசிப்பன் என்பது கருத்து.

மின் : ஆகுபெயர்; பராசத்தியை உணர்த்திற்று. மின்னொளிபோல யோகியர் உள்ளத்துத் தோன்றலின் மின் என்றாலுமாம்,

ஆ உடையான் - பசுக்களை அநாதியே அடிமை யாகப்பெற்ற பசுபதி. அவனை நினைத்தலாவது திரு வருளோடு கூடிய சிவத்தை நினைத்தல். அதாவது சிவோகம் பாவனை செய்தல்.

அதிபக்குவர் - தீவிரதர சத்திநிபாதமுடைய சீடர் கள். உணர்த்தும் என்ற வினையால் பெரும் பெயரா கிய தத்துவமசியை என்ற செயப்படுபொருள் வருவித் துரைக்க, அதுவே உண்மைப்பொருளாம் என்க.

அங்ஙனம் உணர்த்தியவுடனே பரிபாகம் உற்ற ஆன்மா இறைவனுடன் இணங்க விரையும் விட்டிடுதி கண்டாய் எனப் பரபரக்கும். அஞ்ஞான்று அந்த ஆன்மாவைச் சிவத்தோடு பொருத்தத் திருவுள்ளங் கொள்ளின் என்பார் " இணக்கின் " என்றார்.

பராபரம் - மேலானவற்றுக்கு எல்லாம் மேலான சிவம். அதன் எல்லையுள் இட்டு இணக்கின் - அதன்

வியாபகத்துள் வியாப்பியமாக ஆன்மா இருத்தலை அறியச்செய்தல் என்க.

குணக்கு – கிழக்கு. உத்தரம் – வடக்கு. பச்சிமம் – மேற்கு இவ்வண்ணம் நாற்றிசையும் கூறவே மேலும் கீழுங் கோணற்றிசைகளு மடங்கும். ஆகவே எங்குமா யிருந்து உணர்த்தும் என்க. குருநாதன் எங்குமா யிருத்தலாவது சிவகுருவும் சிவனைப்போலவே எங்கு மாயிருக்கும் தன்மையுடையான்; முத்தன் ஆகையால் என்னும் ஆகம வாக்கியங்கொண்டு தெளிக.

இம் மந்திரம் அதிபக்குவர்க்கு ஆசான் அறிவித்து எங்குமாயிருக்கை உணர்த்துவதால் அதிகார இயைபு அறிக. (128)

**இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்**
**குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்**
**சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ**
**டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே.** 1701

இ-ம் – எனின், ஞானசாரியனிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சிவனடிகளிலேயே எப்போதும் மனத்தைத் தாழச்செய்து, ஐந்து வகையான வணக்கங்களையுஞ் செய்து, ஆன்மாவாகிய தனக்குள்ள குறைகளைப் பரிபூரண சிவத்தினிடம் விண்ணப்பித்து, அக்குற்றங்களை நீக்கி, சாந்தம் சுத்தம் ஆனந்தமாகிய குணங்களைப் பெற்றுச் சிவத்தைப் போற்றச் சீடனுகிய நீ சிறை போன்ற இவ்வுடற்பற்றி னீங்குதற்கேற்ற உபாயங்களை உணர்த்திச் சிவத்தோடு அநந்நியமாய் நிற்கும் நிலையை

உன் அறிவு தெளிந்து நிலைபெறும்படித் தெரிவிப்போனே சன்மார்க்கியாகிய ஆசாரியனுவான் எ - று.

என்றும் சிவசிந்தையும் சிவப்பணியும் செய்து, பிறப்பு அறச் சிவோகம்பாவனையைத் தெரிவிப்பவனே சற்குரு என்பது கருத்து.

தாழ்ந்து — பணியச்செய்து என: பிறவினையாக்குக. அடிதாழ்தல் தலையின் செயலாயின் பின் ஐவணக்கமும் செய்து என்பதில் அடங்கிய ஏகாங்க நமஸ்காரத்தை விதந்து கூறவேண்டிய இன்றியமையாமை இல்லை என்க. ஆதலால், சிந்தையை இறையடிக்கண் தாழ்த்தி எனப்பொருள் காண்க.

ஐவணக்கம் — ஏகாங்கம், திரியங்கம், பஞ்சாங்கம்; ஷடங்கம், அஷ்டாங்கம் என்ற ஐவகை வணக்கங்கள். தலை வணங்குதல் ஏகாங்கம். இருகை குவித்துத் தலை வணங்குதல் திரியங்கம், இருகை, தலை, இருகால் நிலத்திற்றோய வணங்குதல் பஞ்சாங்கம். தலை, இரு கை, மார்பு, முழந்தாள் இரண்டும் பட வணங்குதல் ஷடங்கம், தலை, மார்பு, இருசெவி, இருகை, பாதங்கள் நிலத்தில் பட வணங்குதல் அஷ்டாங்கம் என்க.

குறை — குற்றங்கள். ஆசாரியன் சுத்தான்மாவாதலின் அவனுக்குக் குற்றமில்லையாகவும், தன்னிடம் வந்த பரிபாகமுற்ற சீடனுக்குள்ள குறைகளைச் சிவ சன்னிதானத்தில் தெரிவித்து, அவற்றைப் போக்கியருளவேண்டும் என்று விண்ணப்பித்து அக்குற்றங்களைச் சீடனுக்கும் தெரிவித்து, அவன் சீவகுணம் ஒழிந்து சிவகுணம் பெறுமாறு அருள் செய்தலும் ஆசாரியனது கடமையாதலின், இத்தீட்சாவிதியைக்

"குறையது கூறிக் குணங்கொண்டு போற்ற" என்பதால் குறித்தவாறு. மரபறியார் சிலர் பள்ளியாசிரியர்போலக் குறைகளைச் சொல்லி, அவன் குணங்களைக் கொண்டு அவனைத் தன் மாணவனாக ஏற்க என்பர். அது ஞானாசாரியன் நிலைக்குச் சாலாமை தெளிக.

நீ சிறையுடல் அற என மாற்றுக. இது ஆசாரியன் உரையாகக் கொண்டு கூறியதாம். ஆன்ம வியாபகத்தை மறைத்துச் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையதாகச் செய்தலின் உடல் சிறை எனப்பட்டது.

மணியின்கண் ஒளிபோலச் சிவத்தோடு சீவன் ஒன்றியிருக்கும்நிலை, என்றும் உளதாயினும் அதனை உயிர் ஆணவக்கலப்பால் அறியாதிருந்தது. ஆணவம் வலி குன்றியதால் இப்போது உணரப்படுவதாயிற்று உணர்த்துபவன் குரு என்பதாம்.

சன்மார்க்க குருநாதன் பக்குவர்க்குப் பயன்படும் முறை தெரிவித்தலால் இம்மந்திரத்திற்கும் அதிகாரத்திற்கும் உள்ள இயைபு உணர்க. (129)

**வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்**
**வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச்சித் தாந்தத்து**
**வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே**
**தாழ்க்குந் தலையினேன் சற்சீட னாமே.** **1702**

இ - எனின், சற்சீடனிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள் : மூவகை ஆசைகளையும் விடும் நெறியே வேதாந்தம் ஆதலால், உலகியல் வாழ்விற்கு உதவுவனான புலன்களின் வழியே செல்வதான

பொறிகளை மாற்றி, சித்தாந்தச் செந்நெறியில் விருப்பத்தைச் செலுத்தும் சிறந்த வேதாந்தியான குரு திருவடிகளில் தாழுத்தும் தலையை யுடையவனே சற்சீடனாவான் என்றவாறு.

உலகியல் ஆசையை உவர்ப்பதான வேதாந்த நெறியினும் சீவகரணங்களைச் சிவகரணமாகச் செய்யுஞ் சித்தாந்த நெறி செலுத்தும் ஆசாரியன் திருவடிகளை வணங்குபவன் சற்சீடன் என்பது கருத்து.

வேட்கை – பொருள்களின் மேற்றோன்றும் பற்றுள்ளம். மாலை மாதர் போகம் இவற்றில் தோன்றும் காதன்மை யென்க. இவைகள் மேற் செல்லும் பற்றுள்ளத்தை விடு என்று உபதேசிப்பதே வேதாந்தம். பொறிகளை அவியாது. புலன்களில் சென்று பற்றாது சிவத்தினிடமே பற்றி நிற்கச் செலுத்துவதான முறையைத் தெரிவிப்பதே சித்தாந்தம். இதனைத் தெரிவிப்பவனே உண்மை வேதாந்தி; அவன் திருவடிகளே பற்றத் தகுவன என்பதாம். சீவகரணங்களைச் சிவகரணமாக, சிவமொன்றே நுகரப்படும் பொருளாகக் கொண்டு அநுபவிப்பதே சித்தாந்தம் என்க.

தாழ்த்தல் – பணிதல்; தங்குதலும் ஆம். அவன் திருவடிக்கண்ணேயே தங்கியிருக்கச் செய்யும் சிந்தையை யுடையோன் சற்சீடன் என்பதால் இம்மந்திரம் பக்குவன் என்ற அதிகாரத்திற்கு மிக்க இயைபுடைத்தாதல் காண்க. (130)

**சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை**
**சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே**
**சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்**
**அற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே.** 1703

இம் - எனின், பக்குவர்க்கு உளதாம் சித்திகள் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நல்லகுணம், வாய்மை, தயா விவேகம், தண்மை, சிவகுருநாதன் திருவடிகளை நிழல்போலப் பிரியாத தன்மை, உண்மைஞானமேயான பரஞா னத்தைச் சிந்தித்துத் தெளிய அறிதல், அற்புதங் காணப் பெறுதல் ஆகிய இவ்வனுபவங்கள் படிப் படியாகத் தோன்றப்பெறுபவனே சற்சீடனுவன் என்றவாறு,

சற்சீடனுக்கு முற்கூறிய சற்குணம் முதலிய அனுபவங்கள் நிகழும் என்பதாம்.

சற்குணம் - சுத்த சத்துவகுணம் மிகுந்த தன்மை யால், கோமாற்கே யாம் என்றும் மீளா ஆளாய்க் கொய்மலர்ச்சேவடியிணையே குறுகினோம் யாமார்க்கும் குடியல்லோம் என்ற உறுதி நிலைக்கப்பெறுதல்.

வாய்மை - சிவநாமத்தை அன்றி வாழ்வினும் தாழ்வினும் மறந்தும் பிற சொல்லாமை. மெய்ம்மை என்பாரும் உளர். அஃது உலகியலில் நிற்பார்க்கு உரிய தாமே யன்றி சிவாநுப்வத்திற்கு அது சிறியதென்க.

தயா - எல்லா உயிர்களும் இறைவனுறை கோயில் என்று காண்கின்ற கருணை உள்ளம். விவேகம் - இவை பசுபுண்ணிய இவை பதிபுண்ணியம். இவை பிறவிக்கு ஏது, இவை முத்திக்கு ஏது என்று விவேகித் தறிகின்ற அறிவு, தண்மை - வேற்றுமை நோக்காது எல்லா உயிர்களிடத்தும் செலுத்தப்பெறும் தணிந்த கருணையுள்ளம்.

சற்குருவின் திருவடிகளை நிழல்போல நீங்காமை யாவது, நிழல் தன்னை நீங்காது அடி உறைந்தற்று என்று தேவர் கூறியதுபோலக் குருவைவிட்டு நீங்காமலும். குருவின் திருவடிக்கீழே அடங்கி முனைக்காது நிற்றலும் ஆம்.

அற்புதம் - சிவானுபவத்தில் அவ்வப்பொழுது வெளிப்படும் இன்னது என்று விவரிக்க இயலாத அனுபவச் சிறப்பு. " அவற்றை " மெய்யனாய் வெளிக் காட்டி நின்றதோர் அற்புதம் " வேந்தனாய் வெளிநின்ற தோர் அற்புதம். அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம் " என அனுபூதிமான்கள் அறிவிப்ப வாற்றால் அறிக.

இங்ஙனம் அனுபவம் பெறுதலே சற்சீடன் இயல் என்றலின் அதிகார இயைபு அறிக.

பதினான்கு மந்திரங் களானும், சற்குருவை அடுத்து, திருவடிச்சார்பு ஒன்றையே நாடிச் சிவப்பணி செய்து சிவானுபவம் பெறுதலே பக்குவன் இயல்பு என உணர்த்திய தொடங்கி பக்குவன் சற்குரு இவர்கள் இலக்கணங்களையும், உபதேசத்திற்குரிய நாட்கள் " வேதாந்த சித்தாந்த வேறுபாடு, உண்மை அனுபவம் இவற்றை உணர்த்தினார் சிவயோகியாகிய திருமூல தேவநாயனார்.

**ஆறாந்தந்திரம் முற்றிற்று.**

**திருமூலதேவர் திருவடி வாழ்க !**

**சித்தாந்தச் செந்நெறி வெல்க !!**

உ

சிவமயம்

# திருமந்திரம்

## ( ஐந்து, ஆறு தந்திரங்கள் )

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## ஐந்தாந் தந்திரம்

[ எண் : பாட்டெண் [

# ஆறும் தந்திரம்

( பாடல் எண் )

சிவநேயச் செல்வீர் !

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவுளப்பாங்கின் வண்ணம்

நிகழும் திருவள்ளுவர் - ஆண்டு 2027 மெய்கண்டார் - ஆண்டு 774 தாது - ஆண்டு மார்கழி 23-ஆம் நாள் (7—1—97) செவ்வாய்க்கிழமை முதல் திருவள்ளுவர்-ஆண்டு 2028 தை மாதம் 3—ஆம் நாள் (16—1—97) வியாழக்கிழமை வரை

ஆதீனம் குருமுதல்வர்

[illegible] திரு நமசிவாயமூர்த்திகள்

[illegible] திருநாள் குருபூசை விழா

சிறப்பாக நடைபெறும். விழா நாட்களில்

சுந்தரமூர்த்தி [illegible]யனார் அருளிய தேவாரச் சிந்தனை விரிவுரைகள்

வேணுவ[illegible]லிங்க விலாசத்திலும் (கொலுமண்டபம்)

கலைநிகழ்ச்சிகள் [illegible] அம்பலவாணர் கலையரங்கத்திலும் நிகழ்வுறும்.

16—1—97 [illegible] வியாழக்கிழமை அன்று குருபூசை நிகழ்வுறும்.

அன்பர்கள் அனைவரும் [illegible] கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்று இன்புற விரும்புகின்றோம்.

இங்ஙனம்,

காறுபாறு - வைத்தியநாதத் தம்பிரான்

திருவாவடுதுறை

01—[illegible]—1997

உ

சிவமயம்

சிவநேயச் செல்வரீர் !

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

**சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

நிகழும் திருவள்ளுவர் - ஆண்டு 2027 மெய்கண்டார் - ஆண்டு 774 தாது - ஆண்டு மார்கழி 23-ஆம் நாள் (7—1—97) செவ்வாய்க்கிழமை முதல் திருவள்ளுவர்-ஆண்டு 2028 தை மாதம் 3-ஆம் நாள் (16—1—97) வியாழக்கிழமை வரை

ஆதீனம் குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாயமூர்த்திகள்**
**மகரத்தலைநாள் குருபூசை விழா**

சிறப்பாக நடைபெறும். விழா நாட்களில்

சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய தேவாரச் சிந்தனை விரிவுரைகள்
வேணுவனலிங்க விலாசத்திலும் (கொலுமண்டபம்)
கலைநிகழ்ச்சிகள் அம்பலவாணர் கலையரங்கத்திலும் நிகழ்வுறும்.
16 — 1 — 97 வியாழக்கிழமை அன்று குருபூசை நிகழ்வுறும்.

அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்று இன்புற விரும்புகின்றோம்.

இங்ஙனம்.

திருவாவடுதுறை
01—01—1997

காறுபாறு - வைத்தியநாதத் தம்பிரான்

**முதல் திருநாள் — 7 — 1 — 97 — செவ்வாய்க்கிழமை**

காலை மணி 5 - 30—6 - 00 கொடியேற்றம்

மாலை மணி 6 - 00 "தேவார இசைமணி"

**திருமுறை விண்ணப்பம் :** திரு. சு. சம்பந்த தேசிகர், திருமுறைப் பணியாளர்,
அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில், திருவிடைமருதூர்.

**வரவேற்புரை :** 6 - 30 தவத்திரு. சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள்
திருவாவடுதுறை.

**சிறப்புரை :** 6 - 40 திரு. S. நடராஜன், M A.,
மாவட்ட செய்தி மக்கள் தொடர்பு அலுவலர், நாகப்பட்டினம்.

**சொற்பொழிவு :** 7 - 00 முனைவர். திரு சி. சிவசங்கரன், M. A., Ph. D.
மயிலாடுதுறை. "மூவராயும் இருவராயும் முதல்வன் அவனே"

8 - 00 திரு. டி. செந்தில்குமார், B A., B. Ed.,
தமிழாசிரியர், தி. ஆ. மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.
"சுந்தரர் தேவாரச் சிறப்பு"

**மகிழ்வுரை :** 8 - 20 திரு. K. இளங்கோவன் M. A., B. Ed.,
ஆசிரியர், தி. ஆ. அ. தே. நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.

**குருமரபு வாழ்த்து :** 8 - 30

---

**கலை நிகழ்ச்சி இரவு:** 8 - 30 "இன்னிசை"

திருமதி லலிதா கணேசன் குழுவினர்,
மயிலாடுதுறை.

இரண்டாம் திருநாள் 8 — 1 — 97 புதன்கிழமை

மாலை மணி 6 - 00 திருமுறை விண்ணப்பம் : திரு. செந்தில் ஓதுவார் திருமுறைப் பணியாளர், அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில், திருநாகேச்சரம்

வரவேற்புரை : 6 - 30 தவத்திரு. மீனாட்சிசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், திருவிடைமருதூர்.

சிறப்புரை : 6 - 40 திரு. மா. கலியபெருமாள், B. A., B Ed., கூடுதல் உதவிக் கல்வி அலுவலர், திருவிடைமருதூர்;

சொற்பொழிவு : 7 - 00 முனைவர். திரு. த. அகரமுதல்வன் M. A., Ph. D., பேராசிரியர், பூம்புகார் கலைக்கல்லூரி, மேலையூர்; " கருதுவார் காணும் வண்ணம் "

8 - 00 திருமதி S. P. கமலா, B. A., B. Ed., தமிழாசிரியர், தி. ஆ. மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர் " சுந்தரர் தேவாரத்தில் புராணச் செய்திகள் "

மகிழ்வுரை : 8 - 20 திரு. S. குப்புசாமி, M. A., B. Sc., M. Ed., உதவித் தலைமை ஆசிரியர், தி. ஆ. மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.

குருமரபு வாழ்த்து 8 - 30

கலை நிகழ்ச்சி இரவு 8 - 30 " இன்னிசை "

" இசைஒளி " திரு. K. N. மதிவாணன், குழுவினர் மயிலாடுதுறை.

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : | மாலை மணி 6 - 00 | **ஆர். சாமிநாத ஓதுவார்,** திருமுறைப் பணியாளர், அருள்மிகு பிராணநாதசுவாமி திருக்கோயில், திருமங்கலக்குடி. |
| வரவேற்புரை : | 6 - 30 | **தவத்திரு. சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள்,** திருவாவடுதுறை. |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. R. **சிவக்குமார்,** B. A., B. L., *சார்பு நீதிபதி, மயிலாடுதுறை.* |
| சொற்பொழிவு : | 7 - 00 | *முனைவர்.* திரு. **பழ. முத்தப்பன்,** M. A., B Ed., *முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி மேலைச்சிவபுரி.* " குற்றமே செயினும் குணம் எனக் கொள்ளும் " |
| | 8 - 00 | திரு. U. **சுவாமிநாதன்,** M. A , B. Ed., *தமிழாசிரியர், தி. ஆ மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.* " சுந்தரர் தேவாரத்தில் இயற்கை எழில் " |
| மகிழ்வுரை : | 8 - 20 | திரு. M. **பாலகிருஷ்ணன்,** M. A., B. Sc., M. Ed., *உதவித் தலைமை ஆசிரியர், தி. ஆ, மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்* |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி : | இரவு 8 - 30 | " *நாட்டியம்* " *நடன ஆசிரியர். திரு.* V. S. ராஜேந்திரன் குழுவினர், *மயிலாடுதுறை.* |

நான்காம் திருநாள் | 10 — 1 — 97 | வெள்ளிக்கிழமை

---

மாலை மணி 5 - 30 "தேவார இசைமணி"

திருமுறை விண்ணப்பம் : திரு. பழனிவேல் ஓதுவார், திருமுறைப் பணியாளர்
அருள்மிகு வீழிநாதசுவாமி திருக்கோயில். திருவீழிமிழலை

வரவேற்புரை : 6 - 30 தவத்திரு. மீனாட்சிசுந்தரத் தம்பிரான் சுவாமிகள். திருவிடைமருதூர்.

சிறப்புரை : 6 - 40 டாக்டர். திரு. க. அருள்மொழி, இ. ஆ. ப.
மாவட்ட ஆட்சியர், நாகப்பட்டினம்

சொற்பொழிவு : 7 - 00 பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தன்
சென்னை. "இம்மையே தரும் சோறும் கூறையும்"

8 - 00 திரு. ப. மகாலிங்கம், M. A., B Ed..
தமிழாசிரியர். தி. ஆ. மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.
"சுந்தரர் தேவாரத்தில் இலக்கிய அழகு"

மகிழ்வுரை : 8 - 20 திரு. பா. மகாலிங்க தேசிகர்,

குருமரபு வாழ்த்து : 8 - 30 நூலகர். திருவாவடுதுறை ஆதீனம்.

---

கலை நிகழ்ச்சி : 8 - 30 "இன்னிசை" மயிலாடுதுறை.

செம்பை திரு. N. செந்தமிழ்ச்செல்வன், குழுவினர்

---

பரிசு வழங்கல் இரவு 9 - 00 பூசை நிறைவில் சீர் வளர் சீர் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆதீன மகாவித்துவான் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் நினைவுப் பரிசாக 'நற்றமிழ் நாவலர் கோன்' எனும் விருதும் சிறப்புகளும் சென்னை பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தம் அவர்கட்கு வழங்கி ஆசியருளுவார்கள்.

| | | |
|---|---|---|
| மாலை மணி | 6 - 00 | திரு. ஆ. சங்கரலிங்க ஓதுவார், |
| திருமுறை விண்ணப்பம் : | | திருமுறைப் பணியாளர் திருவாவடுதுறை ஆதீனம். |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு. காசி விசுவநாதத் தம்பிரான் சுவாமிகள் |
| | | திருவெண்ணெய்நல்லூர். |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. சொ. அமலநாதன் |
| | | காவல்துறை துணை கண்காணிப்பாளர், மயிலாடுதுறை. |
| | | ' ஆதீன சிவாகமப் புலவர் ' |
| சொற்பொழிவு : | 7 - 00 | சிவத்திரு. பசுபதீசுவர சிவாசாரியார், |
| | | அருள்மிகு மகாலிங்க சுவாமி திருக்கோயில் திருவிடைமருதூர் |
| | | " வேதாகமங்களில் வாழ்வியல் " |
| | 8 - 00 | திரு தியாக. கனகசபை, M A., B. Ed., |
| | | ஆசிரியர், தி. ஆ. அ. தே. நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர் |
| | | " தன் வரலாறு கூறும் தம்பிரான் தோழர் " |
| மகிழ்வுரை : | 8 - 20 | திரு M. பாலச்சந்திரன், M. A., B. Ed., |
| | | தலைமை ஆசிரியா ஆதீனம் நடுநிலைப்பள்ளி, திருவாவடுதுறை |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி : | இரவு 8 - 30 | " நாதஸ்வர இன்னிசை " |
| | | திரு. T. R. காளிதாஸ் குழுவினர் |
| | | திருமங்கலக்குடி |

**ஆறாம் திருநாள் 12 — 1 — 97 ஞாயிற்றுக்கிழமை**

| | | |
|---|---|---|
| மாலை மணி | 6 - 00 | திரு. அப்புலிங்க ஓதுவார், |
| திருமுறை விண்ணப்பம் : | | திருமுறைப் பணியாளர், திருவாவடுதுறை ஆதீனம் |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள், திருவாவடுதுறை |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. V. பூவலிங்கம், M. A., கோட்டாட்சியர் மயிலாடுதுறை. 'வேதாகம சிரோன்மணி' |
| சொற்பொழிவு : | 7 - 00 | திரு. N. சீநிவாசன், வடமொழி ஆராட்சியாளர் சரசுவதி மகால் — தஞ்சாவூர் "வாழ்க்கை நெறி புகட்டும் புராணங்கள்" |
| | 8 - 00 | திரு. M. ஞானமூர்த்தி, M. A., B. Ed., தமிழாசிரியர், தி. ஆ. மேனிலைப்பள்ளி. திருவிடைமருதூர். "சுந்தரர் தேவாரத்தில் உலகியல்" |
| மகிழ்வுரை : | 8 - 20 | திரு. K. முருகையன், M. A., M. Ed., |
| குருமரபு வாழ்த்து | 8 - 30 | தலைமை ஆசிரியர், தி. ஆ. அ. தே. நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர் |

கலை நிகழ்ச்சி இரவு 8 - 30 பல்சுவை நிகழ்ச்சிகள் :

திருவாவடுதுறை ஆதீனம்

மேனிலைப்பள்ளி ஆசிரியர்களும், மாணவர்களும்

திருவிடைமருதூர்.

| | | |
|---|---|---|
| மாலை மணி | 6 - 00 | "திருமுறைக் கலாநிதி" |
| திருமுறை விண்ணப்பம் : | | திரு சொக்கலிங்க தேசிகர், திருமுறைப் பணியாளர், அருள்மிகு மாயூரநாதசுவாமி திருக்கோயில், மயிலாடுதுறை |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு. காசி விசுவநாதத் தம்பிரான் சுவாமிகள் திருவெண்ணெய்நல்லூர் |
| சிறப்புரை : | 6 - 40 | திரு K. ராதாகிருஷ்ணன். B. A., முதுநிலை மேலாளர் வட்டார அலுவலகம், இந்தியன் வங்கி குடந்தைகோணம். |
| சொற்பொழிவு : | 7 - 00 | முனைவர். திரு சு. திருநாவுக்கரசு, M. A., Ph.D., முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, மயிலம் "தொழுவாரைத் தொழுமின்களே" |
| | 8 - 00 | திரு R நடராஜசுந்தரம், M. A., B. Ed., தமிழாசிரியர், தி. ஆ. நடுநிலைப்பள்ளி, திருவாவடுதுறை. "சுந்தரர் தேவாரத்தின் அற்புதச் செயல்கள்" |
| மகிழ்வுரை : | 8 - 20 | திரு. வை. சிவராமன், M. A., B Sc, M. Ed., தலைமையாசிரியர், தி. ஆ. மேனிலைப்பள்ளி திருவிடைமருதூர் |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |
| கலை நிகழ்ச்சி : | இரவு 8 - 30 | "இன்னிசை" மயிலாடுதுறை. "கான இசைமணி" செல்வி சங்கீதா சிவகுமார் குழுவினர். |

எட்டாம் திருநாள் — 14 — 1 — 97 — செவ்வாய்க்கிழமை

| | | |
|---|---|---|
| மாலை மணி | 6 - 00 | " கலைமாமணி " |
| திருமுறை விண்ணப்பம் : | | திரு. ந. சோமசுந்தர ஓதுவார், திருமுறைப் பணியாளர், அருள்மிகு ஆத்மநாதசுவாமி திருக்கோயில். திருப்பெருந்துறை. |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு. மாசிலாமணித் தம்பிரான் சுவாமிகள் புளியங்குடி |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. S. சுந்தரம், அஞ்சல்துறை கண்காணிப்பாளர், மயிலாடுதுறை |
| சொற்பொழிவு : | 7 - 00 | பேராசிரியர் வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் பொறையார். |
| | | " நீரே பழிப்பட்டீர் " |
| | 8 - 00 | திரு. சு. நாராயணசுவாமி, M. A., M. Ed., ஆசிரியர், தி. ஆ. அ. தே. நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர். |
| | | " சுந்தரர் தேவாரத்தில் பக்தி நெறி " |
| மகிழ்வுரை : | 8 - 20 | திரு. S. ஆடியபாதம், |
| குருமரபு வாழ்த்து | 8 - 30 | அருள்திரு. நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை. |
| கலை நிகழ்ச்சி இரவு | 8 - 30 | " இன்னிசை " திரு. கோமல் சங்கரன் குழுவினர் மயிலாடுதுறை. |

| | | |
|---|---|---|
| மாலை மணி | 5 - 30 | "தேவார இசைமணி" |
| திருமுறை விண்ணப்பம் : | | திரு. சு. சம்பந்த தேசிகர், திருமுறைப் பணியாளர், அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில் திருவிடைமருதூர். |
| வரவேற்புரை : | 6 - 00 | தவத்திரு. சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள், திருவாவடுதுறை. |
| | 6 - 10 | சீர்மிகு இளைய சந்நிதானம் அவர்கள் அருள்திரு முன்னர் |
| சிறப்புரை & விழாமலர் வெளியீடு | | திரு. V. சௌரிமுத்து, B. A., B. L., இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை மயிலாடுதுறை. திருமந்திரம் 5, 6 தந்திரங்கள் (பஞ்சாட்சரதீப உரையுடன்) |
| முதற்படி பெற்று ஏற்புரை: | 6 - 40 | திரு. N. M. இராமலிங்கம், தொழிலதிபர் முன்னாள் நகர் மன்றத் துணைத்தலைவர், கும்பகோணம் |
| சொற்பொழிவு : | 7 - 00 | முனைவர். திரு. இரா. செல்வகணபதி, M. A., Ph.D., மயிலாடுதுறை. |
| | 8 - 00 | "ஊனுயிர் வேறு செய்தான்" திரு சி. மகாலிங்கம், M. A., B. Ed., தலைமைத் தமிழாசிரியர், ஆதீனம் மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர். |
| மகிழ்வுரை : | 8 - 20 | "சுந்தரர் தேவாரத்தில் திருவைந்தெழுத்து" |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | திரு ஆதி. முருகவேள், M. A., ஆதீனப் புலவர், திருச்சி. |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி : | இரவு 8 - 30 | ஆதீன இசைப்புலவர் சீர்காழி. டாக்டர் திரு. ஜி. சிவசிதம்பரம் M. D., குழுவினர் -இன்னிசை |

**பத்தாம் திருநாள்** **16 — 1 — 97** **வியாழக்கிழமை**

காலை மணி 8 - 30 அருள்திரு நமசிவாயமூர்த்திகள் தோத்திர நூல்கள் பாராயணம்.

10 - 30 மகா குருபூசை.

11 - 00 மோதிரம் வழங்கல்

*அருள்திரு நமசிவாயமூர்த்திகள் திருச்சந்நிதியில் 1996 - ஆம் ஆண்டு பிளஸ்-2, 10 - ஆம் வகுப்புகளுக்கான அரசுப் பொதுத் தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெற்ற ஆதீனம் மேனிலைப்பள்ளி மாணவ மாணவிகளுக்கு சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் மோதிரம் வழங்கி ஆசியருளல்.*

12 - 00 மாகேசுவர பூசை.

*இரவு மணி 9 - 00* ஞானக் கொலுக் காட்சி

---

*கலை நிகழ்ச்சி இரவு 9 - 00*

'ஆதீன இசைப்புலவர்' " இசைப் பேரறிஞர் "

***திரு. குன்னக்குடி வைத்தியநாதன் குழுவினர்,***

*- வயலின் இன்னிசை*

# மகாவித்துவான் நினைவுப் பரிசு வழங்கல்

ஆதீன மகாவித்துவான் திரிசிரபுரம் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இனிய நினைவுச் சின்னமாக அவர்கள் திருவாவடுதுறையில் வசித்த வீடு இருந்த இடத்தில் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் புதியதாக அழகிய மாளிகையை அமைப்பித்து 1993-ஆம் ஆண்டு அவர்களின் நினைவு நாளில் திறப்பு விழா நிகழ்த்தியருளினார்கள்.

மேலும் அவ்வாண்டு முதல் அந்நாளில் தமிழ் மூதறிஞர் ஒருவர் சிறப்பிக்கப் பெற வேண்டும் எனத் திருவுளம் கொண்டார்கள். அவ்வண்ணம்

## ஆதீனத்தில் இந்நினைவுப் பரிசு பெற்ற மூதறிஞர்கள்

| | | |
|---|---|---|
| திருச்சி | திரு. ஆதி. முருகவேள், எம். ஏ., | 1993 |
| திருச்சி | திரு. ப. ஆறுமுகம், எம். ஏ., பி. எச்டி., | 1994 |
| மதுரை | திரு. இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) | 1995 |
| கோவை | திரு. கா. மீனாட்சிசுந்தரம், எம். ஏ., எம். எட்., பி. எச்டி., | 1996 |

இவ்வாண்டு 10—1—97 வெள்ளிக்கிழமை இரவு அருள்திரு நமசிவாயமூர்த்திகள் பூசை நிறைவில் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள், மகாவித்துவான் பிள்ளை அவர்கள் நினைவுப் பரிசாக சென்னை பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்களுக்கு 'நற்றமிழ் நாவலர் கோன்' எனும் விருதும் மோதிரமும் ரூபா இரண்டாயிரமும் வழங்கி ஆசி அருளுகின்றார்கள்.

